துன்னியபேரிருள் சூழ்ந்துலகைமூட *
மன்னியநான்மறை முற்றும்மறைந்திட *
பின்னிவ்வுலகினில் பேரிருள்நீங்க * அன்
றன்னமதானானே ! அச்சோவச்சோ
† அருமறைதந்தானே ! அச்சோவச்சோ. (கo)

தாவுகோச்சகக்கலிப்பா.

↓↓ நச்சுவார்முன்னிற்கும் நாராயணன் தன்னை *
அச்சோவருகவென்று ஆய்ச்சியுரைத்தன *
மச்சணிமாடப் புதுவைக்கோன்பட்டன்சொல் *
நிச்சலும்பாடுவார் நீள்விசும்பாள்வரே. (கக)

அடிவரவு:—பொன் செங்கமலம் பஞ்சவர் நாறிய கழல் போர் மிக்க என்னிது கண்ட துன்னிய நச்சு வட்டு.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



கூ - ஆந் திருமொழி - வட்டுநடுவே.



கண்ணனை முதுகிற்கட்டிக்கோள்ளும்படி அழைத்தல்.

வெண்டளையால்வந்த கலித்தாழிசை. (உசேனிராகம்-ரூபகதாளம்.)

↓↓ வட்டுநடுவே வளர்கின்ற * மாணிக்க
மொட்டு ‡ நுனையில் முளைக்கின்றமுத்தேபோல் *
சொட்டுச்சொட்டென்னத் துளிக்கத்துளிக்க * என்
குட்டன்வந்தென்னைப்புறம்புல்குவான்
கோவிந்தனென்னைப்புறம்புல்குவான். (க)

§ கிங்கிணிகட்டிக் கிறிகட்டி * கையினில்
கங்கணமிட்டுக் கழுத்தில்தொடர்கட்டி *
தன்கணத்தாலே சதிராநடந்துவந்து *
என்கண்ணனென்னைப்புறம்புல்குவான்
எம்பிரானென்னைப்புறம்புல்குவான். (உ)

கத்தக்கதித்துக் கிடந்தபெருஞ்செல்வம் *
ஒத்துப்பொருந்திக்கொண்டு உண்ணாதுமண்ணாள்வான் *
கொத்துத்தலைவன் குடிகெடத்தோன்றிய *
அத்தன்வந்தென்னைப்புறம்புல்குவான்
ஆயர்களேறென்புறம்புல்குவான். (ங)

† 'ஆர்மறை' என்னும் பாடம் வெண்டளைக்குச் சேரும்.
‡ 'துனியில்' என்றும் கூறுவர். § 'கிண்கிணி' எனவுஞ் சொல்லுவர்.

நாந்தகமேந்திய நம்பிசரணென்று *
தாழ்ந்ததனஞ்சயற்காகி * தரணியில்
வேந்தர்களுட்க விசயன்மணித்திண்டேர் *
ஊர்ந்தவனென்னைப்புறம்புல்குவான்
உம்பர்கோனென்னைப்புறம்புல்குவான். (ச)

வெண்கலப்பத்திரம் கட்டிவிளையாடி *
கண்பல †செய்த கருந்தழைக்காவின்கீழ் *
பண்பலபாடிப் பல்லாண்டிசைப்ப * பண்டு
மண்பலகொண்டான்புறம்புல்குவான்
வாமனனென்னைப்புறம்புல்குவான். (ரு)

சத்திரமேந்தித் தனியொருமாணியாய் *
உத்தரவேதியில் நின்றவொருவனை *
‡ கத்திரியர்காணக் காணிமுற்றுங்கொண்ட *
பத்திராகாரன்புறம்புல்குவான்
பாரளந்தானென்புறம்புல்குவான். (சு)

பொத்தவுரலைக்கவிழ்த்து அதன்மேலேறி *
தித்தித்தபாலும் தடாவினில்வெண்ணெயும் *
மெத்தத்திருவயிறார விழுங்கிய *
அத்தன்வந்தென்னைப்புறம்புல்குவான்
ஆழியானென்னைப்புறம்புல்குவான். (எ)

மூத்தவைகாண முதுமணற்குன்றேறி *
கூத்துவந்தாடிக் குழலாலிசைபாடி *
வாய்த்தமறையோர் வணங்க * இமையவர்
ஏத்தவந்தென்னைப்புறம்புல்குவான்
எம்பிரானென்னைப்புறம்புல்குவான். (அ)

கற்பகக்காவு கருதியகாதலிக்கு *
இப்பொழுதீவனென்று இந்திரன்காவினில் *
நிற்பனசெய்து நிலாத்திகழ்முற்றத்துள் *
உய்த்தவனென்னைப்புறம்புல்குவான்
உம்பர்கோனென்னைப்புறம்புல்குவான். (கூ)

† 'பெய்த' என்றும், 'பெய்து' என்றும் பாடம்.
‡ 'கத்திரிவர்' என்று அத்யாபகபாடம்.

தரவுகொச்சகக்கலிப்பா.

↓↓ ஆய்ச்சியன்றாழிப்பிரான் புறம்புல்கிய *
வேய்த்தடந்தோளிசொல் விட்டுசித்தன்மகிழ்ந்து *
ஈத்ததமிழிவை ஈரைந்தும்வல்லவர் *
வாய்த்தநன்மக்களைப்பெற்று மகிழ்வரே. (க0)

அடிவரவு:—வட்டு கிங்கிணி கத்த நாந்தகம் வெண்கலம் சத்திரம் பொத்த மூத்தவை கற்பகம் ஆய்ச்சி மெச்சூது.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## இரண்டாம்பத்து.

## க - ஆந் திருமொழி - மெச்சூது.



### பூச்சிகாட்டி விளையாடுதல்.

கலித்தாழிசை. (பந்துவராளிராகம் - ரூபகதாளம்.)

↓↓ மெச்சூதுசங்கமிடத்தான் நல்வேயூதி *
பொய்ச்சூதில்தோற்ற பொறையுடைமன்னர்க்காய் *
பத்தூர்பெறாதன்று பாரதம்கைசெய்த *
அத்தூதனப்பூச்சிகாட்டுகின்றான்
அம்மனே! அப்பூச்சிகாட்டுகின்றான். (க)

மலைபுரைதோள்மன்னவரும் மாரதரும்மற்றும் *
பலர்குலைய நூற்றுவரும்பட்டழிய * பார்த்தன்
சிலைவளையத் திண்தேர்மேல்முன்னின்ற * செங்கண்
அலவலைவந்தப்பூச்சிகாட்டுகின்றான்
அம்மனே! அப்பூச்சிகாட்டுகின்றான். (உ)

காயுநீர்புக்குக் கடம்பேறி * காளியன்
தீயபணத்தில் சிலம்பார்க்கப்பாய்ந்தாடி *
வேயின்குழலூதி வித்தகனாய்நின்ற *
ஆயன்வந்தப்பூச்சிகாட்டுகின்றான்
அம்மனே! அப்பூச்சிகாட்டுகின்றான். (௩)

இருட்டில்பிறந்துபோய் ஏழைவல்லாயர் *
மருட்டைத்தவிர்ப்பித்து வன்கஞ்சன்மாளப்
புரட்டி * அந்நாளெங்கள் பூம்பட்டுக்கொண்ட *
அரட்டன்வந்தப்பூச்சிகாட்டுகின்றான்
அம்மனே! அப்பூச்சிகாட்டுகின்றான். (௪)

சேப்பூண்ட சாடுசிதறி * திருடிநெய்க்
காப்பூண்டு நந்தன்மனைவிகடைதாம்பால் *
சோப்பூண்டு துள்ளித்துடிக்கத்துடிக்க * அன்
ருப்பூண்டானப்பூச்சிகாட்டுகின்ருன்
அம்மனே! அப்பூச்சிகாட்டுகின்ருன். (ரு)

செப்பிளமென்முலைத் தேவகிநங்கைக்கு *
சொப்படத்தோன்றித் தொறுப்பாடியோம்வைத்த *
துப்பமும்பாலும் தயிரும்விழுங்கிய *
அப்பன்வந்தப்பூச்சிகாட்டுகின்ருன்
அம்மனே! அப்பூச்சிகாட்டுகின்ருன். (சு)

தத்துக்கொண்டாள்கொலோ? தானேபெற்ருள்கொலோ? *
சித்தமனையாள் அசோதையிளஞ்சிங்கம் *
கொத்தார்கருங்குழல் கோபாலகோளரி *
அத்தன்வந்தப்பூச்சிகாட்டுகின்ருன்
அம்மனே! அப்பூச்சிகாட்டுகின்ருன். (எ)

கொங்கை வன்கூனிசொற்கொண்டு * குவலயத்
துங்கக்கரியும் பரியுமிராச்சியமும் *
எங்கும்பரதற்கருளி வன்கானடை *
அங்கண்ணனப்பூச்சிகாட்டுகின்ருன்
அம்மனே! அப்பூச்சிகாட்டுகின்ருன் (அ)

பதகமுதலைவாய்ப் பட்டகளிறு *
கதறிக்கைகூப்பி என்கண்ணா! கண்ணா! வென்ன *
உதவப்புள்ளூர்ந்து அங்குறுதுயர்தீர்த்த *
அதகன்வந்தப்பூச்சிகாட்டுகின்ருன்
அம்மனே! அப்பூச்சிகாட்டுகின்ருன். (கூ)

தரவுகொச்சகக்கலிப்பா.

✝✝ வல்லாளிலங்கைமலங்கச் சரந்துரந்த *
வில்லாளனை விட்டுசித்தன் † விரித்த *
சொல்லார்ந்தவப்பூச்சிப்பாட லிவைபத்தும்
வல்லார்போய் * வைகுந்தம் மன்னியிருப்பரே. (க0)

**அடிவரவு:**—மெச்சு மலை காயும் இருட்டு சேப்பூண்ட செப்பு தத்துகொங்கை பதகம் வல்லாள் அரவணையாய்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'விரித்தன' என்ற பாடம் வெண்டளைக்குச் சேரும்.

## உ - ஆந் திருமொழி - அரவணையாய்.

### கண்ணனை முலையுண்ண அழைத்தல்.

கலிவிருத்தம். (புன்னாகவராளிராகம் - ரூபகதாளம்.)

⸸⸸ அரவணையாய்! ஆயரேறே! அம்மமுண்ணத் துயிலெழாயே *
இரவுமுண்ணாதுறங்கிநீபோய் இன்றுமுச்சிகொண்டதாலோ! *
வரவுங்காணேன்வயிறசைந்தாய் வனமுலைகள்சோர்ந்துபாய *
திருவுடையவாய்மடுத்துத் திளைத்துதைத்துப்பருகிடாயே. (க)

வைத்தநெய்யுங்காய்ந்தபாலும் வடிதயிரும்நறுவெண்ணெயும் *
இத்தனையும்பெற்றறியேன் எம்பிரான்! நீபிறந்தபின்னை *
எத்தனையுஞ்செய்யப்பெற்றாய் ஏதுஞ்செய்யேன்கதம்படாதே *
முத்தனையமுறுவல்செய்து மூக்குறிஞ்சிமுலையுணாயே. (உ)

தந்தம்மக்களழுதுசென்றால் தாய்மாராவார்தரிக்ககில்லார் *
வந்துநின்மேல்பூசல்செய்ய வாழவல்லவாசுதேவா! *
உந்தையாருன்திறத்தரல்லர் உன்னைநானொன்றுரப்பமாட்டேன் *
நந்தகோபனணிசிறுவா! நான்சுரந்தமுலையுணாயே. (௩)

கஞ்சன்தன்னால்புணர்க்கப்பட்ட கள்ளச்சகடுகலக்கழிய *
பஞ்சியன்னமெல்லடியால் பாய்ந்தபோதுநொந்திடுமென்று *
அஞ்சினேன்காண்அமரர்கோவே! ஆயர்கூட்டத்தளவன்றாலோ *
கஞ்சனையுன்வஞ்சனையால் வலைப்படுத்தாய்! முலையுணாயே. (௪)

தீயபுந்திக்கஞ்சனுன்மேல் சினமுடையன்,சோர்வுபார்த்து *
மாயந்தன்னால்வலைப்படுக்கில் வாழகில்லேன்வாசுதேவா! *
தாயர்வாய்ச்சொல்கருமங்கண்டாய் சாற்றிச்சொன்னேன்போகவேண்டா *
ஆயர்பாடிக்கணிவிளக்கே! அமர்ந்துவந்தென்முலையுணாயே. (௫)

மின்னனையநுண்ணிடையார் விரிகுழல்மேல்நுழைந்தவண்டு *
இன்னிசைக்கும்வில்லிபுத்தூர் இனிதமர்ந்தாய்! * உன்னைக்கண்டார்
என்னநோன்புநோற்றாள்கொலோ இவனைப்பெற்றவயிறுடையாள்! *
என்னும்வார்த்தையெய்துவித்த இருடீகேசா! முலையுணாயே. (௬)

பெண்டிர்வாழ்வார் நின்னொப்பாரைப் பெறுதுமென்னுமாசையாலே *
கண்டவர்கள்போக்கொழிந்தார் கண்ணிணையால்கலக்கநோக்கி *
வண்டுலாம்பூங்குழலினார் உன்வாயமுதமுண்ணவேண்டி *
கொண்டுபோவான்வந்துநின்றார் கோவிந்தா! நீமுலையுணாயே. (௭)

இருமலைபோலெதிர்ந்தமல்லர் இருவரங்கமெரிசெய்தாய் * உன்
திருமலிந்துதிகழ்மார்வு தேக்கவந்தென்னல்குலேறி *
ஒருமுலையைவாய்மடுத்து † ஒருமுலையைநெருடிக்கொண்டு *
இருமுலையும்முறைமுறையா யேங்கியேங்கியிருந்துணாயே. (அ)

அங்கமலப்போதகத்தில் அணிகொள்முத்தம்சிந்தினாற்போல் *
செங்கமலமுகம்வியர்ப்பத் தீமைசெய்திம்முற்றத்தூடே *
அங்கமெல்லாம்புழுதியாக அளையவேண்டாஅம்ம! * விம்ம
அங்கமரர்க்கமுதளித்த அமரர்கோவே! முலையுணாயே. (௯)

ஓடவோடக்கிண்கிணிகள் ஒலிக்குமோசைப்பாணியாலே *
பாடிப்பாடிவருகின்றாயைப் பற்பநாபனென்றிருந்தேன் *
ஆடியாடியசைந்தசைந்திட்டு அதனுக்கேற்றகூத்தையாடி *
ஓடியோடிப்போய்விடாதே உத்தமா! நீமுலையுணாயே. (௧௦)

↓↓ வாரணிந்தகொங்கையாய்ச்சி மாதவாவுண்ணென்றமாற்றம் *
நீரணிந்தகுவளைவாசம் நிகழநாறும்வில்லிபுத்தூர் *
பாரணிந்ததொல்புகழான் பட்டர்பிரான்பாடல்வல்லார் *
சீரணிந்தசெங்கண்மால்மேல் சென்றசிந்தைபெறுவர்தாமே. (௧௧)

அடிவரவு:—அரவணை வைத்த தந்தம் கஞ்சன் தீய மின் பெண்டிர் இருமலை அங்கமலம் ஓட வாரணிந்த போய்ப்பாடு.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௬ - ஆந் திருமொழி - போய்ப்பாடு.



துவாதசநாம மாஹாத்மியம்: காதுகுத்தல்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (அசாவேரிராகம் - ஆதிதாளம்.)

↓↓ போய்ப்பாடுடையநின்தந்தையும்தாழ்த்தான்
பொருதிறற்கஞ்சன்கடியன் *
காப்பாருமில்லைகடல்வண்ணா! உன்னைத்
தனியேபோயெங்கும்திரிதி *
பேய்ப்பால்முலையுண்டபித்தனே!
கேசவநம்பீ! உன்னைக்காதுகுத்த *
ஆய்ப்பாலர்பெண்டுகளெல்லாரும்வந்தார்
அடைக்காய்திருத்திநான்வைத்தேன். (௧)

† 'ஒருமுலைகை நெருடிக்கொண்டு' என்னும் பாடம் வ்யாக்யாநத்தோடு நன்கு பொருந்தும்.

வண்ணப்பவளமருங்கினிற்சாத்தி
மலர்ப்பாதக்கிண்கிணியார்ப்ப *
நண்ணித்தொழுமவர்சிந்தைபிரியாத
நாராயணா ! இங்கேவாராய் *
எண்ணற்கரியபிரானே ! திரியை
யெரியாமேகாதுக்கிடுவன் *
கண்ணுக்குநன்றுமழகுமுடைய
கனகக்கடிப்புமிவையா ! (உ)

வையமெல்லாம்பெறும்வார்கடல்வாழும்
மகரக்குழைகொண்டுவைத்தேன் *
வெய்யவேகாதில்திரியையிடுவன்
நீவேண்டியதெல்லாம்தருவன் *
உய்யவிவ்வாயர்குலத்தினில்தோன்றிய
ஒண்சுடராயர்கொழுந்தே ! *
மையன்மைசெய்திளவாய்ச்சியருள்ளத்து
மாதவனே ! இங்கேவாராய். (௩)

வணநன்றுடையவயிரக்கடிப்பிட்டு
வார்காதுதாழப்பெருக்கி *
குணநன்றுடையரிக்கோபாலபிள்ளைகள்
கோவிந்தா ! நீசொல்லுக்கொள்ளாய் *
இணைநன்றழகியவிக்கடிப்பிட்டால்
இனியபலாப்பழம்தந்து *
சுணநன்றணிமுலையுண்ணத்தருவன்நான்
சோத்தம்பிரான் ! இங்கேவாராய். (௪)

சோத்தம்பிரானென்றிரந்தாலும்கொள்ளாய்
சுரிகுழலாரொடுநீபோய் *
கோத்துக்குரவைபிணைந்திங்குவந்தால்
குணங்கொண்டிடுவனோநம்பீ ! *
பேர்த்தும்பெரியனவப்பம்தருவன்
பிரானே ! திரியிடவொட்டில் *
வேய்த்தடந்தோளார்விரும்புகருங்குழல்
விட்டுவே ! நீயிங்கேவாராய். (௫)

விண்ணெல்லாம்கேட்கவழுதிட்டாய்
உன்வாயில்விரும்பியதனைநான்நோக்கி *
மண்ணெல்லாம்கண்டென்மனத்துள்ளேயஞ்சி
மதுசூதனேயென் †றிருந்தேன் *

† 'அறிந்தேன்' என்ற பாடம் வ்யாக்யானத்துக்கு ஒக்கும்.

புண்ணேதுமில்லையுன்காதுமறியும்
பொறுத்திறைப்போதிருநம்பீ! *
கண்ணா! என்கார்முகிலே!
கடல்வண்ணா! காவலனே! முலையுணாயே. (௬)

முலையேதும்வேண்டேனென்றோடி
நின்காதில்கடிப்பைப்பறித்தெறிந்திட்டு *
மலையையெடுத்துமகிழ்ந்துகன்மாரிகாத்துப்
பசுநிரைமேய்த்தாய்! *
சிலையொன்றிறுத்தாய்! திரிவிக்கிரமா!
திருவாயர்பாடிப்பிரானே! *
தலைநிலாப்போதேயுன்காதைப்பெருக்காதே
விட்டிட்டேன்குற்றமேயன்றே. (௭)

என்குற்றமேயென்றுசொல்லவும்வேண்டாகாண்
என்னைநான்மண்ணுண்டேனாக *
அன்புற்றுநோக்கியடித்தும்பிடித்தும
அனைவர்க்கும்காட்டிற்றிலையே *
வன்புற்றரவின்பகைக்கொடி வாமனநம்பீ!
உன்காதுகள்தூரும் *
துன்புற்றனவெல்லாம்தீர்ப்பாய்பிரானே!
திரியிட்டுச்சொல்லுகேன்மெய்யே. (௮)

மெய்யென்றுசொல்லுவார்சொல்லைக்கருதித்
தொடுப்புண்டாய்வெண்ணெயையென்று *
கையைப்பிடித்துக்கரையுரலோடென்னைக்
காணவேகட்டிற்றிலையே *
செய்தனசொல்லிச்சிரித்தங்கிருக்கில்
சிரீதரா! உன்காதுதூரும் *
கையில்திரியையிடுகிடாய் இந்நின்ற
காரிகையார்சிரியாமே. (௯)

காரிகையார்க்குமுனக்குமிழுக்குற்றென்
காதுகள்வீங்கியெறியில் *
தாரியாதாகில்தலைநொந்திடுமென்று
விட்டிட்டேன்குற்றமேயன்றே *

சேரியில்பிள்ளைகளெல்லாரும் காது
பெருக்கித்திரியவும்காண்டி *
ஏர்விடைசெற்றிளங்கன்றெறிந்திட்ட
இருடீகேசா! என்தன்கண்ணே! (௧௦)

கண்ணைக்குளிரக்கலந்தெங்கும்நோக்கிக்
கடிகமழ்பூங்குழலார்கள் *
எண்ணத்துளென்றுமிருந்து தித்திக்கும்
பெருமானே! எங்களமுதே *
உண்ணக்கனிகள்தருவன் கடிப்பொன்றும்
நோவாமேகாதுக்கிடுவன் *
பண்ணைக்கிழியச்சகடமுதைத்திட்ட
பற்பநாபா! இங்கேவாராய். (௧௧)

வாவென்றுசொல்லியென்கையைப்பிடித்து
வலியவேகாதில்கடிப்பை *
நோவத் † திரிக்கிலுனக்கிங்கிழுக்குற்றென்
காதுகள்நொந்திடுங்கில்லேன் *
நாவற்பழங்கொண்டுவைத்தேன்
இவை ‡ காணாய்நம்பீ! * முன்வஞ்சமகளைச்
சாவப்பாலுண்டுசகடிறப்பாய்ந்திட்ட
தாமோதரா! இங்கேவாராய். (௧௨)

↓↓ வார்காதுதாழப்பெருக்கியமைத்து
மகரக்குழையிடவேண்டி *
சீராலசோதைதிருமாலைச்சொன்னசொல்
சிந்தையுள்நின்றுதிகழ *
பாரார்தொல்புகழான்புதுவைமன்னன்
பன்னிருநாமத்தாற்சொன்ன *
ஆராதவந்தாதிபன்னிரண்டும்வல்லார்
அச்சுதனுக்கடியாரே. (௧௩)

அடிவரவு:—போய் வண்ணம் வையம் வணம் சோத்தம் விண் முலை என் மெய் காரிகை கண்ணை வா வார்காது வெண்ணெயளைந்த.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



---

† 'தரிக்கில்' என்றும் பாடம். ‡ 'ஆணாய்' என்று சிலர்க்குப் பாடம்.

## ச - ஆந் திருமொழி - வெண்ணெயளைந்த.

### கண்ணனை நீராட அழைத்தல்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பிலஹரிராகம்-ஜம்பைதாளம்.)

† வெண்ணெயளைந்தகுணுங்கும் விளையாடுபுழுதியும்கொண்டு *
திண்ணெனவிவ்விராவுன்னைத் தேய்த்துக்கிடக்கநானொட்டேன் *
எண்ணெய்புளிப்பழங்கொண்டு இங்கெத்தனைபோதுமிருந்தேன் *
நண்ணலரியபிரானே ! நாரணா ! நீராடவாராய். (க)

கன்றுகளோடச்செவியில் கட்டெறும்புபிடித்திட்டால் *
தென்றிக்கெடுமாகில் வெண்ணெய்திரட்டிவிழுங்குமாகாண்பன் *
நின்றமராமரம்சாய்த்தாய் ! நீபிறந்ததிருவோணம் *
இன்று, நீநீராடவேண்டும் எம்பிரான் ! ஓடாதேவாராய். (உ)

பேய்ச்சிமுலையுண்ணக்கண்டு பின்னையும்நில்லாதென்னெஞ்சம *
ஆய்ச்சியரெல்லாருங்கூடி அழைக்கவும் நான்முலைதந்தேன் *
காய்ச்சினநீரொடுநெல்லி கடாரத்தில்பூரித்துவைத்தேன் *
வாய்த்தபுகழ்மணிவண்ணா ! மஞ்சனமாடநீவாராய். (௩)

கஞ்சன்புணர்ப்பினில்வந்த கடியசகடமுதைத்து *
வஞ்சகப்பேய்மகள்துஞ்ச வாய்முலைவைத்தபிரானே ! *
மஞ்சளும்செங்கழுநீரின் வாசிகையும் நாறுசாந்தும் *
அஞ்சனமும்கொண்டுவைத்தேன் அழகனே ! நீராடவாராய். (ச)

அப்பம்கலந்த ‡ சிற்றுண்டி அக்காரம்பாலிற்கலந்து *
சொப்படநான்சுட்டுவைத்தேன் தின்னலுறுதியேல்நம்பி ! *
செப்பிளமென்முலையார்கள் சிறுபுறம்பேசிச்சிரிப்பர் *
சொப்படநீராடவேண்டும் சோத்தம்பிரான்! இங்கேவாராய். (௫)

எண்ணெய்க்குடத்தையுருட்டி இளம்பிள்ளைகிள்ளியெழுப்பி *
கண்ணைப்புரட்டிவிழித்துக் § கழகண்டுசெய்யும்பிரானே ! *
உண்ணக்கனிகள்தருவன் ஒலிகடலோதநீர்போலே *
வண்ணமழகியநம்பீ ! மஞ்சனமாடநீவாராய். (௬)

கறந்தநற்பாலும்தயிரும் கடைந்துறிமேல்வைத்தவெண்ணெய் *
பிறந்ததுவேமுதலாகப் பெற்றறியேன்எம்பிரானே ! *
சிறந்தநற்றாயலர்தூற்றும் என்பதனால்பிறர்முன்னே *
மறந்துமுரையாடமாட்டேன் மஞ்சனமாடநீவாராய். (௭)

---

† இந்தப் பத்துப்பாசுரங்களும் திருமஞ்சனகாலத்தில் ஸேவிக்கப்படுவன.
‡ 'சிற்றுண்டை' என்றும் பாடம். § 'கழைகண்டு' என்று சிலர்.

கன்றினைவாலோலைகட்டிக் கனிகளுதிரவெறிந்து * [லும் *
பின்தொடர்ந்தோடியோர்பாம்பைப் பிடித்துக்கொண்டாட்டினாய்போ
நின்திறத்தேனல்லேன்நம்பி ! நீபிறந்ததிருநன்னாள் *
நன்றுநீநீராடவேண்டும் நாரணா ! ஓடாதேவாராய். (அ)

பூணித்தொழுவினில்புக்குப் புழுதியளைந்தபொன்மேனி *
காணப்பெரிதுமுகப்பன் ஆகிலும்கண்டார்பழிப்பர் *
நாணெத்தனையுமிலாதாய் ! நப்பின்னைகாணிற்சிரிக்கும் *
மாணிக்கமே ! என்மணியே ! மஞ்சனமாடநீவாராய். (௯)

↓↓ கார்மலிமேனி † நிறத்துக் கண்ணபிரானையுகந்து *
வார்மலிகொங்கையசோதை மஞ்சனமாட்டியவாற்றை *
பார்மலிதொல்புதுவைக்கோன் பட்டர்பிரான்சொன்னபாடல் *
சீர்மலிசெந்தமிழ்வல்லார் தீவினையாதுமிலரே. (௧0)

அடிவரவு:—வெண்ணெய் கன்று பேய்ச்சி கஞ்சன் அபபம் எண்ணெய் கறந்த
கன்றினை பூணி கார் பின்னை.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆந் திருமொழி - பின்னைமணாளனை.



குழல்வாரக் காக்கையை வாவெனல்.

கலித்தாழிசை. (மத்யமாவதிராகம் - ருபகதாளம்.)

↓↓ பின்னைமணாளனைப் பேரிற்கிடந்தானை *
முன்னையமரர் முதல்தனிவித்தினை *
என்னையும் எங்கள்குடிமுழுதாட்கொண்ட *
மன்னனைவந்துகுழல்வாராயக்காக்காய் !
மாதவன்தன்குழல்வாராயக்காக்காய். (௧)

பேயின்முலையுண்ட பிள்ளையிவன்முன்னம் *
மாயச்சகடும் மருதுமிறுத்தவன் *
காயாமலர்வண்ணன் கண்ணன்கருங்குழல் *
தூய்தாகவந்துகுழல்வாராயக்காக்காய் !
தூமணிவண்ணன்குழல்வாராயக்காக்காய். (௨)

† 'நிறத்தன்' என்றும் பாடம்.

திண்ணக்கலத்தில் திரையுறிமேல்வைத்த *
வெண்ணெய்விழுங்கி † விரையஉறங்கிடும் *
அண்ணல் அமரர்பெருமானை * ஆயர்தம்
கண்ணனைவந்துகுழல்வாராயக்காக்காய்!
கார்முகில்வண்ணன்குழல்வாராயக்காக்காய். (ரு)

பள்ளத்தில்மேயும் பறவையுருக்கொண்டு *
கள்ளவசுரன்வருவானைத் தான்கண்டு *
புள்ளிதுவென்று பொதுக்கோவாய்கீண்டிட்ட *
பிள்ளையைவந்துகுழல்வாராயக்காக்காய்!
பேய்முலையுண்டான்குழல்வாராயக்காக்காய். (சு)

கற்றினம்மேய்த்துக் கனிக்கொருகன்றினை *
பற்றியெறிந்த பரமன்திருமுடி *
உற்றனபேசி நீஓடித்திரியாதே *
அற்றைக்கும்வந்துகுழல்வாராயக்காக்காய்!
ஆழியான்தன்குழல்வாராயக்காக்காய். (ரு)

கிழக்கிற்குடிமன்னர் கேடிலாதாரை *
அழிப்பான்நினைந்திட்டு அவ்வாழியதனால் *
விழிக்குமளவிலே வேரறுத்தானை *
குழற்கணியாகக்குழல்வாராயக்காக்காய்!
கோவிந்தன் ‡ தன்குழல்வாராயக்காக்காய் (சு)

பிண்டத்திரளையும் பேய்க்கிட்டநீர்ச்சோறும் *
உண்டற்குவேண்டி நீஓடித்திரியாதே *
அண்டத்தமரர்பெருமான் அழகமர் *
வண்டொத்திருண்டகுழல்வாராயக்காக்காய்!
மாயவன்தன்குழல்வாராயக்காக்காய். (எ)

உந்தியெழுந்த உருவமலர்தன்னில *
சந்தச்சதுமுகன்தன்னைப் படைத்தவன் *
கொந்தக்குழலைக் குறந்து § புளியட்டி *
தந்தத்தின்சீப்பால்குழல்வாராயக்காக்காய்!
தாமோதரன்தன்குழல்வாராயக்கரக்காய். (அ)

மன்னன்தன்தேவிமார் கண்டுமகிழ்வெய்த *
முன்னிவ்வுலகினை முற்றுமளந்தவன் *
பொன்னின்முடியினைப் பூவணைமேல்வைத்து *
பின்னேயிருந்துகுழல்வாராயக்காக்காய்!
பேராயிரத்தான்குழலவாராயக்காக்காய். (கூ)

---

† 'விரையன்' என்பதும் பாடம். ‡ 'தண்குழல்' என்று சிலர்க்குப் பாடம்.
§ 'குறந்த' என்றும், 'புழுகட்டி' என்றும் பாடம்.

தரவுகொச்சகக்கலிப்பா

↓↓ கண்டார்பழியாமே யக்காக்காய் ! * கார்வண்ணன்
வண்டார்குழல்வார வாவென்றவாய்ச்சிசொல் *
விண்டோய்மதிள் வில்லிபுத்தூர்க்கோன்பட்டன்சொல் *
கொண்டாடிப்பாடக் குறுகாவினை † தாமே. (கo)

அடிவரவு:—பின்னை பேய் திண்ணம் பள்ளத்தில் கற்று கிழக்கில் பிண்டம் உந்தி மன்னன் கண்டார் வேலி.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆந் திருமொழி - வேலிக்கோல்.



காக்கையைக் கோல்கொண்டுவர விளம்புதல்.

கலித்தாழிசை. (தேசியராகம் - ஆதிதாளம்.)

↓↓வேலிக்கோல்வெட்டி விளையாடுவில்லேற்றி *
தாலிக்கொழுந்தைத் தடங்கழுத்திற்பூண்டு *
பீலித்தழையைப் பிணைத்துப்பிறகிட்டு *
காலிப்பின்போவாற்கோர்கோல்கொண்டுவா
கடல்நிறவண்ணற்கோர்கோல்கொண்டுவா. (க)

கொங்குங்குடந்தையும் கோட்டியூரும்பேரும் *
எங்குந்திரிந்து விளையாடுமென்மகன் *
சங்கம்பிடிக்கும் தடக்கைக்குத்தக்க * நல்
லங்கமுடையதோர்கோல்கொண்டுவா
அரக்குவழித்ததோர்கோல்கொண்டுவா. (உ)

கறுத்திட்டெதிர்நின்ற கஞ்சனைக்கொன்றான் *
பொறுத்திட்டெதிர்வந்த புள்ளின்வாய்கீண்டான் *
நெறித்தகுழல்களை நீங்கமுன்னோடி *
சிறுக்கன்றுமேய்ப்பாற்கோர்கோல்கொண்டுவா
தேவபிரானுக்கோர்கோல்கொண்டுவா. (௩)

ஒன்றேயுரைப்பான் ஒருசொல்லேசொல்லுவான் *
துன்றுமுடியான் துரியோதனன்பக்கல் *
சென்றங்குப்பாரதம் கையெறிந்தானுக்கு *
கன்றுகள்மேய்ப்பதோர்கோல்கொண்டுவா
கடல்நிறவண்ணற்கோர்கோல்கொண்டுவா. (௪)

† 'தாமே' என்பதும் பாடம்.

சீரொன்றுதூதாய்த் துரியோதனன்பக்கல் *
ஊரொன்றுவேண்டிப் பெறாதவுரோடத்தால் *
பாரொன்றிப் பாரதம்கைசெய்து * பார்த்தற்குத்
தேரொன்றையூர்ந்தாற்கோர்கோல்கொண்டுவா
தேவபிரானுக்கோர்கோல்கொண்டுவா. (ரு)

ஆலத்திலையான் அரவினணைமேலான் *
நீலக்கடலுள் நெடுங்காலம்கண்வளர்ந்தான் *
பாலப்பிராயத்தே பார்த்தற்கருள்செய்த *
கோலப்பிரானுக்கோர்கோல்கொண்டுவா
குடந்தைக்கிடந்தாற்கோர்கோல்கொண்டுவா. (சா)

பொற்றிகழ் சித்திரகூடப்பொருப்பினில் *
உற்றவடிவில் ஒருகண்ணும்கொண்ட * அக்
கற்றைக்குழலன் கடியன்விரைந்து உன்னை *
மற்றைக்கண்கொள்ளாமேகோல்கொண்டுவா
மணிவண்ணநம்பிக்கோர்கோல்கொண்டுவா. (எ)

மின்னிடைச் சீதைபொருட்டா * இலங்கையர்
மன்னன்மணிமுடி பத்துமுடன்வீழ *
தன்னிகரொன்றில்லாச் சிலைகால்வளைத்திட்ட *
மின்னுமுடியற்கோர்கோல்கொண்டுவா
வேலையடைத்தாற்கோர்கோல்கொண்டுவா. (அ)

தென்னிலங்கைமன்னன் சிரந்தோள் துணிசெய்து *
மின்னிலங்குபூண் விபீடணநம்பிக்கு *
என்னிலங்குநாமத்தளவும் அரசென்ற *
மின்னலங்காரற்கோர்கோல்கொண்டுவா
வேங்கடவாணற்கோர்கோல்கொண்டுவா. (கூ)

தரவுகொச்சகக்கலிப்பா.

↓↓ அக்காக்காய் ! நம்பிக்குக் கோல்கொண்டுவாவென்று *
மிக்காளுரைத்தசொல் வில்லிபுத்தூர்ப்பட்டன் *
ஒக்கவுரைத்த தமிழ்ப்பத்தும்வல்லவர் *
மக்களைப்பெற்று மகிழ்வரிவ்வையத்தே. (கo)

அடிவரவு:—வேலி கொங்கு கறுத்து ஒன்றே சீர் ஆலத்து பொற்றிகழ்மின் தென்னிலங்கை அக்காக்காய் ஆநிரை.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## எ - ஆந் திருமொழி - ஆநிரை.

### கண்ணனைப் பூச்சூட அழைத்தல்.

**அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (அடாணராகம் - ரூபகதாளம்.)**

† ↓↓ ஆநிரைமேய்க்கநீபோதி அருமருந்தாவதறியாய் *
கானகமெல்லாம்திரிந்து உன்கரியதிருமேனிவாட *
பானையில்பாலைப்பருகிப் பற்றுதாரெல்லாம்சிரிப்ப *
தேனிலினியபிரானே ! செண்பகப்பூச்சூட்டவாராய். (க)

கருவுடைமேகங்கள்கண்டால் உன்னைக்கண்டாலொக்கும்கண்கள் *
உருவுடையாய் ! உலகேழும்உண்டாகவந்துபிறந்தாய் ! *
திருவுடையாள்மணவாளா ! திருவரங்கத்தேகிடந்தாய் ! *
மருவிமணம்கமழ்கின்ற மல்லிகைப்பூச்சூட்டவாராய். (உ)

மச்சொடுமாளிகையேறி மாதர்கள்தம்மிடம்புக்கு *
கச்சொடுபட்டைக்கிழித்துக் காம்புதுகிலவைகீறி *
நிச்சலும்தீமைகள்செய்வாய் ! நீள்திருவேங்கடத்தெந்தாய் ! *
பச்சைத்தமனகத்தோடு பாதிரிப்பூச்சூட்டவாராய். (ங)

தெருவின்கண்நின்று இளவாய்ச்சிமார்களைத் தீமைசெய்யாதே *
மருவும்தமனகமும்சீர் மாலைமணம்கமழ்கின்ற *
புருவம்கருங்குழல்நெற்றி பொலிந்தமுகிற்கன்றுபோலே *
உருவமழகியநம்பீ ! உகந்திவைசூட்டநீவாராய். (ச)

புள்ளினைவாய்பிளந்திட்டாய் ! பொருகரியின்கொம்பொசித்தாய் !
கள்ளவரக்கியைமூக்கொடு காவலனைத்தலைகொண்டாய் ! *
அள்ளிநீவெண்ணெய்விழுங்க அஞ்சாதடியேனடித்தேன் *
தெள்ளியநீரிலெழுந்த செங்கழுநீர்சூட்டவாராய். (ரு)

எருதுகளோடுபொருதி ஏதுமுலோபாய்காண்நம்பி !
கருதியதீமைகள்செய்து கஞ்சனைக்கால்கொடுபாய்ந்தாய் ! *
தெருவின்கண்தீமைகள்செய்து சிக்கெனமல்லர்களோடு *
பொருதுவருகின்றபொன்னே ! புன்னைப்பூச்சூட்டவாராய். (சு)

குடங்களெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்லவெங்கோவே ! *
மடங்கொள்மதிமுகத்தாரை மால்செய்யவல்லவென்மைந்தா ! *
இடந்திட்டிரணியன்நெஞ்சை இருபிளவாகமுன்கீண்டாய் ! *
குடந்தைக்கிடந்தவெங்கோவே ! குருக்கத்திப்பூச்சூட்டவாராய். (எ)

† இத்தத்திருமொழி, நித்யாநுஸந்தாநத்திற் சேர்ந்தது.

சீமாலிகனவனோடு தோழமைகொள்ளவும்வல்லாய்! *
சாமாறவனைநீயெண்ணிச் சக்கரத்தால்தலைகொண்டாய்! *
ஆமாறறியும்பிரானே! அணியரங்கத்தேகிடந்தாய்! *
ஏமாற்றமென்னைத்தவிர்த்தாய்! இருவாட்சிப்பூச்சூட்டவாராய். (அ)

அண்டத்தமரர்கள்சூழ அத்தாணியுள்ளங்கிருந்தாய்! *
தொண்டர்கள்நெஞ்சிலுறைவாய்! தூமலராள்மணவாளா! *
உண்டிட்டுலகினையேழும் ஓராலிலையில்துயில்கொண்டாய்! *
கண்டுநானுன்னையுகக்கக் கருமுகைப்பூச்சூட்டவாராய். (கூ)

செண்பகமல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி *
எண்பகர்பூவும்கொணர்ந்தேன் இன்றிவைசூட்டவாவென்று *
மண்பகர்கொண்டானை ஆய்ச்சிமகிழ்ந்துரைசெய்தவிம்மாலை *
பண்பகர்வில்லிபுத்தூர்க்கோன் பட்டர்பிரான்சொன்னபத்தே. (கய)

அடிவரவு:—ஆநிரை கரு மச்சொடு தெருவின்கண் புள்ளினை எருதுகளோடு குடங்கள் சீமாலிகன் அண்டத்து செண்பகம் இந்திரன்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## அ - ஆந் திருமொழி - இந்திரனோடு.



க்ருஷ்ணனை த்ருஷ்டிதோஷம்வராதபடி திருவந்திக்காப்பிட அழைத்தல்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தோடிராகம் - ரூபகதாளம்.)

†↓↓ இந்திரனோடுபிரமன் ஈசனிமையவரெல்லாம் *
மந்திரமாமலர்கொண்டு மறைந்துவராய்வந்துநின்றார் *
சந்திரன்மாளிகைசேரும் சதுரர்கள்வெள்ளறைநின்றாய்! *
அந்தியம்போதிதுவாகும் அழகனே! காப்பிடவாராய். (க)

கன்றுகளில்லம்புகுந்து கதறுகின்றபசுவெல்லாம் *
நின்றொழிந்தேனுன்னைக்கூவி நேசமேலொன்றுமிலாதாய்! *
மன்றில்நில்லேல்அந்திப்போது மதிள்திருவெள்ளறைநின்றாய்! *
நன்றுகண்டாயென்தன்சொல்லு நானுன்னைக்காப்பிடவாராய். (உ)

செப்போதுமென்முலையார்கள் சிறுசோறுமில்லும்சிதைத்திட்டு *
அப்போதுநானுரப்பப்போய் அடிசிலுமுண்டிலையாள்வாய்! *
முப்போதும்வானவரேத்தும் முனிவர்கள்வெள்ளறைநின்றாய்! *
இப்போதுநானொன்றும்செய்யேன் எம்பிரான்! காப்பிடவாராய். (ங)

† இது, நித்யாநுஸந்தாநத்தைச் சேர்ந்தது.

கண்ணில்மணற்கொடுதூவிக் காலினாற்பாய்ந்தனையென்றென்று *
எண்ணரும்பிள்ளைகள்வந்திட்டு இவரால்முறைப்படுகின்றார் *
கண்ணனே! வெள்ளறைநின்றாய்! கண்டாரோடேதீமைசெய்வாய்!*
வண்ணமேவேலையதொப்பாய்! வள்ளலே! காப்பிடவாராய். (ரு)

பல்லாயிரவரிவ்வூரில்பிள்ளைகள் தீமைகள்செய்வார் *
எல்லாமுன்மேலன்றிப் † போகாது எம்பிரான்! நீயிங்கேவாராய் *
நல்லார்கள்வெள்ளறைநின்றாய்! ஞானச்சுடரே! உன்மேனி *
சொல்லாரவாழ்த்திநின்றேத்திச் சொப்படக்காப்பிடவாராய். (கு)

கஞ்சன்கறுக்கொண்டுநின்மேல் கருநிறச்செம்மயிர்ப்பேயை *
வஞ்சிப்பதற்குவிடுத்தானென்பது ஓர்வார்த்தையுமுண்டு *
மஞ்சுதவழ்மணிமாட மதிள்திருவெள்ளறைநின்றாய்! *
அஞ்சுவன்நீயங்குநிற்க அழகனே! காப்பிடவாராய். (சு)

கள்ளச்சகடும்மருதும் கலக்கழியவுதைசெய்த *
பிள்ளையரசே! நீபேயைப்பிடித்துமுலையுண்டபின்னை *
உள்ளவாறொன்றுமறியேன் ஒளியுடைவெள்ளறைநின்றாய்! *
பள்ளிகொள்போதிதுவாகும் பரமனே! காப்பிடவாராய். (எ)

இன்பமதனையுயர்த்தாய்! இமையவர்க்கென்றுமரியாய்! *
கும்பக்களிறட்டகோவே! கொடுங்கஞ்சன்நெஞ்சினிற்கூற்றே! *
செம்பொன்மதிள்வெள்ளறையாய்! செல்வத்தினால்வளர்பிள்ளாய்! *
கம்பக்கபாலிகாணங்குக் கடிதோடிக்காப்பிடவாராய். (அ)

இருக்கொடுநீர்சங்கிற்கொண்டிட்டு எழிலமறையோர்வந்துநின்றார் *
தருக்கேல்நம்பி! சந்திநின்று தாய்சொல்லுக்கொள்ளாய்சிலநாள் *
திருக்காப்புநானுன்னைச்சாத்தத் தேசுடைவெள்ளறைநின்றாய்! *
உருக்காட்டுமந்திவிளக்கு இன்றொளிகொள்ளஏற்றுகேன்வாராய். (கூ)

‡‡ போதமர்செல்வக்கொழுந்து புணர்திருவெள்ளறையானை *
மாதர்க்குயர்ந்தவசோதை மகன்தன்னைக்காப்பிட்டமாற்றம் *
வேதப்பயன்கொள்ளவல்ல விட்டுசித்தன்சொன்னமாலை *
பாதப்பயன்கொள்ளவல்ல பத்தருள்ளார்வினைபோமே. (கo)

**அடிவரவு:**—இந்திரனோடு கன்றுகள் செப்பு கண்ணில் பல்லாயிரவர் கஞ்சன் கள்ளம் இன்பமதனை இருக்கொடு போதமர் வெண்ணெய்விழுங்கி.

**பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.**



† 'போகா' என்றுங் கூறுவர்.

## கூ - ஆந் திருமொழி - வெண்ணெய்விழுங்கி.



வெண்ணெய் களவாடல் முதலிய பாலக்ரீடை விசேஷங்கள்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (கேதாரகௌளராகம் - ஆதிதாளம்.)

‡ வெண்ணெய்விழுங்கிவெறுங்கலத்தை
வெற்பிடையிட்டு அதனோசைகேட்கும் *
கண்ணபிரான்கற்றகல்விதன்னைக்
காக்ககில்லோம்உன்மகனைக்காவாய் *
புண்ணிற்புளிப்பெய்தாலொக்குந்தீமை
புரைபுரையாலிவைசெய்யவல்ல *
அண்ணற்கண்ணானோர்மகனைப்பெற்ற
அசோதைநங்காய்! உன்மகனைக்கூவாய். (க)

வருகவருகவருகவிங்கே
வாமனநம்பி! வருகவிங்கே *
கரியகுழற்செய்யவாய்முகத்துக்
காகுத்தநம்பி! வருகவிங்கே *
அரியனிவனெனக்கின்றுநங்காய்!
அஞ்சனவண்ணா! அசலகத்தார் *
பரிபவம்பேசத்தரிக்ககில்லேன்
பாவியேனுக்கிங்கேபோதராயே. (உ)

திருவுடைப்பிள்ளைதான்தீயவாறு
தேக்கமொன்றுமிலன்தேசுடையன் *
உருகவைத்தகுடத்தொடுவெண்ணெய்
† உறிஞ்சி யுடைத்திட்டுப்போந்துநின்றான் *
அருகிருந்தார்தம்மையநியாயஞ்செய்வது
தான் வழக்கோ? அசோதாய்! *
வருகவென்றுஉன்மகன்தன்னைக்கூவாய்
வாழவொட்டான்மதுசூதனனே. (ங)

கொண்டல்வண்ணா! இங்கேபோதராயே
கோயிற்பிள்ளாய்! இங்கேபோதராயே *
தெண்டிரைசூழ்திருப்பேர்க்கிடந்த
திருநாரணா! இங்கேபோதராயே *

---

† 'உறிச்சி' என்பது அத்யாபகபாடம்.

உண்டுவக்தேனம்மமென்றுசொல்லி
ஓடியகம்புகஆய்ச்சிதானும் *
கண்டெதிரேசென்றெடுத்துக்கொள்ளக்
கண்ணபிரான்கற்றகல்விதானே. (ச)

பாலைக்கறந்தடுப்பேறவைத்துப்
பல்வளையாளென்மகளிருப்ப *
மேலையகத்தேநெருப்புவேண்டிச்சென்று
இறைப்பொழுதங்கேபேசிநின்றேன் *
சாளக்கிராமமுடையநம்பி
சாய்த்துப்பருகிட்டுப்போந்துநின்றான் *
ஆலைக்கரும்பின்மொழியனைய
அசோதைநங்காய்! உன்மகனைக்கூவாய். (கூ)

போதர்கண்டாய்இங்கேபோதர்கண்டாய்
போதரேனென்னாதேபோதர்கண்டாய் *
ஏதேனும்சொல்லியசலகத்தார்
ஏதேனும்பேசநான்கேட்கமாட்டேன் *
† கோதுகலமுடைக்குட்டனே! ஓ
குன்றெடுத்தாய்! குடமாடுகூத்தா! *
வேதப்பொருளே! என்வேங்கடவா!
வித்தகனே! இங்கேபோதராயே. (சு)

செந்நெலரிசிசிறுபருப்புச்
செய்த அக்காரம்நறுநெய்பாலால் *
பன்னிரண்டுதிருவோணமட்டேன்
பண்டுமிப்பிள்ளைபரிசறிவன் *
இன்னமுகப்பன்நானென்றுசொல்லி
எல்லாம்விழுங்கிட்டுப்போந்துநின்றான் *
உன்மகன்தன்னையசோதைநங்காய்!
கூவிக்கொள்ளாய்இவையும்சிலவே. (எ)

கேசவனே! இங்கேபோதராயே
கில்லேனென்னாதிங்கேபோதராயே *
நேசமிலாதாரகத்திருந்து
நீவிளையாடாதேபோதராயே *

† 'கோதுகுலம்' என்றுமாம்.

தூசனஞ்சொல்லும்தொழுத்தைமாரும்
　　தொண்டருமநின்றவிடத்தில்நின்று *
தாய்சொல்லுக்கொள்வதுதன்மங்கண்டாய்
　　தாமோதரா! இங்கேபோதராயே. (அ)

கன்னலிலட்டுவத்தோடுசீடை
　　காரெள்ளினுண்டைகலத்திலிட்டு *
என்னகமென்றுநான்வைத்துப்போந்தேன்
　　இவன்புக்கவற்றைப்பெறுத்திப்போந்தான் *
பின்னுமகம்புக்குறியைநோக்கிப்
　　பிறங்கொளிவெண்ணெயுஞ்சோதிக்கின்றான் *
உன்மகன்றன்னையசோதைநங்காய்!
　　கூவிக்கொள்ளாயிவையுஞ்சிலவே. (கூ)

சொல்லிலரசிப்படுதிநங்காய்!
　　சூழலுடையனுன்பிள்ளைதானே *
இல்லம்புகுந்தென்மகளைக்கூவிக்
　　கையில்வளையைக்கழற்றிக்கொண்டு *
கொல்லையில்நின்றுங்கொணர்ந்துவிற்ற
　　அங்கொருத்திக்கவ்வளைகொடுத்து *
நல்லனநாவற்பழங்கள்கொண்டு
　　நானல்லேனென்றுசிரிக்கின்றானே. (க0)

↓↓ வண்டுகளித்திரைக்கும்பொழில்சூழ்
　　வருபுனற்காவிரித்தென்னரங்கன் *
பண்டவன்செய்தகிரீடையெல்லாம்
　　பட்டர்பிரான்விட்டுசித்தன்பாடல் *
கொண்டிவைபாடிக்குனிக்கவல்லார்
　　கோவிந்தன்தன்னடியார்களாகி *
எண்டிசைக்கும்விளக்காகிநிற்பார்
　　இணையடியென்தலைமேலனவே. (கக)

அடிவரவு:—வெண்ணெய் வருக திரு கொண்டல் பாலை போதர் செந்நெல் கேசவனே கன்னல் சொல்லில் வண்டு ஆற்றிலிருந்து.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## கo - ஆந் திருமொழி - ஆற்றிலிருந்து.

ஆயர்மங்கையர் யசோதைபக்கல் கண்ணன்தீம்புகளைக்கூறி முறையிடுதல்.

கலித்தாழிசை. (நாதநாமக்கிரியைராகம் - நடபகதாளம்.)

↓↓ ஆற்றிலிருந்து விளையாடுவோங்களை *
சேற்றாலெறிந்து வளைதுகில்கைக்கொண்டு *
காற்றிற்கடியனாய் ஓடியகம்புக்கு *
மாற்றமும்தாரானாலின்றுமுற்றும்
வளைத்திறம்பேசானாலின்றுமுற்றும். (க)

குண்டலம்தாழக் குழல்தாழநாண்தாழ *
எண்டிசையோரும் இறைஞ்சித்தொழுதேத்த *
வண்டமர்பூங்குழலார் துகில்கைக்கொண்டு *
விண்தோய்மரத்தானாலின்றுமுற்றும்
வேண்டவுந்தாரானாலின்றுமுற்றும். (உ)

தடம்படுதாமரைப் பொய்கைகலக்கி *
விடம்படுநாகத்தை வால்பற்றியீர்த்து *
படம்படுபைந்தலை மேலெழப்பாய்ந்திட்டு *
உடம்பையசைத்தானாலின்றுமுற்றும்
உச்சியில்நின்றானாலின்றுமுற்றும். (ந)

தேனுகனாவி செகுத்து * பனங்கனி
தானெறிந்திட்ட தடம்பெருந்தோளினால் *
வானவர்கோன்விட வந்தமழைதடுத்து *
ஆனிரைகாத்தானாலின்றுமுற்றும்
அவையுய்யக்கொண்டானாலின்றுமுற்றும். (ச)

ஆய்ச்சியர்சேரி அளைதயிர்பாலுண்டு *
பேர்த்தவர்கண்டு பிடிக்கப்பிடியுண்டு *
வேய்த்தடந்தோளினார் வெண்ணெய்கொள்மாட்டாது * அங்
காப்புண்டிருந்தானாலின்றுமுற்றும்
அடியுண்டழுதானாலின்றுமுற்றும். (ரு)

தள்ளித்தளர்நடையிட்டு இளம்பிள்ளையாய் *
உள்ளத்தினுள்ளே அவளையுறநோக்கி *
கள்ளத்தினால்வந்த பேய்ச்சிமுலையுயிர் *
துள்ளச்சுவைத்தானாலின்றுமுற்றும்
துவக்கறவுண்டானாலின்றுமுற்றும். (சு)

மாவலிவேள்வியில் மாணுருவாய்ச்சென்று *
மூவடிதாவென்று இரந்தவிம்மண்ணினை *
ஓரடியிட்டு இரண்டாமடிதன்னிலே *
தாவடியிட்டானாலின்றுமுற்றும்
தரணியளந்தானாலின்றுமுற்றும். (எ)

தாழைதண்ணாம்பல் தடம்பெரும்பொய்கைவாய் *
வாழுமுதலை வலைப்பட்டுவாதிப்புண் *
வேழந்துயர்கெட விண்ணோர்பெருமானாய் *
ஆழிபணிகொண்டானாலின்றுமுற்றும்
அதற்கருள்செய்தானாலின்றுமுற்றும். (அ)

வானத்தெழுந்த மழைமுகில்போல் * எங்கும
கானத்துமேய்ந்து களித்துவிளையாடி *
ஏனத்துருவாய் இடந்தவிம்மண்ணினை *
தானதடேவைத்தானாலின்றுமுற்றும்
தரணியிடந்தானாலின்றுமுற்றும். (கூ)

தரவுகொச்சகக்கலிப்பா.

↓↓ அங்கமலக்கண்ணன் தன்னை யசோதைக்கு *
மங்கைநல்லார்கள்தாம் வந்துமுறைப்பட்ட *
அங்கவர்சொல்லைப் புதுவைக்கோன்பட்டன்சொல் *
இங்கிவைவல்லவர்க்கு ஏதமொன்றில்லையே. (கo)

அடிவரவு:—ஆற்றில் குண்டலம் தடம் தேனுகன் ஆய்ச்சி தள்ளி மாவலி தாழை வானத்து அங்கமலம் தன்னேராயிரம்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## மூன்றாம்பத்து.

### க - ஆந் திருமொழி - தன்னேராயிரம்.



யசோதைப்பிராட்டி கண்ணனது அதிமாநுஷசேஷ்டிதங்களைக் கண்டு முலைகொடுக்க அஞ்சுதல்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஆரபிராகம் - ஆதிதாளம்.)

↓↓ தன்னேராயிரம்பிள்ளைகளோடு
தளர்நடையிட்டுவருவான் *
பொன்னேய்நெய்யொடுபால்முதுண்டு
ஒருபுள்ளுவன்பொய்யேதவழும *

மின்னேர் நுண்ணிடைவஞ்சமகள்கொங்கைதுஞ்ச
வாய்வைத்தபிரானே! *
அன்னே! உன்னையறிந்துகொண்டேன்
உனக்கஞ்சுவன் அம்மந்தரவே. (க)

பொன்போல்மஞ்சனமாட்டியமுதூட்டிப்
போனேன் வருமளவிப்பால் *
வன்பாரச்சகடமிறச்சாடி
வடக்கிலகம்புக்கிருந்து *
மின்போல் நுண்ணிடையாளொருகன்னியை
வேற்றுருவஞ்செய்துவைத்த *
அன்பா! உன்னையறிந்துகொண்டேன்
உனக்கஞ்சுவன் அம்மந்தரவே. (உ)

கும்மாயத்தொடுவெண்ணெய்விழுங்கிக்
குடத்தயிர்சாய்த்துப்பருகி *
பொய்ம்மாயமருதானவசுரரைப்
பொன்றுவித்தின்றுநீவந்தாய் *
இம்மாயம்வல்லபிள்ளைநம்பீ!
உன்னையென்மகனேயென்பர்நின்றார் *
அம்மா! உன்னையறிந்துகொண்டேன்
உனக்கஞ்சுவன் அம்மந்தரவே. (ங)

மையார்கண்மடவாய்ச்சியர்மக்களை
மையன்மைசெய்து அவர்பின்போய் *
கொய்யார்பூந்துகில்பற்றித்தனிநின்று
குற்றம்பலபலசெய்தாய் *
பொய்யா! உன்னைப்புறம்பலபேசுவ
புத்தகத்துக்குளகேட்டேன்! *
ஐயா! உன்னையறிந்துகொண்டேன்
உனக்கஞ்சுவன் அம்மந்தரவே. (ச)

முப்போதுங்கடைந்தீண்டியவெண்ணெயி
னோடு தயிரும்விழுங்கி *
கப்பாலாயர்கள்காவிற்கொணர்ந்த
கலத்தொடுசாய்த்துப்பருகி *

மெய்ப்பாலுண்டழுபிள்ளைகள்போல
    நீவிம்மிவிம்மியழுகின்ற *
அப்பா ! உன்னையறிந்துகொண்டேன்
    உனக்கஞ்சுவனம்மந்தரவே. (௫)

கரும்பார்நீள்வயற்காய்கதிர்ச்செந்நெலைக்
    கற்றாநிரைமண்டித்தின்ன *
விரும்பாக்கன்றொன் றுகொண்டு
    விளங்கனிவீழவெறிந்தபிரானே ! *
சுரும்பார்மென்குழற்கன்னியொருத்திக்குச்
    சூழ்வலைவைத்துத்திரியும் *
அரம்பா ! உன்னையறிந்துகொண்டேன்
    உனக்கஞ்சுவனம்மந்தரவே. (௬)

மருட்டார்மென்குழல்கொண்டுபொழில்புக்கு
    வாய்வைத்து அவ்வாயர்தம்பாடி *
சுருட்டார்மென்குழற்கன்னியர்வந்துன்னைச
    சுற்றும்தொழநின்றசோதி ! *
பொருட்டாயமிலேனெம்பெருமான் !
    உன்னைப்பெற்றகுற்றமல்லால் * மற்றிங்
கரட்டா ! உன்னையறிந்துகொண்டேன்
    உனக்கஞ்சுவனமமந்தரவே (௭)

வாளாவாகிலுங்காணகில்லார்
    பிறர்மக்களைமையன்மைசெய்து *
தோளாவிட்டவரோடுதிளைத்து
    நீசொல்லப்படாதனசெய்தாய் *
கேளார்ஆயர்குலத்தவர்இப்பழி
    கெட்டேன் ! வாழ்வில்லை * நந்தன்
காளாய் ! உன்னையறிந்துகொண்டேன்
    உனக்கஞ்சுவனம்மந்தரவே. (௮)

தாய்மார்மோர்விற்கப்போவா
    தமப்பன்மார்கற்றாநிரைப்பின்புபோவர் *
நீயாய்ப்பாடியிளங்கன்னிமார்களை
    நோபடவேகொண்டுபோதி *

காய்வார்க்கென்றுமுகப்பனவேசெய்து
கண்டார்கழறத்திரியும் *
ஆயா! உன்னையறிந்துகொண்டேன்
உனக்கஞ்சுவனம்மந்தரவே. (௯)

தொத்தார்பூங்குழற்கன்னியொருத்தியைச
சோலைத்தடங்கொண்டுபுக்கு *
முத்தார்கொங்கைபுணர்ந்திராநாழிகை
மூவேழுசென்றபின்வந்தாய் *
ஒத்தார்க்கொத்தனபேசுவர்
உன்னையுரப்பவேநானொன்றும்மாட்டேன் *
அத்தா! உன்னையறிந்துகொண்டேன்
உனக்கஞ்சுவனம்மந்தரவே. (௧௦)

⇊ காரார்மேனிநிறத்தெம்பிரானைக்
கடிகமழ்பூங்குழலாய்ச்சி *
ஆராவின்னமுதுண்ணத்தருவன்நான்
அம்மந்தாரேனென்றமாற்றம் *
பாரார்தொல்புகழான்புதுவைமன்னன்
பட்டர்பிரான்சொன்னபாடல் *
ஏராரின்னிசை † மாலைவல்லார்
இருடீகேசனடியாரே. (௧௧)

அடிவரவு:—தன்னேராயிரம் பொன் கும்மாயத்தொடு மையார் முப்போதும் கரும்பு மருட்டார் வாளா தாய்மார் தொத்தார் காரார் அஞ்சனம்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௨ - ஆந் திருமொழி - அஞ்சனவண்ணனை.



### யசோதைப்பிராட்டி கண்ணனைக் கன்றின்பின் போக்கியதை எண்ணி அனுதபித்தல்.

கலிநிலைத்துறை. (சங்கராபரணராகம் - ரூபகதாளம்.)

⇊ அஞ்சனவண்ணனை ஆயர்கோலக்கொழுந்தினை *
மஞ்சனமாட்டி மனைகள்தோறும்திரியாமே *
கஞ்சனைக்காய்ந்த கழலடிநோவக்கன்றின்பின் *
என்செயப்பிள்ளையைப்போக்கினேன்? எல்லேபாவமே. (௧)

† 'மாலைகள்வல்லார்' என்னும் பாடம் ஓசைக்கு அமையும்.

பற்றுமஞ்சள்பூசிப் பாவைமாரொடுபாடியில் *
சிற்றில்சிதைத்து எங்குந்தீமைசெய்துதிரியாமே *
கற்றுத்தூளியுடை வேடர்கானிடைக்கன்றின்பின் *
எற்றுக்கென்பிள்ளையைப்போக்கினேன் ? எல்லேபாவமே. (உ)

நன்மணிமேகலை நங்கைமாரொடுநாள்தொறும் *
பொன்மணிமேனி புழுதியாடித்திரியாமே *
கன்மணிநின்றதிர் கானதரிடைக்கன்றின்பின் *
என்மணிவண்ணனைப்போக்கினேன் எல்லேபாவமே. (௩)

வண்ணக்கருங்குழல் மாதர்வந்தலர்தூற்றிடப் *
பண்ணிப்பலசெய்து இப்பாடியெங்குந்திரியாமே *
கண்ணுக்கினியானைக் கானதரிடைக்கன்றின்பின் *
எண்ணற்கரியானைப்போக்கினேன் எல்லேபாவமே. (௪)

அவ்வவ்விடம்புக்கு அவ்வாயர்பெண்டிர்க்கணுக்கனாய் *
கொவ்வைக்கனிவாய்கொடுத்துக கூழைமைசெய்யாமே *
† எவ்வம்சிலையுடை வேடர்கானிடைக்கன்றின்பின் *
தெய்வத்தலைவனைப்போக்கினேன் எல்லேபாவமே. (௫)

மிடறுமெழுமெழுத்தோட வெண்ணெய்விழுங்கிப்போய் *
படிறுபலசெய்து இப்பாடியெங்கும்திரியாமே *
கடிறுபலதிரி கானதரிடைக்கன்றின்பின் *
இடறவென்பிள்ளையைப்போக்கினேன் எல்லேபாவமே. (௬)

வள்ளிநுடங்கிடை மாதர்வந்தலர்தூற்றிட *
துள்ளிவிளையாடித் தோழரோடுதிரியாமே *
கள்ளியுணங்கு வெங்கானதரிடைக்கன்றின்பின் *
புள்ளின்தலைவனைப்போக்கினேன் எல்லேபாவமே. (எ)

பன்னிருதிங்கள் வயிற்றிற்கொண்டவப்பாங்கினால் *
என்னிளங்கொங்கை அமுதமூட்டியெடுத்துயான் *
பொன்னடிநோவப் புலரியேகானிற்கன்றின்பின் *
என்னிளஞ்சிங்கத்தைப்போக்கினேன் எல்லேபாவமே. (அ)

குடையும்செருப்பும்கொடாதே தாமோதரனைநான் *
உடையும்கடியனவூன்று வெம்பரற்களுடை *
கடியவெங்கானிடைக் காலடிநோவக்கன்றின்பின் *
கொடியேனென்பிள்ளையைப்போக்கினேன் எல்லேபாவமே. (௯)

---

† 'எவ்வும்' என்று சிலர்.

↓↓ என்றுமெனக்கினியானை என்மணிவண்ணனை *
கன்றின்பின்போக்கினேனென்று அசோதைகழறிய *
பொன்திகழ்மாடப் புதுவையர்கோன்பட்டன்சொல் *
இன்தமிழ்மாலைகள்வல்லவர்க்கு இடரில்லையே. (கo)

அடிவரவு:—அஞ்சனம் பற்று நன்மணி வண்ணம் அவ்வவ்விடம் மிடறு வள்ளி பன்னிரு குடை என்றும் சீலை.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ங - ஆந் திருமொழி - சீலைக்குதம்பை.



### கண்ணன் கன்றுகள்மேய்த்துவரக் கண்டு யசோதை மகிழ்தல்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (சுருட்டிராகம்— ஆதிதாளம்.)

↓↓ சீலைக்குதம்பையொருகாதொருகாது செந்நிறமேல்தோன்றிப்பூ *
கோலப்பணைக்கச்சும்கூறையுடையும் குளிர்முத்தின்கோடாலமும் *
காலிப்பின்னேவருகின்ற கடல்வண்ணன்வேடத்தைவந்துகாணீர் *
† ஞாலத்துப்புத்திரனைப்பெற்றார் நங்கைமீர்!நானேமற்றாருமில்லை. (க)

கன்னிநன்மாமதிள்சூழ்தரு பூம்பொழிற்காவிரித்தென்னரங்கம் *
மன்னியசீர்மதுசூதனா! கேசவா! பாவியேன்வாழ்வுகந்து *
உன்னையிளங்கன்றுமேய்க்கச் சிறுகாலேயூட்டியொருப்படுத்தேன் *
என்னின்மனம்வலியாளொருபெண்ணில்லைஎன்குட்டனே!முத்தந்தா.

‡ காடுகளூடுபோய்க் கன்றுகள்மேய்த்துமறியோடி * கார்க்கோடற்பூச்
சூடிவருகின்றதாமோதரா! கற்றுத்தூளிகாணுன்னுடம்பு *
பேடைமயிற்சாயற்பின்னைமணாளா! நீராட்டமைத்துவைத்தேன் *
ஆடியமுதுசெய்அப்பனுமுண்டிலன் உன்னோடுடனேயுண்பான். (ங)

கடியார்பொழிலணிவேங்கடவா! கரும்போரேறே! * நீயுகக்கும்
குடையும்செருப்பும்குழலும்தருவிக்கக்கொள்ளாதேபோனாய்மாலே!*
கடியவெங்கானிடைக்கன்றின்பின்போன சிறுக்குட்டச்செங்கமல
அடியும்வெதும்பி*உன்கண்கள்சிவந்தாயசைந்திட்டாய்நீயெம்பிரான்!

பற்றார்நடுங்கமுன்பாஞ்சசன்னியத்தை வாய்வைத்தபோரேறே! *
என்சிற்றாயர்சிங்கமே! சீதைமணாளா! சிறுக்குட்டச்செங்கண்மாலே! *
சிற்றாடையும்சிறுப்பத்திரமும் இவைகட்டிலின்மேல்வைத்துப்போய்*
கற்றாயரோடுநீகன்றுகள்மேய்த்துக் கலந்துடன்வந்தாய்போலும். (ரு)

---

† 'ஞாலத்தில்' என்று சிலர். ‡ ங, க, இவ்விரண்டுபாசுரங்களும் திருமஞ்சன காலத்தில் சேவிக்கப்படுவன.

அஞ்சுடராழியுன்கையகத்தேந்தும் அழகா! நீபொய்கைபுக்கு *
நஞ்சுமிழ்நாகத்தினோடுபிணங்கவும் நானுயிர்வாழ்ந்திருந்தேன் *
என்செய்யவென்னைவயிறுமறுக்கினாய் ஏதுமோரச்சமில்லை * [டாய்.
கஞ்சன்மனத்துக்குகப்பனவேசெய்தாய்காயாம்பூவண்ணங்கொண் (௬)

பன்றியுமாமையுமீனமுமாகிய பாற்கடல்வண்ணா! * உன்மேல்
கன்றினுருவாகிமேய்புலத்தேவந்த கள்ளவசுரர்தம்மை *
சென்றுபிடித்துச்சிறுக்கைகளாலே விளங்காயெறிந்தாய்போலும் *
என்றுமென்பிள்ளைக்குத்தீமைகள்செய்வார்கள் அங்ஙனமாவர்களே.()

கேட்டறியாதனகேட்கின்றேன் கேசவா! கோவலர்இந்திரற்கு *
காட்டியசோறுங்கறியுந்தயிரும் கலந்துடனுண்டாய்போலும் *
ஊட்டமுதலிலேனுன்தன்னைக்கொண்டு ஒருபோதுமெனக்கரிது *
வாட்டமிலாப்புகழ்வாசுதேவா! உன்னையஞ்சுவனின்றுதொட்டும். (௮)

[முன்
‡ திண்ணார்வெண்சங்குடையாய்! திருநாள்திருவோணமின்றேழுநாள் *
பண்ணேர்மொழியாரைக்கூவிமுளையட்டிப் பல்லாண்டுகூறுவித்தேன் *
கண்ணாலஞ்செய்யக் கறியுங்கலத்ததரிசியுமாக்கிவைத்தேன் * [யிரு.
கண்ணா! நீநாளைதொட்டுக்கன்றின்பின்போகேல் கோலஞ்செய்திங்கே

‡‡ புற்றரவல்குலசோதைநல்லாய்ச்சி தன்புத்திரன்கோவிந்தனை *
கற்றினம்மேய்த்துவரக்கண்டுகந்து அவள்கற்பித்தமாற்றமெல்லாம் *
செற்றமிலாதவர்வாழ்தரு தென்புதுவைவிட்டுசித்தன்சொல் *
கற்றிவைபாடவல்லார் கடல்வண்ணன்கழலிணைகாண்பர்களே. (௧0)

அடிவரவு:—சீலை கன்னி காடுகள் கடி பற்றார் அஞ்சுடர் பன்றி கேட்டு திண்ணார் புற்று தழை.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௪ - ஆந் திருமொழி - தழைகளும்.

காலிப்பின்னேவருங் கண்ணனைக் கண்டு இடைக்கன்னியர் காமுறுதல்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பைரவிராகம்-ஆதிதாளம்.)

↓↓தழைகளும்தொங்கலும்ததும்பியெங்கும்
தண்ணுமையெக்கம்மத்தளிதாழ்பீலி *
குழல்களும்கீதமுமாகியெங்கும்
கோவிந்தன்வருகின்றகூட்டங்கண்டு *
மழைகொலோவருகின்றதென்றுசொல்லி
மங்கைமார்சாலகவாசல்பற்றி *
நுழைவனர்நிற்பனராகி எங்கும்
உள்ளம்விட்டூண்மறந்தொழிந்தனரே. (௧)

வல்லிநுண்ணிதழன்னவாடைகொண்டு
வசையறத்திருவரைவிரித்துடுத்து *
பல்லிநுண்பற்றாகவுடைவாள்சாத்திப்
பணைக்கச்சுந்திப்பலதழைநடுவே *
முல்லைநன்னறுமலர்வேங்கைமலரணிந்து
பல்லாயர்குழாம்நடுவே *
எல்லியம்போதாகப்பிள்ளைவரும்
எதிர்நின்றங்கினவளையிழவேன்மினே. (௨)

சுரிகையும்தெறிவில்லும்செண்டுகோலும்
மேலாடையும்தோழன்மார்கொண்டோட *
ஒருகையாலொருவன்தன்தோளையூன்றி
ஆநிரையினம்மீளக்குறித்தசங்கம் *
வருகையில்வாடியபிள்ளைகண்ணன்
மஞ்சளும்மேனியும்வடிவும்கண்டாள் *
அருகேநின்றாளென்பெண்நோக்கிக்கண்டாள்
அதுகண்டுஇவ்வூரொன்றுபுணர்க்கின்றதே. (௩)

குன்றெடுத்தாநிரைகாத்தபிரான்
கோவலனாய்க்குழலூதியூதி *
கன்றுகள்மேய்த்துத்தன்தோழரோடு
கலந்துடன்வருவானைத்தெருவில்கண்டு *

என்றுமிவனையொப்பாரைநங்காய் !
கண்டறியேன்வடி! வந்துகாணாய் *
ஒன்றுநில்லாவளைகழன்று
துகிலேந்திளமுலையுமென்வசமல்லவே. (ச)

சுற்றிநின்றுயர்தழைகளிடைச
சுருள்பங்கிநேத்திரத்தாலணிந்து *
பற்றிநின்றுயர்கடைத்தலையே
பாடவுமாடக்கண்டேன் *அன்றிப்பின்
மற்றொருவர்க்கென்னைப்பேசலொட்டேன்
மாலிருஞ்சோலையெமமாயற்கல்லால் *
கொற்றவனுக்கிவளாமென்றெண்ணிக்
கொடுமின்கள்கொடீராகிற்கோழம்பமே. (ரு)

சிந்துரமிலங்கத்தன் திருநெற்றிமேல
திருத்தியகோறம்பூந்திருக்குழலும் *
அநதாமுழலவத்தண்தழைக்காவின்கீழ்
வருமாயரோடுடன்வளைகோலவீச *
அந்தமொன்றில்லாதவாயப்பிள்ளை
அறிந்தறிந்திவ்வீதிபோதுமாகில் *
பந்துகொண்டானென்றுவளைத்துவைத்துப்
பவளவாய்முறுவலும்காண்போம்தோழீ ! (சு)

சாலப்பன்னிரைப்பின்னேதழைக்காவின்கீழ்த்
தன்திருமேனிநின்றொளிதிகழ *
நீலநன்னறுங்குஞ்சிநேத்திரத்தாலணிநது
பல்லாயர்குழாம்நடுவே *
கோலச்செந்தாமரைக்கண்மிளிரக்
குழலூதியிசைபாடிக்குனித்து *ஆயரோடு
ஆலித்துவருகின்றவாயப்பிள்ளை
(எ)

சிந்துரப்பொடிக்கொண்டுசென்னியப்பித்
திருநாமமிட்டங்கோரிலையந்தன்னால் *
அந்தரமின்றித்தன்னெறிபங்கியை
அழகியநேத்திரத்தாலணிந்து *

இந்திரன்போல்வருமாயப்பிள்ளை
எதிர்நின்றங்கினவளையிழவேலென்ன *
சந்தியில்நின்றுகண்டீர்
நங்கைதன் துகிலொடுசரிவளைகழல்கின்றதே. (அ)

வலங்காதின்மேல்தோன்றிப்பூவணிந்து
மல்லிகைவனமாலைமௌவல்மாலை *
சிலிங்காரத்தால்குழலதாழவிட்டுத்
தீங்குழல்வாய்மடுத்தூதியூதி *
அலங்காரத்தால்வருமாயப்பிள்ளை
அழகுகண்டென்மகளாசைப்பட்டு *
விலங்கிநில்லாதெதிர்நின்றுகண்டீர்
வெள்வளைகழன்றுமெய்ம்மெலிகின்றதே. (௯)

↓↓விண்ணின்மீதமரர்கள்விரும்பித்தொழ
மிறைத்துஆயர்பாடியில்வீதியூடே *
கண்ணன்காலிப்பின்னேயெழுந்தருளக்கண்டு
இளவாய்க்கன்னிமார்காமுற்ற
வண்ணம்*வண்டமர்பொழில்புதுவையர்கோன
விட்டுசித்தன்சொன்னமாலைபத்தும் *
பண்ணின்பம்வரப்பாடும்பத்தருள்ளார்
பரமானவைகுந்தம்நண்ணுவரே. (௧0)

அடிவரவு:—தழை வல்லி சுரி குன்று சுற்றி சிந்துரம் சால சிந்துரப்பொடி வலம் விண்ணின்மீது அட்டு.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௫-ஆந் திருமொழி - அட்டுக்குவி.



### கண்ணன் கோவர்த்தனகிரியைக் குடையாகக்கொண்டு கன்மழை தடுத்து ஆயரையும் ஆநிரையையும் பாதுகாத்தல்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பந்துவராளிராகம் - அடதாளம்.)

↓↓அட்டுக்குவிசோற்றுப்பருப்பதமும்
தயிர்வாவியும்நெய்யளறுமடங்கப்
பொட்டத்துற்றி*மாரிப்பகைபுணர்த்த
பொருமாகடல்வண்ணன்பொறுத்தமலை *

வட்டத்தடங்கண்மடமான்கன்றினை
வலைவாய்ப்பற்றிக்கொண்டு * குறமகளிர்
கொட்டைத்தலைப்பால்கொடுத்துவளர்க்கும்
கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. (க)

வழுவொன்றுமில்லாச்செய்கை வானவர்கோன்
வலிப்பட்டுமுனிந்துவிடுக்கப்பட்ட *
மழைவந்தெழுநாள்பெய்துமாத்தடுப்ப
மதுசூதனெடுத்துமறித்தமலை *
இழவுதரியாததோரீற்றுப்பிடி
இளஞ்சீயம்தொடர்ந்துமுடுகுதலும் *
குழவியிடைக்காலிட்டெதிர்ந்துபொரும்
கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. (உ)

அம்மைத்தடங்கண்மடவாய்ச்சியரும்
ஆனாயருமாநிரையுமலறி *
எம்மைச்சரணென்றுகொள்ளென்றிரப்ப
இலங்காழிக்கையெந்தையெடுத்தமலை *
தம்மைச்சரணென்றதம்பாவையரைப்
புனமேய்கின்றமானினங்காண்மினென்று *
கொம்மைப்புயக்குன்றர்சிலைகுனிக்கும்
கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. (ங)

கடுவாய்ச்சினவெங்கட்களிற்றினுக்குக்
கவளமெடுத்துக்கொடுப்பானவன்போல் *
அடிவாயுறக்கையிட்டெழப்பறித்திட்டு
அமரர்பெருமான்கொண்டுநின்றமலை *
கடல்வாய்ச்சென்றுமேகங்கவிழ்ந்திறங்கிக்
கதுவாய்ப்படநீர்முகந்தேறி * எங்கும்
குடவாய்ப்படநின்றுமழைபொழியும்
கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. (ச)

வானத்திலுள்ளீர்! வலியீருள்ளீரேல்
அறையோவந்துவாங்குமினென்பவன்போல் *
ஏனத்துருவாகியவீசனெந்தை
இடவனெழவாங்கியெடுத்தமலை *

கானக்களியானை தன்கொம்பிழந்து
கதுவாய்மதஞ்சோரத்தன்கையெடுத்து *
கூனற்பிறைவேண்டியண்ணாந்துநிற்கும்
கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. (ரு)

செப்பாடுடையதிருமாலவன் தன்
செந்தாமரைக்கைவிரலைந்தினையும் *
கப்பாகமடுத்துமணிநெடுந்தோள்
காம்பாகக்கொடுத்துக்கவித்தமலை *
எப்பாடும்பரந்திழிதெள்ளருவி
இலங்குமணிமுத்துவடம்பிறழ *
குப்பாயமெனநின்றுகாட்சிதரும்
கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. (சா)

படங்கள்பலவுமுடைப்பாம்பரையன்
படர்பூமியைத்தாங்கிக்கிடப்பவன்போல *
தடங்கைவிரலைந்துமலரவைத்துத்
தாமோதரன்தாங்குதடவரைதான் *
அடங்கச்சென்றிலங்கையைப்பீடழித்த
அனுமன்புகழ்பாடித்தம்குட்டன்களை *
குடங்கைக்கொண்டுமந்திகள்கண்வளர்த்தும்
கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. (எ)

சலமாமுகில்பல்கணப்போர்க்களத்துச
சரமாரிபொழிந்தெங்கும்பூசலிட்டு *
நலிவானுறக்கேடகங்கோப்பவன்போல்
நாராயணன்முன்முகங்காத்தமலை *
இலைவேய்குரம்பைத்தவமாமுனிவர்
இருந்தார்நடுவேசென்றுஅணார்சொறிய *
கொலைவாய்ச்சினவேங்கைகள்நின்றுறங்கும்
கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. (அ)

வன்பேய்முலையுண்டதோர்வாயுடையன்
வன்தூணெனநின்றதோர்வன்பரத்தை *
தன்பேரிட்டுக்கொண்டுதரணிதன்னில்
தாமோதரன்தாங்குதடவரைதான் *

முன்பேவழிகாட்டமுசுக்கணங்கள்
முதுகில்பெய்துதம்முடைக்குட்டன்களை *
கொம்பேற்றியிருந்துகுதிபயிற்றும்
கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. (கூ)

கொடியேறுசெந்தாமரைக்கைவிரல்கள்
கோலமுமழிந்திலவாடிற்றில *
வடிவேறுதிருவுகிர்நொந்துமில
மணிவண்ணன்மலையுமோர்சம்பிரதம் *
முடியேறியமாமுகிற்பல்கணங்கள்
முன்னெற்றிநரைத்தனபோல * எங்கும்
குடியேறியிருந்துமழைபொழியும்
கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. (க0)

↓↓ அரவிற்பள்ளிகொண்டுஅரவம்துரந்திட்டு
அரவப்பகையூர்தியவனுடைய *
குரவிற்கொடிமுல்லைகள்நின்றுறங்கும்
கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடைமேல் *
திருவிற்பொலிமறைவாணர்புத்தூர்த்
திகழ் பட்டர்பிரான்சொன்னமாலைபத்தும் *
பரவுமனநன்குடைப்பத்தருள்ளார்
பரமானவைகுந்தம்நண்ணுவரே. (கக)

அடிவரவு:—அட்டு வழு அம்மை கடு வானத்தில் செப்பாடு படங்கள் சலம் வன்பேய் கொடி அரவில் நாவலம்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆந் திருமொழி - நாவலம்.



### கண்ணன் வேய்ங்குழலூதற் சிறப்பு.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஸாவேரிராகம் - ஆதிதாளம்.)

↓↓ நாவலம்பெரியதீவினில்வாழும்
நங்கைமீர்கள்! இதோரற்புதங்கேளீர் *
தூவலம்புரியுடையதிருமால்
தூயவாயிற்குழலோசைவழியே *

கோவலர்சிறுமியரிளங்கொங்கை
குதுகலிப்பவுடலுளவிழ்ந்து * எங்கும்
காவலுங்கடந்துகயிறுமாலையாகி
வந்துகவிழ்ந்துநின்றனரே. (௧)

இடவணரையிடத்தோளொடுசாய்த்து
இருகைகூடப்புருவம்நெரிந்தேற *
குடவயிறுபடவாய்கடைகூடக்
கோவிந்தன்குழல்கொடூதினபோது *
மடமயில்களொடுமான்பிணைபோலே
மங்கைமார்கள்மலர்க்கூந்தலவிழ *
உடைநெகிழவோர்கையால்துகில்பற்றி
ஒல்கியோடரிக்கணோடநின்றனரே. (௨)

வானிளவரசுவைகுந்தக்குட்டன்
வாசுதேவன்மதுரைமன்னன் * நந்த
கோனிளவரசுகோவலக்குட்டன்
கோவிந்தன்குழல்கொடூதினபோது *
வானிளம்படியர்வந்துவந்தீண்டி
மனமுருகிமலர்க்கண்கள்பனிப்ப *
தேனளவுசெறிகூந்தலவிழச்
சென்னிவேர்ப்பச்செவிசேர்த்துநின்றனரே. (௩)

தேனுகன்பிலம்பன்காளியனென்னும்
தீப்பப்பூடுகளடங்கவுழக்கி *
கானகம்படியுலாவியுலாவிக்
கருஞ்சிறுக்கன்குழலூதினபோது *
மேனகையொடுதிலோத்தமையரம்பை
உருப்பசியரவர்வெள்கிமயங்கி *
வானகம்படியில்வாய்திறப்பின்றி
ஆடல்பாடலவைமாறினர்தாமே. (௪)

முன்நரசிங்கமதாகிஅவுணன்
முக்கியத்தைமுடிப்பான், மூவுலகில்
† மன்னரஞ்சும் * மதுசூதனன்வாயில்
குழலினோசை செவியைப்பற்றிவாங்க *

† 'மன்னரஞ்ச' என்று சிலர்.

நன்னரம்புடையதும்புருவோடு
நாரதனும்தந்தம்வீணைமறந்து *
கின்னரமிதுனங்களும் தந்தம்
கின்னரம்தொடுகிலோமென்றனரே. (௫)

செம்பெருந்தடங்கண்ணன்திரள்தோளன்
தேவகிசிறுவன்தேவர்கள்சிங்கம் *
நம்பரமன் இந்நாள்குழலூதக்
கேட்டவர்கள் இடருற்றனகேளீர் *
அம்பரந்திரியுங்காந்தப்பரெல்லாம்
அமுதகீதவலையால்சுருக்குண்டு *
நம்பரமன்றென்றுநாணிமயங்கி
நைந்துசோர்ந்துகைமறித்துநின்றனரே. (௬)

புவியுள்நான்கண்டதோரற்புதம்கேளீர்
பூணிமேய்க்குமிளங்கோவலர்கூட்டத்து
அவையுள் * நாகத்தணையான்குழலூத
அமரலோகத்தளவுஞ்சென்றிசைப்ப *
அவியுணுமறந்துவானவரெல்லாம்
ஆயர்பாடிநிறையப்புகுந்தீண்டி *
செவியுள்நாவின்சுவைகொண்டுமகிழ்ந்து
கோவிந்தனைத்தொடர்ந்தென்றும்விடாரே. (௭)

சிறுவிரலகள்தடவிப்பரிமாறச்
செங்கண்கோடசெய்யவாய்கொப்பளிப்ப *
குறுவெயர்ப்புருவம்கூடலிப்பக்
கோவிந்தன்குழல்கொடூதினபோது *
ப்றவையின்கணங்கள்கூடுதுறந்து
வந்துசூழ்ந்துபடுகாடுகிடப்ப *
கறவையின்கணங்கள்கால்பரப்பிட்டுக்
கவிழ்ந்திறங்கிச்செவியாட்டகில்லாவே. (௮)

திரண்டெழுதழைமழைமுகில்வண்ணன்
செங்கமலமலர்சூழ்வண்டினம்போலே *
சுருண்டிருண்டகுழல்தாழ்ந்தமுகத்தான்
ஊதுகின்றகுழலோசைவழியே *

மருண்டுமான்கணங்கள்மேய்கைமறந்து
மேய்ந்தபுல்லும்கடைவாய்வழிசோர *
இரண்டுபாடும்துலுங்காப்புடைபெயரா
எழுதுசித்திரங்கள்போலநின்றனவே. (௯)

கருங்கண்தோகைமயிற்பீலியணிந்து
கட்டிநன்குடுத்தபீதகவாடை *
அருங்கலவுருவினாயர்பெருமான்
அவனொருவன்குழலூதினபோது *
மரங்கள்நின்றுமதுதாரைகள்பாயும்
மலர்கள்வீழும்வளர்கொம்புகள்தாழும் *
இரங்கும்கூம்பும்திருமால்நின்றநின்ற
பக்கம்நோக்கி அவைசெய்யுங்குணமே. (௧0)

↓↓ குழலிருண்டுசுருண்டேறியகுஞ்சிக்
கோவிந்தனுடையகோமளவாயில் *
குழல்முழைஞ்சுகளினூடுகுமிழ்த்துக்
கொழித்திழிந்தவமுதப்புனல்தன்னை *
குழல்முழவம்விளம்புபுதுவைக்கோன்
விட்டுசித்தன்விரித்ததமிழ்வல்லார் *
குழலைவென்றகுளிர்வாயினராகிச்
சாதுகோட்டியுள்கொள்ளப்படுவாரே. (௧௧)

அடிவரவு:—நாவலம் இட வான் தேனுகன் முன் செம் புவியுள் சிறு இரண்டு கருங் குழல் ஐய.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## எ - ஆந் திருமொழி - ஐயபுழுதி.



**திருமாலினிடத்து ஈடுபட்ட தலைமகளின்மை கண்டு நற்றாய் இரங்குதல்.**

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

(யமுனகல்யாணிராகம் - திரிபுடைதாளம்.)

↓↓ ஐயபுழுதியுடம்பளைந்து இவள்பேச்சுமலந்தலையாய் *
செய்யநூலின்சிற்றாடை செப்பனுடுக்கவும்வல்லளல்லள் *
கையினிற்சிறுதூதையோடு இவள்முற்றில்பிரிந்துமிலள் *
பையரவணைப்பள்ளியானொடு கைவைத்திவள்வருமே. (௧)

வாயிற்பல்லுமெழுந்தில மயிரும்முடிகூடிற்றில *
சாய்விலாதகுறுந்தலைச் சிலபிள்ளைகளோடிணங்கி *
தீயிணக்கிணங்காடிவந்து இவள்தன்னன்னசெம்மைசொல்லி *
மாயன்மாமணிவண்ணன்மேல் இவள்மாலுறுகின்றாளே. (உ)

பொங்குவெண்மணற்கொண்டு சிற்றிலும்முற்றத்திழைக்கலுறில் *
சங்குசக்கரம்தண்டுவாள் வில்லுமல்லதிழைக்கலுறாள் *
கொங்கையின்னம்குவிந்தெழுந்தில கோவிந்தனோடிவளை *
சங்கையாகிஎன்னுள்ளம நாடொறும்தட்டுளுப்பாகின்றதே. (௩)

ஏழைபேதையோர்பாலகன்வந்து என்பெண்மகளையெள்கி *
தோழிமார்பலர்கொண்டுபோய்ச்செய்தசூழ்ச்சியையார்க்குரைக்கேன்?
ஆழியானென்னுமாழமோழையில் பாய்ச்சியகப்படுத்தி *
மூழையுப்பறியாததென்னும் மூதுரையுமிலளே. (௪)

நாடுமூருமறியவேபோய் நல்லதுழாயலங்கல்
சூடி * நாரணன்போமிடமெல்லாம் சோதித்துழிதருகின்றாள் *
கேடுவேண்டுகின்றார்பலருளர் கேசவனோடிவளை *
பாடுகாவலிடுமினென்றென்று பார்தடுமாறினதே. (௫)

பட்டங்கட்டிப்பொற்றோடுபெய்து இவள்பாடகமும்சிலம்புமம *
இட்டமாகவளர்த்தெடுத்தேனுக்கு என்னோடிருக்கலுறாள் *
பொட்டப்போய்ப்புறப்பட்டுநின்று இவள்பூவைபூவண்ணாவென்னும் *
வட்டவார்குழல்மங்கைமீர் ! இவள்மாலுறுகின்றாளே. (௬)

பேசவும் † தெரியாதபெண்மையின் பேதையேன்பேதையிவள் *
கூசமின்றிநின்றார்கள்தமமெதிர் கோல்கழிந்தான்மூழையாய் *
கேசவாவென்றும்கேடிலீயென்றும் கிஞ்சுகவாய்மொழியாள் *
வாசவார்குழல்மங்கைமீர் ! இவள்மாலுறுகின்றாளே. (௭)

காறைபூணும்கண்ணாடிகாணும் தன்கையில்வளைகுலுக்கும் *
கூறையுடுக்குமயர்க்கும் தன்கொவ்வைச்செவ்வாய்திருத்தும் *
தேறித்தேறிநின்று ஆயிரம்பேர்த்தேவன்திறம்பிதற்றும் *
மாறில்மாமணிவண்ணன்மேல் இவள்மாலுறுகின்றாளே. (௮)

கைத்தலத்துள்ளமாடழியக் கண்ணாலங்கள்செய்து * இவளை
வைத்துவைத்துக்கொண்டென்னவாணிபம்? நம்மை ‡ வடுப்படுத்தும் *
செய்த்தலையெழுநாற்றுப்போல் அவன்செய்வனசெய்துகொள்ள *
மைத்தடமுகில்வண்ணன்பக்கல் வளரவிடுமின்களே. (௯)

---

† 'தரியாத' என்றும் கூறுவர். ‡ 'வடுப்படுக்கும்' என்பதும் பாடம்.

பெருப்பெருத்தகண்ணாலங்கள்செய்து பேணிநம்மில்லத்துள்ளே *
இருத்துவானெண்ணிநாமிருக்க இவளுமொன்றெண்ணுகின்றாள் *
மருத்துவப்பதம்நீங்கினாளென்னும் வார்த்தை படுவதன்முன் *
ஒருப்படுத்திடுமின் இவளை உலகளந்தானிடைக்கே. (௧0)

↓↓ஞாலமுற்றுமுண்டு ஆலிலைத்துயில் நாராயணனுக்கு * இவள்
மாலதாகிமகிழ்ந்தனளென்று தாயுரைசெய்ததனை *
கோலமார்பொழில்சூழ்புதுவையர்கோன் விட்டுசித்தன்சொன்ன *
மாலைபத்தும்வல்லவர்கட்கு இல்லைவருதுயரே. (௧௧)

அடிவரவு:—ஐய வாயில் பொங்கு ஏழை நாடு பட்டம் பேச காறை கைத்தலத்து பெரு ஞாலம் நல்லதோர்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௮ - ஆந் திருமொழி - நல்லதோர்தாமரை.



தலைமகனுடன்சென்ற தலைமகளைக்குறித்துத் தாய் பலபடி வருந்திக்கூறுதல்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஆனந்தபைரவிராகம் - ஆதிதாளம்.)

↓↓ நல்லதோர்தாமரைப்பொய்கை நாண்மலர்மேற்பனிசோர *
அல்லியுந்தாதுமுதிர்ந்திட்டு அழகழிந்தாலொத்ததாலோ *
இல்லம்வெறியோடிற்றாலோ என்மகளையெங்குங்காணேன் *
மல்லரையட்டவன்பின்போய் மதுரைப்புறம்புக்காள்கொலோ? (௧)

ஒன்றுமறிவொன்றில்லாத உருவறைக்கோபாலர்தங்கள் *
கன்றுகால்மாறுமாபோலே கன்னியிருந்தாளைக்கொண்டு *
நன்றுங்கிறிசெய்துபோனான் நாராயணன்செய்ததீமை *
என்றுமெமர்கள்குடிக்கு ஓரேச்சுக்கொலாயிடுங்கொலோ? (௨)

குமரிமணஞ்செய்துகொண்டு கோலஞ்செய்தில்லத்திருத்தி *
தமரும்பிறருமறியத் தாமோதரற்கென்றுசாற்றி *
அமரர்பதியுடைத்தேவி அரசாணியைவழிபட்டு *
துமிலமெழப்பறைகொட்டித் தோரணம்நாட்டிடுங்கொலோ? (௩)

ஒருமகள்தன்னையுடையேன் உலகம்நிறைந்தபுகழால் *
திருமகள்போலவளர்த்தேன் செங்கண்மால்தான்கொண்டுபோனான் *
பெருமகளாய்க்குடிவாழ்ந்து பெரும்பிள்ளைபெற்றவசோதை *
மருமகளைக்கண்டுகந்து மணாட்டுப்புறம்செய்யுங்கொலோ? (௪)

தம்மாமன்நந்தகோபாலன் தழீஇக்கொண்டென்மகள்தன்னை *
செம்மாந்திரேயென்றுசொல்லிச் செழுங்கயற்கண்ணுஞ்செவ்வாயும் *
கொம்மைமுலையுமிடையும் கொழும்பணைத்தோள்களுங்கண்டிட்டு *
இம்மகளைப்பெற்றதாயர் இனித்தரியாரென்னுங்கொலோ ? (ரு)

வேடர்மறக்குலம்போலே வேண்டிற்றுச்செய்தென்மகளை *
கூடியகூட்டமேயாகக் கொண்டுகுடிவாழுங்கொலோ ? *
நாடுநகருமறிய நல்லதோர்கண்ணாலஞ்செய்து *
சாடிறப்பாய்ந்தபெருமான் தக்கவாகைப்பற்றுங்கொலோ ? (சா)

அண்டத்தமரர்பெருமான் ஆழியான்இன்றென்மகளை *
பண்டப்பழிப்புக்கள்சொல்லிப் பரிசறஆண்டிடுங்கொலோ ? *
கொண்டுகுடிவாழ்க்கைவாழ்ந்து கோவலப்பட்டங்கவித்து *
பண்டைமணாட்டிமார்முன்னே பாதுகாவல்வைக்குங்கொலோ ? (எ)

குடியிற்பிறந்தவர்செய்யும் குணமொன்றும்செய்திலனந்தோ ! *
நடையொன்றும்செய்திலன்நங்காய்! நந்தகோபன்மகன்கண்ணன் *
இடையிருபாலும்வணங்க இளைத்திளைத்தென்மகளேங்கி *
கடைகயிறேபற்றிவாங்கிக் கைதழும்பேறிடுங்கொலோ ? (அ)

வெண்ணிறத்தோய்தயிர்தன்னை வெள்வரைப்பின்முன்னெழுந்து *
கண்ணுறங்காதேயிருந்து கடையவும்தான்வல்லள்கொலோ ? *
ஒண்ணிறத்தாமரைச்செங்கண் உலகளந்தான்என்மகளை *
பண்ணறையாப்பணிகொண்டு பரிசறஆண்டிடுங்கொலோ ? (கூ)

↓↓ மாயவன்பின்வழிசென்று வழியிடைமாற்றங்கள்கேட்டு *
ஆயர்களசேரியிலும்புக்கு அங்குத்தைமாற்றமுமெல்லாம் *
தாயவள்சொல்லியசொல்லைத் தண்புதுவைப்பட்டன்சொன்ன *
தூயதமிழ்ப்பத்தும்வல்லார் தூமணிவண்ணனுக்காளரே. (கo)

அடிவரவு:—நல்லது ஒன்றும் குமரி ஒரு தம்மாமன் வேடர் அண்டத்து குடியில் வெண்ணிறம் மாயவன் என்னாதன்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௯ - ஆந் திருமொழி - என்னாதன்.



க்ருஷ்ணாவதார ராமாவதாரங்களின் குணசேஷ்டிதங்களை இரண்டு தோழியர் எதிரேதிராகக்கூறி உந்திபறத்தல்.

கலித்தாழிசை. (செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.)

↓↓ என்னாதன்தேவிக்கு அன்றுஇன்பப்பூஈயாதாள் *
தன்னாதன்காணவே தண்பூமரத்தினை *
வன்னாதப்புள்ளால் வலியப்பறித்திட்ட * [பற.
என்னாதன்வன்மையைப்பாடிப்பற எம்பிரான்வன்மையைப்பாடிப் (௧)

என்வில்வலிகண்டுபோவென் றெதிர்வந்தான்
தன் * வில்லினோடும் தவத்தையெதிர்வாங்கி *
முன்வில்வலித்து முதுபெண்ணுயிருண்டான் [பாடிப்பற.
தன்*வில்லின்வன்மையைப்பாடிப்பற தாசரதிதன்மையைப் (௨)

உருப்பிணிநங்கையைத் தேரேற்றிக்கொண்டு *
விருப்புற்றங்கேக விரைந்தெதிர் † வந்து *
செருக்குற்றான் வீரம்சிதைய * தலையைச் [பற.
சிரைத்திட்டான்வன்மையைப்பாடிப்பற தேவகிசிங்கத்தைப்பாடிப(௩)

மாற்றுத்தாய்சென்று.வனம்போகேயென்றிட *
ஈற்றுத்தாய்பின்தொடர்ந்து எம்பிரான்! என்றழ *
கூற்றுத்தாய்சொல்லக் கொடியவனம்போன *
சீற்றமிலாதானைப்பாடிப்பற சீதைமணாளனைப்பாடிப்பற. (௪)

பஞ்சவர்தூதனாய்ப் பாரதம்கைசெய்து *
நஞ்சுமிழ்நாகம்கிடந்த நற்பொய்கைபுக்கு *
அஞ்சப்பணத்தின்மேல்பாய்ந்திட் டருள்செய்த * [பற.
அஞ்சனவண்ணனைப்பாடிப்பற அசோதைதன்சிங்கத்தைப்பாடிப் (௫)

முடியொன்றி மூவுலகங்களுமாண்டு*உன்
அடியேற்கருளென்று அவன்பின்தொடர்ந்த *
படியில்குணத்துப் பரதநம்பிக்கு*அன்
றடிநிலையீந்தானைப்பாடிப்பற அயோத்தியர்கோமானைப்பாடிப்பற. (௬)

† 'வந்த' என்றும் பாடம்.

## உ - ஆந் திருமொழி - வாலிமாவலத்து.

### † திருப்பிருதி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (அடாணாராகம் - ஆதிதாளம்.)

↓↓ வாலிமாவலத்தொருவனதுடல்கெட வரிசிலைவளைவித்து * அன்று
ஏலநாறுதண்தடம்பொழிலிடம்பெற இருந்தநல்லிமயத்துள் *
ஆலிமாமுகிலதிர்தரவருவரை அகடுறமுகடேறி *
பீலிமாமயில்நடஞ்செயுந்தடஞ்சுனைப் பிருதிசென்றடைநெஞ்சே! (க)

கலங்கமாக்கடலரிகுலம்பணிசெய்ய அருவரையணைகட்டி *
இலங்கைமாநகர்பொடிசெய்தவடிகள்தாம் இருந்தநல்லிமயத்து *
விலங்கல்போல்வனவிறலிருஞ்சினத்தன வேழங்கள்துயர்கூர *
பிலங்கொள்வாளெயிற்றரியவைதிரிதரு பிருதிசென்றடைநெஞ்சே!

துடிகொள்நுண்ணிடைச்சுரிகுழல் துளங்கெயிற்றிளங்கொடிதிறத்து * ஆயர்
இடிகொள்வெங்குரலினவிடையடர்த்தவன் இருந்தநல்லிமயத்து *
கடிகொள்வேங்கையின்நறுமலரமளியின் மணியறைமிசை, வேழம் *
பிடியினோடுவண்டிசைசொலத்துயில்கொளும் பிருதிசென்றடைநெஞ்சே! (ங)

மறங்கொளாளரியுருவெனவெருவர ஒருவனதகல்மார்வம்
திறந்து * வானவர்மணிமுடிபணிதர இருந்தநல்லிமயத்துள் *
இறங்கியேனங்கள்வளைமருப்பிடந்திடக் கிடந்தருகெரிவீசும் *
‡ பிறங்குமாமணியருவியொடிழிதரு பிருதிசென்றடைநெஞ்சே! (௪)

கரைசெய்மாக்கடல்கிடந்தவன் கனைகழலமரர்கள்தொழுதேத்த *
அரைசெய்மேகலையலர்மகளவளொடும் அமர்ந்தநல்லிமயத்து *
வரைசெய்மாக்களிறுஇளவெதிர்வளர்முளை அளைமிகுதேன்தோய்த்து *
பிரசவாரிதன்னிளம்பிடிக்கருள்செயும் பிருதிசென்றடைநெஞ்சே! (ரு)

பணங்களாயிரமுடையநல்லரவணைப் பள்ளிகொள் பரமா! என்று *
இணங்கிவானவர்மணிமுடிபணிதர இருந்தநல்லிமயத்து *
மணங்கொள்மாதவிநெடுங்கொடிவிசும்புற நிமிர்ந்தவைமுகில்பற்றி *
பிணங்குபூம்பொழில்நுழைந்துவண்டிசைசொலும் பிருதிசென்றடைநெஞ்சே!

கார்கொள்வேங்கைகள்கனவரைதழுவிய கறிவளர்கொடிதுன்னி *
போர்கொள்வேங்கைகள்புனவரைதழுவிய பூம்பொழிலிமயத்துள் *
ஏர்கொள்பூஞ்சுனைத்தடம்படிந்து இனமலரெட்டுமிட்டிமையோர்கள் *
பேர்களாயிரம்பரவிநின்றடிதொழும் பிருதிசென்றடைநெஞ்சே! (எ)

---

† 'பிரிதி' என்றும் வழங்கும். ‡ 'பிறங்கல்' என்றும் பாடம்.

இரவுகூர்ந்திருள்பெருகியவரைமுழை இரும்பசியதுகூர *
அரவமாவிக்குமகன்பொழில்தழுவிய அருவரையிமயத்து *
பரமனாதியெம்பனிமுகில்வண்ணனென்று எண்ணிநின்றிமையோர்கள் *
பிரமனோடுசென்றடிதொழும்பெருந்தகைப் பிருதிசென்றடைநெஞ்சே!

ஓதியாயிரநாமங்களுணர்ந்தவர்க்கு உறுதுயரடையாமல் *
ஏதமின்றிநின்றருளும்நம்பெருந்தகை இருந்தநலிமயத்து *
தாதுமல்கியபிண்டிவிண்டலர்கின்ற தழல்புரையெழில்நோக்கி *
பேதைவண்டுகளெரியெனவெருவரு பிருதிசென்றடைநெஞ்சே ! (௯)

↓↓ கரியமாமுகிற்படலங்கள் கிடந்தவைமுழங்கிட * களிறென்று
பெரியமாசுணம்வரையெனப்பெயர்தரு பிருதியெம்பெருமானை *
வரிகொள்வண்டறைபைம்பொழில் மங்கையர்கலியனதொலிமாலை *
அரியவின்னிசைபாடும்நல்லடியவர்க்கு அருவினையடையாவே. (௧௦)

அடிவரவு:—வாலி கலங்க துடி மறம் கரைசெய் பணங்கள் கார் இரவ ஓதி கரிய முற்ற.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௩ - ஆந் திருமொழி - முற்றமூத்து.



### திருவதரி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (முகாரிராகம் - ஆதிதாளம்.)

↓↓ முற்றமூத்துக்கோல்துணையா முன்னடிநோக்கிவளைந்து *
இற்றகால்போல்தள்ளிமெள்ள இருந்தங்கிளையாமுன் *
பெற்றதாய்போல்வந்தபேய்ச்சி பெருமுலையூடு * உயிரை
வற்றவாங்கியுண்டவாயான் வதரிவணங்குதுமே. (௧)

முதுகுபற்றிக்கைத்தலத்தால் முன்னொருகோலூன்றி *
விதிர்விதிர்த்துக்கண்சுழன்று மேற்கிளைகொண்டிருமி *
இதுவென்னப்பர்மூத்தவாறென்று இளையவரேசாமுன் *
மதுவுண்வண்டுபண்கள்பாடும் வதரிவணங்குதுமே. (௨)

உறிகள்போல்மெய்ந்நரம்பெழுந்து ஊன்தளர்ந்துள்ளமெள்கி *
நெறியைநோக்கிக்கண்சுழன்று நின்றுநடுங்காமுன் *
அறிதியாகில்நெஞ்சமன்பாய் ஆயிரநாமஞ்சொல்லி *
வெறிகொள்வண்டுபண்கள்பாடும் வதரிவணங்குதுமே. (௩)

பீளைசோரக்கண்ணிடுங்கிப் பித்தெழமூத்திருமி *
தாள்கள்நோவத்தம்மில்முட்டித் தள்ளிநடவாமுன் *
காளையாகிக்கன்றுமேய்த்துக் குன்றெடுத்தன்றுநின்றான் *
வாளைபாயும்தண்தடஞ்சூழ் வதரிவணங்குதுமே. (௪)

பண்டுகாமரானவாறும் பாவையர்வாயமுதம்
உண்டவாறும் * வாழ்ந்தவாறும் ஒக்கவுரைத்திருமி *
தண்டுகாலாவூன்றியூன்றித் தள்ளிநடவாமுன் *
வண்டுபாடும்தண்துழாயான் வதரிவணங்குதுமே. (௫)

எய்த்தசொல்லோடீளையேங்கி இருமிஇளைத்துடலம் *
பித்தர்போலச்சித்தம்வேறாய்ப் பேசியயராமுன் *
அத்தனெந்தையாதிமூர்த்தி ஆழ்கடலைக்கடைந்த *
மைத்தசோதியெம்பெருமான் வதரிவணங்குதுமே. (௬)

பப்பஅப்பர்மூத்தவாறு பாழ்ப்பதுசீத்திரளை
யொப்ப * ஐக்கள்போதவுந்த உந்தமர்காண்மினென்று *
செப்புநேர்மென்கொங்கைநல்லார் தாம்சிரியாதமுன்னம் *
வைப்பும்நங்கள்வாழ்வுமானான் வதரிவணங்குதுமே. (௭)

ஈசி! போமின்ஈங்கிரேன்மின் இருமியிளைத்தீர் * உள்ளம்
கூசியிட்டீரென்றுபேசும் குவளையங்கண்ணியர்பால் *
நாசமானபாசம்விட்டு நன்னெறிநோக்கலுறில் *
வாசமல்குதண்துழாயான் வதரிவணங்குதுமே. (௮)

புலன்கள்நையமெய்யில்மூத்துப் போந்திருந்துள்ளமெள்கி *
கலங்கஐக்கள்போதவுந்திக் கண்டபிதற்றாமுன் *
அலங்கலாயதண்துழாய்கொண்டு ஆயிரநாமஞ்சொல்லி *
வலங்கொள்தொண்டர்பாடியாடும் வதரிவணங்குதுமே. (௯)

‡‡ வண்டுதண்தேனுண்டுவாழும் வதரிநெடுமாலை *
கண்டல்வேலிமங்கைவேந்தன் கலியனொலிமாலை *
கொண்டுதொண்டர்பாடியாடக் கூடிடில் * நீள்விசும்பில்
அண்டமல்லால்மற்றவர்க்கு ஓராட்சியறியோமே. (௧௦)

அடிவரவு:—முற்ற முதுகு உறி பீளை பண்டு எய்த்த பப்ப ஈசி புலன்கள் வண்டு ஏனம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ச - ஆந் திருமொழி - ஏனமுனாகி.

### திருவதரியாச்சிரமம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பந்துவராளிராகம் - ஆதிதாளம்.)

‡‡ ஏனமுனாகியிருநிலமிடந்து அன்று
இணையடியிமையவர்வணங்க *
தானவனாகந்தரணியிற்புரளத்
தடஞ்சிலைகுனித்தவென்தலைவன் *
தேனமர்சோலைக்கற்பகம்பயந்த
தெய்வநன்னறுமலர்கொணர்ந்து *
வானவர்வணங்குங்கங்கையின்கரைமேல்
† வதரியாச்சிரமத்துள்ளானே. (க)

கானிடையுருவைச்சுடுசரந்துரந்து
கண்டுமுன்கொடுந்தொழிலுரவோன் *
ஊனுடையகலத்தடுகணைகுளிப்ப
உயிர்கவர்ந்துகந்தவெம்மொருவன் *
தேனுடைக்கமலத்தயனொடுதேவர்
சென்றுசென்றிறைஞ்சிட * பெருகு
வானிடைமுதுநீர்க்கங்கையின்கரைமேல்
வதரியாச்சிரமத்துள்ளானே. (உ)

இலங்கையுங்கடலுமடலருந்துப்பின்
இருநிதிக்கிறைவனும் * அரக்கர்
குலங்களுங்கெடமுன்கொடுந்தொழில்புரிந்த
கொற்றவன், கொழுஞ்சுடர்சுழன்ற *
விலங்கலிலுரிஞ்சிமேல்நின்றவிசும்பில்
வெண்டுகிற்கொடியெனவிரிந்து *
வலந்தருமணிநீர்க்கங்கையின்கரைமேல்
வதரியாச்சிரமத்துள்ளானே. (ங)

துணிவினியுனக்குச்சொல்லுவன்மனமே!
தொழுதெழுதொண்டர்கள்தமக்கு *
பிணியொழித்தமரர்பெருவிசும்பருளும்
பேரருளாளனெம்பெருமான் *

† 'வதரியாச்சிரமம்' எனவும் ஓதுவர்.

அணிமலர்க்குழலாரரம்பையர் துகிலும்
ஆரமும்வாரிவந்து * அணிநீர்
மணிகொழித்திழிந்தகங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (௪)

பேயிடைக்கிருந்துவந்தமற்றவள்தன்
பெருமுலைசுவைத்திட * பெற்ற
தாயிடைக்கிருத்தலஞ்சுவனென்று
தளர்ந்திட வளர்ந்தஎன்தலைவன் *
சேய்முகட்டுச்சியண்டமுஞ்சுமந்த
செம்பொன்செய்விலங்கலிலங்கு *
வாய்முகட்டிழிந்தகங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (௫)

தேரணங்கல்குற்செழுங்கயற்கண்ணி
திறத்து ஒருமறத்தொழில்புரிந்து *
பாரணங்கிமிலேறேழுமுன்னடர்த்த
பனிமுகில்வண்ணனெம்பெருமான் *
காரணந்தன்னாற்கடும்புனற்கயத்த
கருவரைபிளவெழக்குத்தி *
வாரணங்கொணர்ந்தகங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (௬)

வெந்திறற்களிறும்வேலைவாயமுதும்
விண்ணொடுவிண்ணவர்க்கரசும் *
இந்திரற்கருளியெமக்குமீந்தருளும்
எந்தையெம்மடிகளெம்பெருமான் *
அந்தரத்தமரரடியிணைவணங்க
ஆயிரமுகத்தினாலருளி *
மந்தரத்திழிந்தகங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (௭)

மான்முனிந்தொருகால்வரிசிலைவளைத்த
மன்னவன் பொன்னிறத்துரவோன் *
ஊன்முனிந்தவனதுடலிருபிளவா
உகிர்நுதிமடுத்து * அயனரனைத்

தான்முனிந்திட்ட வெந்திறற்சாபம்
தவிர்த்தவன் * தவம்புரிந்துயர்ந்த
மாமுனிகொணர்ந்தகங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (அ)

கொண்டல்மாருதங்கள்குலவரைதொகுநீர்க்
குரைகடலுலகுடனனைத்தும் *
உண்டமாவயிற்றேன்ஒண்சுடரேய்ந்த
உம்பருமூழியுமானன் *
அண்டமூடறுத்தன்றந்தரத்திழிந்து
அங்கவனியாளலமர * பெருகும்
மண்டுமாமணிநீர்க்கங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (கூ)

↓↓ வருந்திரைமணிநீர்க்கங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானை *
கருங்கடல்முந்நீர்வண்ணனையெண்ணிக்
கலியன்வாயொலிசெய்தபனுவல் *
வரஞ்செய்தவைந்துமைந்தும்வல்லார்கள்
வானவருலகுடன்மருவி *
இருங்கடலுலகமாண்டுவெண்குடைக்கீழ்
இமையவராகுவர்தாமே. (க0)

அடிவரவு :—ஏனம் கான் இலங்கை துணிவு பேய் தேர் வெந்திறல் மான் கொண்டல் வருந்திரை கலை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு-ஆம் திருமொழி - கலையுங்கரியும்.



### திருச்சாளக்கிராமம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பைரவிராகம் - ஆதிதாளம்.)

↓↓ கலையுங்கரியும்பரிமாவும் திரியுங்கானங்கடந்துபோய் *
சிலையுங்கணையுந்துணையாகச் சென்றான்வென்றிச்செருக்களத்து *
மலைகொண்டலைநீரணைகட்டி மதிள்நீரிலங்கைவாளரக்கர்
தலைவன் * தலைபத்தறுத்துகந்தான் சாளக்கிராமமடைநெஞ்சே! (க)

கடஞ்சூழ்கரியும்பரிமாவும் ஒலிமாந்தேருங்காலாளும் *
உடன்சூழ்ந்தெழுந்தகடியிலங்கைபொடியாவடிவாய்ச்சரந்துரந்தான் *
இடஞ்சூழ்ந்தெங்குமிருவிசும்பில் இமையோர்வணங்கமணங்கமழும் *
தடஞ்சூழ்ந்தெங்குமழகாய சாளக்கிராமமடைநெஞ்சே ! (௨)

உலவுதிரையுங்குலவரையும் ஊழிமுதலாவெண்திக்கும் *
நிலவுஞ்சுடருமிருளுமாய் நின்றான்வென்றிவிறலாழி
வலவன் * வானோர்தம்பெருமான் மருவாவரக்கர்க்கெஞ்ஞான்றும்
சலவன் * சலஞ்சூழ்ந்தழகாய சாளக்கிராமமடைநெஞ்சே ! (௩)

ஊரான்குடந்தையுத்தமன் ஒருகாலிருகால்சிலைவளைய *
தேராவரக்கர்தேர்வெள்ளஞ்செற்றான் வற்றாவருபுனல்சூழ்
பேரான் * பேராயிரமுடையான் பிறங்குசிறைவண்டறைகின்ற
தாரான் * தாராவயல்சூழ்ந்த சாளக்கிராமமடைநெஞ்சே ! (௪)

அடுத்தார்த்தெழுந்தாள்பிலவாய்விட்டலற அவள்மூக்கயில்வாளால்
விடுத்தான் * விளங்குசுடராழி விண்ணோர்பெருமான், நண்ணார்முன் *
கடுத்தார்த்தெழுந்தபெருமழையைக் கல்லொன்றேந்தியினநிரைக்காத்
தடுத்தான் * தடஞ்சூழ்ந்தழகாய சாளக்கிராமமடைநெஞ்சே ! (௫)

தாயாய்வந்தபேயுயிரும் தயிருமிழுதுமுடனுண்ட
வாயான் * தூயவரியுருவிற்குறளாய்ச்சென்று மாவலியை
ஏயானிரப்ப * மூவடிமண்ணின்றேதாவென்று உலகேழும்
தாயான் * காயாமலர்வண்ணன் சாளக்கிராமமடைநெஞ்சே ! (௬)

ஏனோரஞ்சவெஞ்சமத்துள் அரியாய்ப்பரியஇரணியனை *
ஊனாரகலம்பிளவெடுத்த ஒருவன்தானேயிருசுடராய் *
வானாய்த்தீயாய்மாருதமாய் மலையாயலைநீருலகனைத்தும்
தானாய் * தானுமானான்தன் சாளக்கிராமமடைநெஞ்சே ! (௭)

வெந்தாரென்புஞ்சுடுநீறும் மெய்யிற்பூசி, கையகத்து * ஓர்
சந்தார்தலைகொண்டு உலகேழுந்திரியும்பெரியோன்தான்சென்று * என்
எந்தாய் ! சாபந்தீரென்ன இலங்கமுதுநீர்திருமார்பில்
தந்தான் * சந்தார்பொழில்சூழ்ந்த சாளக்கிராமமடைநெஞ்சே ! (௮)

தொண்டாமினமுமிமையோரும் துணைநூல்மார்வினந்தணரும் *
அண்டா ! எமக்கேயருளாயென்று அணையுங்கோயிலருகெல்லாம் *
வண்டார்பொழிலின்பழனத்து வயலினயலேகயல்பாய *
தண்தாமரைகள்முகமலர்த்தும் சாளக்கிராமமடைநெஞ்சே ! (௯)

↓↓ தாராவாரும்வயல்சூழ்ந்த சாளக்கிராமத்தடிகளை *
காரார்புரவின்மங்கைவேந்தன் கலியனொலிசெய்தமிழ்மாலை *
ஆராருலகத்தறிவுடையார் அமரர்நன்னாட்டரசாள *
பேராயிரமுமோதுமின்கள் அன்றியிவையேபிதற்றுமினே. (க0)

அடிவரவு:—கலை கடம் உலவு ஊரான் அடுத்து தாய் ஏனோர் வெந்தார் தொண்டு தாரா வாணிலா.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## கூ - ஆந் திருமொழி - வாணிலாமுறுவல்.



### நைமிசாரணியம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (காம்போதிராகம் - ஆதிதாளம்)

↓↓ வாணிலாமுறுவற்சிறுநுதற்பெருந்தோள்
மாதரார்வனமுலைப்பயனே
பேணினேன் * அதனைப்பிழையெனக்கருதிப்
பேதையேன்பிறவிநோயறுப்பான் *
ஏணிலேனிருந்தேனெண்ணினேனெண்ணி
இளையவர்கலவியின்திறத்தை
நாணினேன் * வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய்! (க)

சிலம்படியுருவிற்கருநெடுங்கண்ணார்
திறத்தனாய் அறத்தையேமறந்து *
புலம்படிந்துண்ணும்போகமேபெருக்கிப்
போக்கினேன்பொழுதினைவாளா *
அலம்புரிதடக்கையாயனே! மாயா!
வானவர்க்கரசனே! * வானோர்
நலம்புரிந்திறைஞ்சும்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய்! (உ)

சூதினைப்பெருக்கிக்களவினைத்துணிந்து
சரிகுழல்மடந்தையர்திறத்து *
காதலேமிகுத்துக்கண்டவாதிரிந்த
தொண்டனேன், நமன்தமர்செய்யும் *

வேதனைக்கொடுங்கிநடுங்கினேன்
வேலைவெண்திரையலமரக்கடைந்த
நாதனே! * வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய்! (ங)

வம்புலாங்கூந்தல்மனைவியைத்துறந்து
பிறர்பொருள்தாரமென்றிவற்றை *
நம்பினாரிறந்தால்நமன்தமர்பற்றி
யெற்றிவைத்து, எரியெழுகின்ற *
செம்பினாலியன்றபாவையைப்
பாவீ! தழுவெனமொழிவதற்கஞ்சி *
நம்பனே! வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய்! (ச)

இடும்பையாலடர்ப்புண்டிடுமினோதுற்றென்று
இரந்தவர்க்கில்லையேயென்று *
நெடுஞ்சொலால்மறுத்தநீசனேனந்தோ!
நினைக்கிலேன்வினைப்பயன்தன்னை *
கடுஞ்சொலார்கடியார்காலனார்தமரால்
படுவதோர்கொடுமிறைக்கஞ்சி *
நடுங்கிநான்வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய்! (ரு)

கோடியமனத்தாற்சினத்தொழில்புரிந்து
திரிந்துநாயினத்தொடுந்திளைத்திட்டு *
ஓடியுமுழன்றுமுயிர்களேகொன்றேன்
உணர்விலேனாதலால் * நமனார்
பாடியைப்பெரிதும்பரிசழித்திட்டேன்
பரமனே! பாற்கடற்கிடந்தாய்! *
நாடிநான்வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய்! (சு)

நெஞ்சினால்நினைந்தும்வாயினால்மொழிந்தும்
நீதியல்லாதனசெய்தும் *
துஞ்சினார்செல்லுந்தொன்னெறிகேட்டே
துளங்கினேன்விளங்கனிமுனிந்தாய்! *

வஞ்சனேனடியேன்நெஞ்சினிற்பிரியா
வானவா! தானவர்க்கென்றும்
நஞ்சனே! * வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய்! (எ)

ஏவினார்கலியார்நலிகவென்று என்மேல்
எங்ஙனேவாழுமாறு * ஐவர்
கோவினார்செய்யுங்கொடுமையைமடித்தேன்
குறுங்குடிநெடுங்கடல்வண்ணா! *
பாவினாரின்சொல்பன்மலர்கொண்டு உன்
பாதமேபரவிநான்பணிந்து * என்
நாவினால்வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய்! (அ)

† ஊனிடைச்சுவர்வைத்தென்புதூண்நாட்டி
உரோமம்வேய்ந்தொன்பதுவாசல் *
தானுடைக்குரம்பைபிரியும்போது உன்தன்
சரணமேசரணமென்றிருந்தேன் *
தேனுடைக்கமலத்திருவினுக்கரசே!
திரைகொள்மாநெடுங்கடற்கிடந்தாய்! *
நானுடைத்தவத்தால்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய்! (கூ)

‡‡ ஏதம்வந்தணுகாவண்ணம்நாமெண்ணி
எழுமினோதொழுதுமென்று * இமையோர்
நாதன்வந்திறைஞ்சும் நைமிசாரணியத்
தெந்தையைச் சிந்தையுள் வைத்து *
காதலேமிகுத்தகலியன்வாயொலிசெய்
மாலைதான்கற்றுவல்லார்கள் *
ஓதநீர்வையகமாண்டுவெண்குடைக்கீழ்
உம்பருமாகுவர்தாமே. (க0)

அடிவரவு:—வாணிலா சிலம்பு சூதினை வம்பு இடும்பையால் கோடிய நெஞ்சினால் ஏவினார் ஊன் ஏதம் அங்கண்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'ஊனுடை' என்பதும் பாடம்.

## எ – ஆந் திருமொழி - அங்கண்ஞாலம்.

### சிங்கவேள்குன்றம்.

† கலிநிலைத்துறை. (கமாஸ்ராகம் - ரூபகதாளம்.)

அங்கண்ஞாலமஞ்ச அங்கோராளரியாய் * அவுணன்
பொங்கவாகம்வள்ளுகிரால் போழ்ந்தபுனிதனிடம் *
பைங்கணானைக்கொம்புகொண்டு பத்திமையால் * அடிக்கீழ்ச்
செங்கணாளியிட்டிறைஞ்சும் ‡ சிங்கவேள்குன்றமே. (க)

அலைத்தபேழ்வாய் வாளெயிற்றோர்கோளரியாய் * அவுணன்
கொலைக்கையாளன்நெஞ்சிடந்த கூருகிராளனிடம் *
மலைத்தசெல்சாத்தெறிந்தபூசல் வன்துடிவாய்கடுப்ப *
சிலைக்கைவேடர்தெழிப்பறாத சிங்கவேள்குன்றமே. (உ)

ஏய்ந்தபேழ்வாய் வாளெயிற்றோர்கோளரியாய் * அவுணன்
வாய்ந்தவாகம்வள்ளுகிரால் வகிர்ந்தவம்மானதிடம் *
ஓய்ந்தமாவுமுடைந்தகுன்றும் அன்றியும்நின்றழலால *
தேய்ந்தவேயுமல்லதில்லாச் சிங்கவேள்குன்றமே. (ங)

$ எவ்வம்வெவ்வேற்பொன்பெயரோன் ஏதலனின்னுயிரை
வவ்வி * ஆகம்வள்ளுகிரால் வகிர்ந்தவம்மானதிடம் *
கவ்வுநாயுங்கழுகும் உச்சிப்போதொடுகால்சுழன்று *
தெய்வமல்லாற்செல்லவொண்ணாச் சிங்கவேள்குன்றமே. (ச)

மென்றபேழ்வாய் வாளெயிற்றோர்கோளரியாய் * அவுணன்
பொன்றவாகம்வள்ளுகிரால் போழ்ந்தபுனிதனிடம் *
நின்றசெந்தீமொண்டுசூறை நீள்விசும்பூ § டிரிய *
சென்றுகாண்டற்கரியகோயில் சிங்கவேள்குன்றமே. (ரு)

எரிந்தபைங்கணிலங்குபேழ்வாய் எயிற்றொடிதெவ்வுருவென்று *
இரிந்துவானோர்கலங்கியோட இருந்தவம்மானதிடம் *
நெரிந்தவேயின்முழையுள்நின்று நீள்நெறிவாயுழுவை *
திரிந்தவானைச்சுவடுபார்க்கும் சிங்கவேள்குன்றமே. (சு)

முனைத்தசீற்றம்விண்சுடப்போய் மூவுலகும்பிறவும் *
அனைத்துமஞ்சவாளரியாய் இருந்தவம்மானதிடம் *
கனைத்ததீயுங்கல்லுமல்லா வில்லுடைவேடருமாய் *
தினைத்தனையுஞ்செல்லவொண்ணாச் சிங்கவேள்குன்றமே. (எ)

---

† இப்பாசுரங்களை அறுசீராகவும் சிலர் பிரிப்பர். ‡ 'சிங்கவேழ்குன்றமே' என்றும் வழங்குவர். $ 'எவ்வும்' என்பாருமுளர். § 'எரிய' என்றும பாடம்.

நாத்தழும்பநான்முகனும் ஈசனுமாய்முறையால்
ஏத்த * அங்கோராளரியாய் இருந்தவம்மானதிடம் *
காய்த்தவாகைநெற்றொலிப்பக் கல்லதர்வேய்ங்கழைபோய் *
தேய்த்ததீயால்விண்சிவக்கும் சிங்கவேள்குன்றமே. (அ)

† நல்லைநெஞ்சே! நாம்தொழுதும் நம்முடைநம்பெருமான் *
அல்லிமாதர்புல்கநின்ற ஆயிரந்தோளனிடம் *
நெல்லிமல்கிக்கல்லுடைப்பப் புல்லிலையார்த்து * அதர்வாய்ச்
சில்லிசில்லென்றொல்லறாத சிங்கவேள்குன்றமே. (௯)

↓↓ செங்கணாளியிட்டிறைஞ்சும் சிங்கவேள்குன்றுடைய *
எங்களீசனெம்பிரானை இருந்தமிழ்நூற்புலவன் *
மங்கையாளன்மன்னுதொல்சீர் வண்டறைதார்க்கலியன் *
செங்கையாளன்செஞ்சொல்மாலை வல்லவர் தீதிலரே. (௧0)

அடிவரவு:— அங்கண் அலைத்த ஏய்ந்த எவ்வம் மென்ற எரிந்த முனைத்த நா நல்லை செங்கண் கொங்கு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## அ-ஆம் திருமொழி - கொங்கலர்ந்த.



### திருவேங்கடம். (க)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

(யமுனாகல்யாணிராகம் - திரிபுடைதாளம்.)

↓↓ கொங்கலர்ந்தமலர்க்குருந்தமொசித்த கோவலனெம்பிரான் *
சங்குதங்குதடங்கடல் துயில்கொண்டதாமரைக்கண்ணினன் *
பொங்குபுள்ளினைவாய்பிளந்த புராணர்தம்மிடம் * பொங்குநீர்ச்
செங்கயல்திளைக்குஞ்சுனைத் திருவேங்கடம்அடைநெஞ்சமே! (க)

↓↓ பள்ளியாவதுபாற்கடல்அரங்கம் இரங்கவன்பேய்முலை *
பிள்ளையாயுயிருண்டஎந்தை பிரானவன்பெருகுமிடம் *
வெள்ளியான்கரியான் மணிநிறவண்ணனென்றெண்ணி*நாள்தொறும்
தெள்ளியார்வணங்கும்மலைத் திருவேங்கடம்அடைநெஞ்சமே! (உ)

நின்றமாமருதிற்றுவீழ நடந்தநின்மலன்நேமியான் *
என்றும்வானவர்கைதொழும் இணைத்தாமரையடியெம்பிரான் *
கன்றிமாரிபொழிந்திடக் கடிதாநிரைக்கிடர்நீக்குவான் *
சென்றுகுன்றமெடுத்தவன் திருவேங்கடம்அடைநெஞ்சமே! (௩)

† 'நல்ல' என்பதும் பாடம்.

⇊ பார்த்தற்காயன்றுபாரதங்கைசெய்திட்டு வென்றபரஞ்சுடர் *
கோத்தங்காயர்தம்பாடியில் குரவைபிணைந்தவெங்கோவலன் *
ஏத்துவார்தம்மனத்துள்ளான் இடவெந்தைமேவியஎம்பிரான் *
தீர்த்தநீர்த்தடஞ்சோலைசூழ் திருவேங்கடம்அடைநெஞ்சமே! (ச)

வண்கையானவுணர்க்குநாயகன் வேள்வியிற்சென்று, மாணியாய் *
மண்கையாலிரந்தான் மராமரமேழுமெய்தவலத்தினான் *
எண்கையானிமயத்துள்ளான் இருஞ்சோலைமேவியஎம்பிரான் *
திண்கைமாதுயர்தீர்த்தவன் திருவேங்கடம்அடைநெஞ்சமே! (ரு)

எண்திசைகளுமேழுலகமும்வாங்கிப் பொன்வயிற்றிற்பெய்து *
பண்டோராலிலைப்பள்ளிகொண்டவன் பான்மதிக்கிடர்தீர்த்தவன் *
ஒண்திறலவுணனுரத்துகிர்வைத்தவன் ஒள்ளெயிற்றொடு *
திண்திறலரியாயவன் திருவேங்கடம்அடைநெஞ்சமே! (சா)

பாருநீரெரிகாற்றினோடு ஆகாசமும்இவையாயினான் *
பேருமாயிரம்பேசநின்ற பிறப்பிலிபெருகுமிடம் *
காரும்வார்பனிநீள்விசும்பிடைச் † சோருமாமுகில்தோய்தர *
சேரும்வார்பொழில்சூழ் எழில்திருவேங்கடம்அடைநெஞ்சமே! (எ)

அம்பரமனல்கால்நிலம் சலமாகிநின்றஅமரர்கோன் *
வம்புலாமலர்மேல் மலிமடமங்கைதன்கொழுநனவன் *
கொம்பினன்னவிடைமடக்குறமாதர் நீளிதணந்தொறும் *
செம்புனம்மவைகாவல்கொள் திருவேங்கடம்அடைநெஞ்சமே! (அ)

பேசுமின்திருநாமமெட்டெழுத்தும் சொல்லிநின்று, பின்னரும் *
பேசுவார்தமையுய்யவாங்கிப் பிறப்பறுக்கும்பிரானிடம் *
வாசமாமலர்நாறுவார்பொழில் சூழ்தரும்உலகுக்கெலாம் *
தேசமாய்த்திகழும்மலைத் திருவேங்கடம்அடைநெஞ்சமே! (கூ)

⇊ செங்கயல்திளைக்குஞ்சுனைத் திருவேங்கடத்துறைசெல்வனை *
மங்கையர்தலைவன்கலிகன்றி வண்தமிழ்ச்செஞ்சொல்மாலைகள் *
சங்கையின்றித்தரித்துரைக்கவல்லார்கள் தஞ்சமதாகவே *
வங்கமாகடல்வையங்காவலராகி வானுலகாள்வரே. (க0)

அடிவரவு—கொங்கு பள்ளி நின்ற பார்த்தன் வண்கையான் எண்திசைகள் பார் அம்பரம் பேசுமின் செங்கயல் தாய்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'சேருமாமுகில் தேய்தர' என்பதும் பாடம்.

## கூ - ஆந் திருமொழி - தாயேதந்தை.

திருவேங்கடம். (உ)

கலிநிலைத்துறை. (முகாரிராகம் - அடதாளம்.)

‡‡ தாயேதந்தையென்றும் தாரமேகிளைமக்களென்றும் *
நோயேபட்டொழிந்தேன் நுன்னைக்காண்பதோராசையினால் *
வேயேய்பூம்பொழில்சூழ் விரையார்திருவேங்கடவா! *
நாயேன்வந்தடைந்தேன் நல்கியாளென்னைக்கொண்டருளே. (க)

மானேய்கண்மடவார் மயக்கிற்பட்டு * மாநிலத்து
நானேநானாவிதநரகம்புகும் பாவஞ்செய்தேன் *
தேனேய்பூம்பொழில்சூழ் திருவேங்கடமாமலை * என்
ஆனாய்! வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. (உ)

கொன்றேன்பல்லுயிரைக் குறிக்கோளொன்றிலாமையினால் *
என்றேனுமிரந்தார்க்கு இனிதாகவுரைத்தறியேன் *
குன்றேய்மேகமதிர் குளிர்மாமலைவேங்கடவா! *
அன்றேவந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. (ங)

குலந்தானெத்தனையும் பிறந்தேயிறந்தெய்த்தொழிந்தேன் *
நலந்தானொன்றுமிலேன் நல்லதோரறஞ்செய்துமிலேன் *
நிலந்தோய் † நீள்முகில்சேர் நெறியார்திருவேங்கடவா! *
அலந்தேன்வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. (ச)

எப்பாவம்பலவும் இவையேசெய்திளைத்தொழிந்தேன் *
துப்பா! நின்னடியே தொடர்ந்தேத்தவும்கிற்கின்றிலேன் *
செப்பார்திண்வரைசூழ் திருவேங்கடமாமலை * என்
அப்பா! வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. (ரு)

மண்ணாய்நீரெரிகால் மஞ்சுலாவுமாகாசமுமாம் *
புண்ணாராக்கைதன்னுள் புலம்பித்தளர்ந்தெய்த்தொழிந்தேன் *
விண்ணார்நீள்சிகர விரையார்திருவேங்கடவா! *
அண்ணா! வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. (சா)

தெரியேன்பாலகனாய்ப் பலதீமைகள்செய்துமிட்டேன் *
பெரியேனாயினபின் பிறர்க்கேயுழைத்தேழையானேன் *
கரிசேர்பூம்பொழில்சூழ் கனமாமலைவேங்கடவா! *
அரியே! வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. (எ)

† 'நீர்முகில்' என்பது சிலர் பாடம்.

நோற்றேன்பல்பிறவி நுன்னைக்காண்பதோராசையினால் *
ஏற்றேன்இப்பிறப்பே இடருற்றனனெம்பெருமான்! *
கோல்தேன்பாய்ந்தொழுகும் குளிர்சோலைசூழ்வேங்கடவா! *
ஆற்றேன்வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. (அ)

பற்றேலொன்றுமிலேன் பாவமேசெய்துபாவியானேன் *
மற்றேலொன்றறியேன் மாயனே! எங்கள்மாதவனே! *
கல்தேன்பாய்ந்தொழுகும் கமலச்சுனைவேங்கடவா! *
அற்றேன்வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. (௯)

↓↓ கண்ணாயேழுலகுக்குயிராய எங்கார்வண்ணனை *
விண்ணோர்தாம்பரவும் பொழில்வேங்கடவேதியனை *
திண்ணார்மாடங்கள்சூழ் திருமங்கையர்கோன்கலியன் *
பண்ணார்பாடல்பத்தும் பயில்வார்க்கில்லைபாவங்களே. (க௦)

அடிவரவு:—தாய் மான் கொன்றேன் குலம் எப்பாவம் மண் தெரியேன் நோற்றேன் பற்றேல் கண்ணாய் கண்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## க௦ - ஆந் திருமொழி - கண்ணார்கடல்சூழ்.



### திருவேங்கடம். (௬)

கலிவிருத்தம். (நாதநாமக்கிரியைராகம் - திரிபுடைதாளம்.)

↓↓ கண்ணார்கடல்சூழ் இலங்கைக்கிறைவன்தன் *
திண்ணாகம்பிளக்கச் சரஞ்செலவுய்த்தாய் *
விண்ணோர்தொழும் வேங்கடமாமலைமேய *
அண்ணா! அடியேனிடரைக்களையாயே. (க)

† இலங்கைப்பதிக்கு அன்றிறையாய * அரக்கர்
குலங்கெட்டவர்மாளக் கொடிப்புள்திரித்தாய்! *
விலங்கற்குடுமித் திருவேங்கடம்மேய *
அலங்கல்துளபமுடியாய்! அருளாயே. (உ)

நீரார்கடலும் நிலனும்முழுதுண்டு *
ஏராலமிளந்தளிர்மேல் துயிலெந்தாய்! *
சீரார்திருவேங்கட மாமலைமேய *
ஆராவமுதே! அடியேற்கருளாயே. (௩)

† 'இலங்கைப்பதிக்கென்றிறை' என்றும் பாடமுண்டு.

உண்டாயுறிமேல் நறுநெய் அமுதாக *
கொண்டாய்குறளாய் நிலமீரடியாலே *
விண்தோய்சிகரத் திருவேங்கடம்மேய *
அண்டா! அடியேனுக்கருள்புரியாயே. (ச)

தூணாயதனூடு அரியாய்வந்துதோன்றி *
பேணாவவுணனுடலம் பிளந்திட்டாய் *
சேணார்திருவேங்கட மாமலைமேய *
கோணாகணையாய்! குறிக்கொள்எனைநீயே. (ரு)

மன்னா இம்மனிசப்பிறவியைநீக்கி *
தன்னாக்கித் தன்னின்னருள்செய்யுந்தலைவன் *
மின்னார்முகில்சேர் திருவேங்கடம்மேய *
என்னானையென்னப்பன் என்நெஞ்சிலுளானே. (சா)

மானேய்மடநோக்கிதிறத்து எதிர்வந்த *
ஆனேழ்விடைசெற்ற அணிவரைத்தோளா! *
தேனே! திருவேங்கடமாமலைமேய *
கோனே! என்மனம் குடிகொண்டிருந்தாயே. (எ)

சேயனணியன் எனசிந்தையுள்நின்ற
மாயன் *மணிவாளொளி வெண்தரளங்கள் *
வேய்விண்டுதிர் வேங்கடமாமலைமேய *
ஆயனடியல்லது மற்றறியேனே. (அ)

வந்தாயென்மனம்புகுந்தாய் மன்னிநின்றாய் *
நந்தாதகொழுஞ்சுடரே! எங்கள்நம்பீ! *
சிந்தாமணியே! திருவேங்கடம்மேய
எந்தாய்! * இனியானுன்னை என்றும்விடேனே. (கூ)

↓↓ வில்லார்மலி வேங்கடமாமலைமேய *
மல்லார்திரள்தோள் மணிவண்ணனம்மானை *
கல்லார்திரள்தோள் கலியன்சொன்னமாலை *
வல்லாரவர் வானவராகுவர்தாமே. (கO)

அடிவரவு:—கண் இலங்கை நீர் உண்டாய் தூணாய் மன்னா மானேய் சேயன் வந்தாய் வில் வானவர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## இரண்டாம்பத்து.

### ௧ - ஆந் திருமொழி - வானவர்.

திருவேங்கடம். (௪)

**ஆசிரியத்துறை. (ஆனந்தபைரவிராகம் - ரூபகதாளம்.)**

⸸⸸வானவர்தங்கள்சிந்தைபோல என்னெஞ்சமே! இனிதுவந்து * மாதவ
மானவர்தங்கள்சிந்தை அமர்ந்துறைகின்றவெந்தை *
கானவரிடுகாரகிற்புகை ஓங்குவேங்கடம்மேவி * மாண்குற
ளானவந்தணற்கு இன்றடிமைத்தொழில்பூண்டாயே! (௧)

உறவுசுற்றமென்றொன்றிலா ஒருவன்உகந்தவர்தம்மை * மண்மிசைப்
பிறவியேகெடுப்பான் அதுகண்டென்னெஞ்சமென்பாய்! *
குறவர்மாதர்களோடு வண்டுகுறிஞ்சிமருளிசைபாடும்வேங்கடத்து *
அறவனாயகற்கு இன்றடிமைத்தொழில்பூண்டாயே! (௨)

இண்டையாயினகொண்டு தொண்டர்களேத்துவாருறவோடும் * வானிடைக்
கொண்டுபோயிடவும் அதுகண்டென்னெஞ்சமென்பாய்! *
வண்டுவாழ்வடவேங்கடமலை கோயில்கொண்டதனோடும் * மீமிசை
அண்டமாண்டிருப்பாற்கு அடிமைத்தொழில்பூண்டாயே! (௩)

பாவியாதுசெய்தாயென்னெஞ்சமே! பண்டுதொண்டுசெய்தாரை * மண்
மேவியாட்கொண்டுபோய் விசும்பேறவைக்குமெந்தை * [மிசை
† கோவிநாயகன்கொண்டலுந்துயர் வேங்கடமலையாண்டு * வானவர்
ஆவியாயிருப்பார்க்கு அடிமைத்தொழில்பூண்டாயே! (௪)

பொங்குபோதியும்பிண்டியுமுடைப் புத்தர்நோன்பியர்பள்ளியுள்ளு
தங்கள்தேவரும்தாங்களுமேயாக என்னெஞ்சமென்பாய்! * [றை *
எங்கும்வானவர்தானவர்நிறைந்தேத்தும் வேங்கடமேவிநின்றருள் *
அங்கணாயகற்கு இன்றடிமைத்தொழில்பூண்டாயே! (௫)

துவரியாடையர்மட்டையர் சமண்தொண்டர்கள்மண்டியுண்டுபின்னரு
தமரும்தாங்களுமேதடிக்க என்னெஞ்சமென்பாய்! * [ம் *
கவரிமாக்கணஞ்சேரும் வேங்கடம்கோயில்கொண்டகண்ணார்விசும்பிடை *
அமரநாயகற்கு இன்றடிமைத்தொழில்பூண்டாயே! (௬)

---

† 'கோவல்நாயகன்' என்பதும் பாடம்,

தருக்கினாற்சமண்செய்து சோறுதண்தயிரினால்திரளை * மிடற்றிடை
நெருக்குவாரலக்கணதுகண்டு என்நெஞ்சமென்பாய்! * [னிடை
மருட்கள்வண்டுகள்பாடும் வேங்கடம்கோயில்கொண்டதனோடும் * வா
அருக்கன்மேவிநிற்பாற்கு அடிமைத்தொழில்பூண்டாயே. (எ)

சேயனணியன்சிறியன்பெரியனென்பதும் சிலர்பேசக்கேட்டிருந்
தே * என்நெஞ்சமென்பாய்! எனக்கொன்றுசொல்லாதே *
வேய்கள்நின்றுவெண்முத்தமேசொரி வேங்கடமலைகோயில்மேவிய *
† ஆயர்நாயகற்கு இன்றடிமைத்தொழில்பூண்டாயே (அ)

கூடியாடியுரைத்ததேயுரைத்தாய் என்நெஞ்சமென்பாய்! துணிந்துகே
பாடியாடிப்பலரும் பணிந்தேத்திக் ‡ காண்கிலர் * [துள் *
ஆடுதாமரையோனுமீசனும் அமரர்கோனும்நின்றேத்தும் * வேங்கடத்
தாடுகூத்தனுக்கு இன்றடிமைத்தொழில்பூண்டாயே. (௯)

↓↓ மின்னுமாமுகில்மேவு தண்திருவேங்கடமலைகோயில்மேவிய *
அன்னமாய்நிகழ்ந்த அமரர்பெருமானை *
கன்னிமாமதில்மங்கையர்கலிகன்றி இன்தமிழாலுரைத்த * இம்
மன்னுபாடல்வல்லார்க்கு இடமாகும்வானுலகே. (௧௦)

அடிவரவு:—வானவர் உறவு இண்டை பாவியாது பொங்கு துவரி தருக்கினால் சேயன் கூடி மின்னு காசையாடை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## உ - ஆந் திருமொழி - காசையாடை.



### திருவெவ்வுளூர்.

கலிநிலைத்துறை. (சமாஸ்ராகம் - ரூபகதாளம்.)

↓↓காசையாடைமூடியோடிக் காதல்செய்தானவனூர் *
நாசமாகநம்பவல்ல நம்பிநம்பெருமான் *
வேயினன்னதோள்மடவார் வெண்ணெயுண்டானிவனென்று *
ஏசநின்றவெம்பெருமான் எவ்வுட்கிடந்தானே. (௧)

---

† 'ஆயநாயகற்கு' என்றும் பாடமோதுவர். ‡ 'காண்கிலா' என்பதும் பாடம்.

தையலாள்மேல்காதல்செய்த தானவன்வாளரக்கன் *
பொய்யிலாதபொன்முடிகள் ஒன்பதோடொன்றும் * அன்று
செய்தவெம்போர்தன்னில் அங்கோர்செஞ்சரத்தாலுருள *
எய்தவெந்தையெம்பெருமான் எவ்வுட்கிடந்தானே. (உ)

முன்னோர்தூது வானரத்தின்வாயில்மொழிந்து * அரக்கன்
மன்னூர்தன்னை வாளியினல்மாளமுனிந்து * அவனே
பின்னோர்தூது ஆதிமன்னர்க்காகி, பெருநிலத்தார் *
இன்னார்தூதனெனநின்றான் எவ்வுட்கிடந்தானே. (௩)

பந்தணைந்தமெல்விரலாள் பாவைதன்காரணத்தால் *
வெந்திறலேறேழும் வென்றவேந்தன், விரிபுகழ்சேர் *
நந்தன்மைந்தனகவாகும் நம்பிநம்பெருமான் *
எந்தைதந்தைதம்பெருமான் எவ்வுட்கிடந்தானே. (௪)

பாலனாகிஞாலமேழுமுண்டு பண்டாலிலைமேல் *
சாலநாளும்பள்ளிகொள்ளும் தாமரைக்கண்ணன், எண்ணில் *
நீலமார்வண்டுண்டுவாழும் நெய்தலந்தண்கழனி *
ஏலநாறும்பைம்புறவில் எவ்வுட்கிடந்தானே (௫)

சோத்தநம்பியென்று தொண்டர்மிண்டித்தொடர்ந்தழைக்கும் *
ஆத்தனம்பிசெங்கணம்பி ஆகிலும்தேவர்க்கெல்லாம் *
மூத்தநம்பிமுக்கணம்பியென்று முனிவர்தொழுது
ஏத்தும் * நம்பியெம்பெருமான் எவ்வுட்கிடந்தானே. (௬)

திங்களப்பு வானெரிகாலாகி * திசைமுகனார்
தங்களப்பன்சாமியப்பன் பாகத்திருந்த * வண்டுண்
தொங்கலப்புநீள்முடியான் சூழ்கழல்சூடநின்ற *
எங்களப்பனெம்பெருமான் எவ்வுட்கிடந்தானே (௭)

முனிவன்மூர்த்திமூவராகி வேதம்விரித்துரைத்த
புனிதன் * பூவைவண்ணனண்ணல்புண்ணியன் விண்ணவர்கோன் *
தனியன்சேயன்தானொருவனாகிலும் தன்னடியார்க்கு
இனியன் * எந்தையெம்பெருமான் எவ்வுட்கிடந்தானே. (௮)

பந்திருக்கும்மெல்விரலாள் பாவைபனிமலராள் *
வந்திருக்கும்மார்வன் நீலமேனிமணிவண்ணன் *
அந்தரத்தில்வாழும் வானோர்நாயகனாயமைந்த *
இந்திரற்குந்தம்பெருமான் எவ்வுட்கிடந்தானே. (௯)

↓↓இண்டைகொண்டுதொண்டரேத்த எவ்வுட்கிடந்தானை *
வண்டுபாடும்பைம்புறவின் மங்கையர்கோன்கலியன் *
கொண்டசீரால்தண்தமிழ்செய்மாலை ஈரைந்தும்வல்லார் *
அண்டமாள்வதாணை அன்றேலாள்வரமருலகே. (௧௦)

அடிவரவு:—காசையாடை தையலாள் முன் பந்தணைந்த பாலன் சோத்தம் திங்கள் முனிவன் பந்திருக்கும் இண்டை வில்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆந் திருமொழி - விற்பெருவிழவும்.



திருவல்லிக்கேணி.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தோடிராகம் - ஆதிதாளம்.)

↓↓ விற்பெருவிழவும்கஞ்சனும்மல்லும்
வேழமும்பாகனும்வீழ *
செற்றவன்தன்னை, புரமெரிசெய்த
சிவனுறுதுயர்களைதேவை *
பற்றலர்வீயக்கோல்கையில்கொண்டு
பார்த்தன்தன்தேர்முன்நின்றானை *
சிற்றவைபணியால்முடிதுறந்தானைத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (௧)

↓↓ வேதத்தைவேதத்தின்சுவைப்பயனை
விழுமியமுனிவர்விழுங்கும் *
கோதிலின்கனியைநந்தனார்களிற்றைக்
குவலயத்தோர்தொழுதேத்தும் *
ஆதியையமுதைஎன்னையாளுடை
யப்பனை ஒப்பவரில்லா
மாதர்கள்வாழும் * மாடமாமயிலைத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (௨)

வஞ்சனைசெய்யத்தாயுருவாகி
வந்தபேயலறிமண்சேர *
நஞ்சமர்முலையூடுயிர்செகவுண்ட
நாதனைத் தானவர்கூற்றை *

விஞ்சைவானவர்சாரணர்சித்தர்
† வியந்துதிசெய்யப்பெண்ணுருவாகி *
அஞ்சுவையமுதமன்றளித்தானைத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (௩)

இந்திரனுக்கென்றுயர்களெடுத்த
எழில்விழவிற்பழநடைசெய் *
மந்திரவிதியிற்பூசனைபெறாது
மழைபொழிந்திடத்தளர்ந்து * ஆயர்
எந்தம்மோடினவாநிரைதளராமல்
எம்பெருமான்! அருளென்ன *
அந்தமில்வரையால்மழைதடுத்தானைத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (௪)

இன்துணைப்பதுமத்தலர்மகள்தனக்கு
மின்பன் நற்புவிதனக்கிறைவன் *
தன்துணையாயர்பாவைநப்பின்னை
தனக்கிறை மற்றையோர்க்கெல்லாம்
வன்துணை * பஞ்சபாண்டவர்க்காகி
வாயுரைதூதுசென்றியங்கும்
‡ என்துணை * எந்தைதந்தைதம்மானைத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (௫)

அந்தகன்சிறுவனரசர்தமரசற்கிளையவன்
அணியிழையைச்சென்று *
எந்தமக்குரிமைசெய்யெனத்தரியாது
எம்பெருமான்! அருளென்ன *
§ சந்தமல்குழலாளலக்கண் நூற்றுவர்தம்
பெண்டிருமெய்திநூலிழப்ப *
இந்திரன்சிறுவன்தேர்முன்நின்றானைத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (௬)

↓↓ பரதனும்தம்பிசத்துருக்கனனும்
இலக்குமனோடுமைதிலியும் *
இரவும்நன்பகலும்துதிசெய்யநின்ற
இராவணாந்தகனையெம்மானை *

---

† 'வியந்துதுதிசெய்ய' என்ற பாடம் ஏற்கும். ‡ 'இன்துணை' என்பதும் பாடம். § 'சந்தமர்' என்பதும் பாடம்.

குரவமேகமழும்குளிர்பொழிலூடு
குயிலொடுமயில்கள்நின்றால *
இரவியின்கதிர்கள்நுழைதல்செய்தறியாத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (எ)

↓↓ பள்ளியிலோதிவந்ததன்சிறுவன்
வாயிலோராயிரநாமம் *
ஒள்ளியவாகிப்போதவாங்கதனுக்கு
ஒன்றுமோர்பொறுப்பிலனாகி *
பிள்ளையைச்சீறிவெகுண்டுதூண்புடைப்பப்
பிறையெயிற்றனல்விழிபேழ்வாய் *
தெள்ளியசிங்கமாகியதேவைத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (அ)

↓↓ மீனமர்பொய்கைநாண்மலர்கொய்வான்
வேட்கையினோடுசென்றிழிந்த *
கானமர்வேழம்கையெடுத்தலறக்
கராவதன்காலினைக்கதுவ *
ஆனையின்துயரந்தீரப்புள்ளூர்ந்து
சென்றுநின்றாழிதொட்டானை *
தேனமர்சோலைமாடமாமயிலைத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (௯)

↓↓ மன்னுதண்பொழிலும்வாவியும்மதிளும்
மாடமாளிகையும்மண்டபமும் *
தென்னன்தொண்டையர்கோன்செய்தநன்மயிலைத்
திருவல்லிக்கேணிநின்றானை *
கன்னிநன்மாடமங்கையர்தலைவன்
காமருசீர்க்கலிகன்றி *
சொன்னசொல்மாலைபத்துடன்வல்லார்
சுகமினிதாள்வர்வானுலகே. (௧0)

அடிவரவு:—வில் வேதத்தை வஞ்சனை இந்திரனுக்கு இன்துணை அந்தகன் பரதன் பள்ளியில் மீனமர் மன்னு அன்றாயா.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ச - ஆந் திருமொழி - அன்றாயர்.

### திருநீர்மலை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (கல்யாணிராகம் - ஆதிதாளம்.)

⁂ அன்றாயர்குலக்கொடியோடு
அணிமாமலர்மங்கையொடன்பளவி * அவுணர்க்
கென்றானுமிரக்கமிலாதவனுக்கு
உறையுமிடமாவது * இரும்பொழில்சூழ்
நன்றாயபுனல்நறையூர்திருவாலிகுடந்தை
தடந்திகழ்கோவல்நகர் *
நின்றானிருந்தான்கிடந்தான்நடந்தாற்கிடம்
மாமலையாவதுநீர்மலையே. (க)

காண்டாவனமென்பதொர்காடு
அமரர்க்கரையன்னதுகண்டவன்நிற்க * முனே
மூண்டாரழலுண்ணமுனிந்ததுவும் அதுவன்றியும்
முன்னுலகம்பொறைதீர்த்
தாண்டான் * அவுணனவன்மார்வகலம்
உகிரால்வகிராகமுனிந்து * அரியாய்
நீண்டான் குறளாகிநிமிர்ந்தவனுக்கிடம்
மாமலையாவதுநீர்மலையே. (உ)

அலமன்னுமடற்சுரிசங்க † மெடுத்து
அடலாழியினாலணியாருருவின் *
புலமன்னுவடம்புனைகொங்கையினாள்
பொறைதீரமுனாளடுவாளமரில் *
பலமன்னர்படச்சுடராழியினைப்
பகலோன்மறையப்பணிகொண்டு * அணிசேர்
நிலமன்னனுமாயுலகாண்டவனுக்கிடம்
மாமலையாவதுநீர்மலையே. (௩)

தாங்காததொராளரியாய் அவுணன்தனை
வீடமுனிந்து, அவனாலமரும் *
பூங்கோதையர்பொங்கெரிமூழ்கவிளைத்து
அதுவன்றியும் வென்றிகொள்வாளமரில் *

† 'அடுத்து' என்பதும் பாடம்.

பாங்காகமுனைவரொடன்பளவிப்
பதிற்றைந்திரட்டிப்படைவேந்தர்பட *
நீங்காச்செருவில்நிறைகாத்தவனுக்கிடம்
மாமலையாவதுநீர்மலையே. (௪)

மாலுங்கடலாரமலைக்குவடிட்டணைகட்டி
வரம்புருவ * மதிசேர்
கோலமதிளாயவிலங்கைகெடப் படை
தொட்டொருகாலமரிலதிர *
காலமிதுவென்றயன்வாளியினல்
கதிர்நீள்முடிபத்துமறுததமரும் *
†நீலமுகில்வண்ணனெமக்கிறைவற்கிடம்
மாமலையாவதுநீர்மலையே. (௫)

பாராருலகும்பனிமால்வரையும்
கடலுஞ்சுடரும்மிவையுண்டும் * எனக்
காராதெனநின்றவனெம்பெருமான்
அலைநீருலகுக்கரசாகிய * அப்
பேரானைமுனிந்தமுனிக்கரையன்
பிறரில்லைநுனக்கெனுமெல்லையினன் *
நீரார்பேரான்நெடுமாலவனுக்கிடம்
மாமலையாவதுநீர்மலையே. (௬)

புகராருருவாகிமுனிந்தவனைப்
புகழ்வீடமுனிந்துயிருண்டு * அசுரன்
நகராயினபாழ்படநாமமெறிந்ததுவன்றியும்
வென்றிகொள்வாளவுணன் *
பகராதவனாயிரநாமம் அடிப்
பணியாதவனை, பணியாலமரில் *
நிகராயவன்நெஞ்சிடந்தானவனுக்கிடம்
மாமலையாவதுநீர்மலையே. (௭)

பிச்சச்சிறுபீலிபிடித்துலகில்
பிணந்தின்மடவாரவர்போல் * அங்ஙனே
அச்சமிலர்நாணிலராதன்மையால்
அவர்செய்கைவெறுத்தணிமாமலர்தூய் *

† 'நீலமுகில்வண்ணரெமக்கிறைவர்க்கிடம்' என்றும் வழங்குவர்.

நச்சிநமனாரடையாமைநமக்கருள்செய்யென
உள்குழைந்து, ஆர்வமொடு *
நிச்சம்நினைவார்க்கருள்செய்யுமவற்கிடம்
மாமலையாவதுநீர்மலையே. (அ)

பேசுமளவன்றிதுவம்மின் நமர் !
பிறர்கேட்பதன்முன், பணிவார்வினைகள் *
நாசமதுசெய்திடுமாதன்மையால்
அதுவேநமதுய்விடம், நாள்மலர்மேல் *
வாசமணிவண்டறைபைம்புறவில்
மனமைந்தொடுநைந்துழல்வார் * மதியில்
நீசரவர்சென்றடையாதவனுக்கிடம்
மாமலையாவதுநீர்மலையே. (க)

⸸⸸ நெடுமாலவன்மேவியநீர்மலைமேல்
நிலவும்புகழ்மங்கையர்கோன் * அமரில்
கடமாகளியானைவல்லான் கலிய
னொலிசெய்தமிழ்மாலைவல்லார்க்கு * உடனே
விடுமால்வினைவேண்டிடில் மேலுலகு
மெளிதாயிடும், அன்றியிலங்கொலிசேர் *
கொடுமாகடல்வையகமாண்டு மதிக்
குடைமன்னவராயடிகூடுவரே. (கo)

அடிவரவு:—அன்றாயர் காண்டா அலம் தாங்காதது மாலும் பார் புகர் பிச்சம் பேசும் நெடுமால் பாராயது.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



ரு - ஆந் திருமொழி - பாராயது.



திருக்கடல்மல்லை. (க)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (கல்யாணிராகம்-ஆதிதாளம்.)

⸸⸸ பாராயதுண்டுமிழ்ந்தபவளத்தூணைப்
படுகடலிலமுதத்தைப்பரிவாய்கீண்ட
சீரானை * எம்மானைத்தொண்டர்தங்கள்
சிந்தையுள்ளே முளைத்தெழுந்ததீங்கரும்பினை *

போரானைக்கொம்பொசித்தபோரேற்றினைப்
புணர்மருதமிறநடந்தபொற்குன்றினை *
காரானையிடர்கடிந்தகற்பகத்தைக்
கண்டதுநான்கடல்மல்லைத்தலசயனத்தே (க)

‡ பூண்டவத்தம்பிறர்க்கடைந்துதொண்டுபட்டுப்
பொய்ந்நூலைமெய்ந்நூலென்றென்றுமோதி
மாண்டு * அவத்தம்போகாதேவம்மின் எந்தை
என்வணங்கப்படுவானை * கணங்களேத்தும்
† நீண்டவத்தைக்கருமுகிலை யெம்மான்தன்னை
நின்றவூர்நித்திலத்தை, தொத்தார்சோலை *
காண்டவத்தைக்கனலெரிவாய்ப்பெய்வித்தானைக்
கண்டதுநான்கடல்மல்லைத்தலசயனத்தே. (உ)

உடம்புருவில்மூன்றொன்றாய்மூர்த்திவேறாய்
உலகுய்யநின்றானை * அன்றுபேய்ச்சி
விடம்பருகுவித்தகனைக் கன்றுமேய்த்து
விளையாடவல்லானை, வரைமீகானில் *
தடம்பருகுகருமுகிலைத்தஞ்சைக்கோயில்
தவநெறிக்கோர்பெருநெறியை, வையங்காக்கும் *
கடும்பரிமேல்கற்கியைநான்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனத்தே. (ங)

பேய்த்தாயைமுலையுண்டபிள்ளைதன்னைப்
பிணைமருப்பிற்கருங்களிற்றை, பிணைமான்நோக்கின் *
ஆய்த்தாயர்தயிர்வெண்ணெயமர்ந்தகோவை
அந்தணர்தமமுதத்தை, குரவைமுன்னே
கோத்தானை * குடமாடுகூத்தன்தன்னைக்
கோகுலங்கள்தளராமற்குன்றமேந்திக்
காத்தானை * எம்மானைக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனத்தே. (ச)

பாய்ந்தானைத்திரிசகடம்பாறிவீழப்
பாலகனாயாலிலையிற்பள்ளியின்ப
மேய்ந்தானை * இலங்கொளிசேர்மணிக்குன்றன்ன
ஈரிரண்டுமால்வரைத்தோளெம்மான்தன்னை *

---

† 'நீண்ட அத்தக்கருமுகிலை' என்பதும் பாடம்.
‡ 'அம்மான்தன்னை' என்பது சிலர்பாடம்.

தோய்ந்தானைநிலமகள்தோள் தூதிற்சென்று அப்
பொய்யறைவாய்ப்புகப்பெய்தமல்லர் மங்கக்
காய்ந்தானை * எம்மானைக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனத்தே. (௫)

கிடந்தானைத்தடங்கடலுள்பணங்கள்மேவிக்
கிளர்பொறியமறிதிரியவதனின்பின்னே
படர்ந்தானை * படுமதத்தகளிற்றின்கொம்பு
பறித்தானைப் பாரிடத்தையெயிறுகீற
இடந்தானை * வளைமருப்பினேனமாகி,
இருநிலனும்பெருவிசும்புமெய்தாவண்ணம்
கடந்தானை * எம்மானைக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனத்தே. (௬)

பேணாதவலியரக்கர்மெலியவன்று
பெருவரைத்தோளிறநெரித்து, அன்றவுணர்கோனை *
பூணாகம்பிளவெடுத்தபோர்வல்லோனைப்
பொருகடலுள் துயிலமர்ந்தபுள்ளூர்தியை *
ஊணாகப்பேய்முலைநஞ்சுண்டான்தன்னை
உள்ளுவாருள்ளத்தேயுறைகின்றானை *
காணாதுதிரிதருவேன்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனத்தே. (௭)

பெண்ணாகியின்னமுதம்வஞ்சித்தானைப்
பிறையெயிற்றன்றடலரியாய்ப்பெருகினானை *
தண்ணார்ந்தவார்புனல்சூழ்மெய்யமென்னும்
தடவரைமேற்கிடந்தானை, பணங்கள்மேவி *
எண்ணானையெண்ணிறந்தபுகழினானை
இலங்கொளிசேரரவிந்தம்போன்றுநீண்ட
கண்ணானை * கண்ணாரக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனத்தே. (௮)

தொண்டாயார்தாம்பரவுமடியினானை,
படிகடந்ததாளாளற்காளாயுய்தல்
விண்டானை * தென்னிலங்கையரக்கர்வேந்தை
விலங்குண்ணவலங்கைவாய்ச்சரங்களாண்டு *

பண்டாயவேதங்கள்நான்கும்ஐந்து
 வேள்விகளும் கேள்வியோடங்கமாறும்
கண்டானை * தொண்டனேன்கண்டுகொண்டேன்
 கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனத்தே. (கூ)

↓↓ படநாகத்தணைக்கிடந்தன்றவுணர்கோனைப்
 படவெகுண்டுமருதிடைபோய், பழனவேலி *
தடமார்ந்தகடல்மல்லைத்தலசயனத்துத்
 தாமரைக்கண்துயிலமர்ந்த † தலைவன்தன்னை *
கடமாருங்கருங்களிறுவலலான் வெல்போர்க்
 கலிகன்றியொலிசெய்தவின்பப்பாடல் *
திடமாகஇவையைந்துமைந்தும்வல்லார்
 தீவினையைமுதலரியவல்லார்தாமே (கய)

அடிவரவு:—பாராயது பூண்டு உடம்பு பேய் பாய்ந்தானை கிடந்தானை பேணாத பெண் தொண்டாயார் படம் நண்ணாத.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



சு - ஆந் திருமொழி - நண்ணாத.



திருக்கடல்மல்லை. (உ)

தாவுகொச்சகக்கலிப்பா. (ஸஹாநாராகம்-ரூபகதாளம்.)

↓↓ நண்ணாத வாளவுணரிடைப்புக்கு * வானவரைப்
பெண்ணாகி யமுதூட்டும்பெருமானார் * மருவினிய
தண்ணார்ந்தகடல்மல்லைத் தலசயனத்துறைவாரை *
எண்ணாதேயிருப்பாரை இறைப்பொழுதுமெண்ணோமே. (க)

பார்வண்ணமடமங்கை பனிநன்மாமலராக்கிழத்தி *
நீர்வண்ணன்மார்வத்தி லிருக்கையைமுன்நினைந்து, அவனூர் *
கார்வண்ணமுதுமுந்நீர்க் கடல்மல்லைத்தலசயனம் *
ஆரெண்ணுநெஞ்சுடையார் அவர்எம்மையாள்வாரே. (உ)

↓↓ ஏனத்தினுருவாகி நிலமங்கையெழில்கொண்டான் *
வானத்திலவர்முறையால் மகிழ்ந்தேத்தி ‡ வலங்கொள்ள *
கானத்தின் கடல்மல்லைத்தலசயனத்துறைகின்ற *
ஞானத்தினொளியுருவை நினைவார்என்நாயகரே. (ங)

† 'தலைவர்தம்மை' எனவும் பாடம்ஓதுவர்.
‡ 'வரங்கொள்ள' என்பதும் பாடம்.

விண்டாரைவென்று ஆவிவிலங்குண்ண * மெல்லியலார்
கொண்டாடுமல்லகலம் அழலேறவெஞ்சமத்துக்
கண்டாரை * கடல்மல்லைத் தலசயனத்துறைவாரை *
கொண்டாடும்நெஞ்சுடையார் அவர் எங்கள்குலதெய்வமே. (௪)

பிச்சச்சிறுபீலிச் சமண்குண்டர்முதலாயோர் *
விச்சைக்கிறையென்னும் அவ்விறையைப்பணியாதே *
கச்சிக்கிடந்தவனூர் கடல்மல்லைத்தலசயனம் *
நச்சித்தொழுவாரை நச்சுஎன்தன் நன்னெஞ்சே ! (௫)

புலங்கொள்நிதிக்குவையோடு புழைக்கைம்மாகளிற்றினமும் *
நலங்கொள்நவமணிக்குவையும் சுமந்தெங்கும்நான்றொசிந்து *
கலங்களியங்கும்மல்லைக் கடல்மல்லைத்தலசயனம் *
வலங்கொள்மனத்தாரவரை வலங்கொள்என்மடநெஞ்சே ! (௬)

பஞ்சிச்சிறுகூழையுருவாகி * மருவாத
வஞ்சப்பெண்நஞ்சுண்ட அண்ணல், முன்நண்ணாத *
கஞ்சைக்கடந்தவனூர் கடல்மல்லைத்தலசயனம் *
நெஞ்சில்தொழுவாரைத் தொழுவாய்என் தூய்நெஞ்சே ! (௭)

செழுநீர்மலர்க்கமலம் † திரையுந்துவன்பகட்டால் *
உழுநீர்வயலுழவருழப் பின்முன்பிழைத்தெழுந்த *
கழுநீர்கடிகமழும் கடல்மல்லைத்தலசயனம் *
தொழுநீர்மனத்தவரைத் தொழுவாய்என் தூய்நெஞ்சே ! (௮)

பிணங்களிடுகாடதனுள் நடமாடுபிஞ்ஞகனோடு *
இணங்குதிருச்சக்கரத்து எம்பெருமானார்க்கிடம் * விசும்பில்
கணங்களியங்கும்மல்லைக் கடல்மல்லைத்தலசயனம் *
வணங்கும்மனத்தாரவரை வணங்குஎன்தன்மடநெஞ்சே ! (௯)

↓↓ கடிகமழும்நெடுமறுகில் கடல்மல்லைத்தலசயனத்து *
அடிகளடியேநினையும் அடியவர்கள் தம்மடியான் *
வடிகொள்நெடுவேல்வலவன் கலிகன்றியொலிவல்லார் *
முடிகொள்நெடுமன்னவர்தம் முதல்வர்முதலாவாரே. (௧௦)

அடிவரவு:—நண்ணாத பார் ஏனத்தின் விண்டாரை பிச்சம் புலம் பஞ்சி செழுநீர் பிணங்கள் கடி திவளும்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'திரையுந்த' என்றும் பாடமுண்டு.

# எ - ஆந் திருமொழி - திவளும்.

## திருவிடவெந்தை.

[தலைவனைப் பிரிந்த தலைவியின் ஆற்றாமை கண்ட தாய் இரங்குதல்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (ஸாவேரிராகம் - ஆதிதாளம்)

‡‡ திவளும்வெண்மதிபோல்திருமுகத்தரிவை
செழுங்கடலமுதினிற்பிறந்த
அவளும் * நின்னாகத்திருப்பதுமறிந்தும்
ஆகிலுமாசைவிடாளால் *
குவளையங்கண்ணிகொல்லியம்பாவை
சொல்லுநின்தாள்நயந்திருந்த
இவளை * உன்மனத்தாலென்னினைந்திருந்தாய் ?
இடவெந்தையெந்தைபிரானே ! (௧)

துளம்படுமுறுவல்தோழியர்க்கருளாள்
துணைமுலைசாந்துகொண்டணியாள் *
குளம்படுகுவளைக்கண்ணிணையெழுதாள்
கோலநன்மலர்குழற்கணியாள் *
வளம்படுமுந்நீர்வையமுன்னளந்த
மாலென்னும், மாலினமொழியாள் *
இளம்படியிவளுக்கென்னினைந்திருந்தாய் ?
இடவெந்தையெந்தைபிரானே ! (௨)

சாந்தமும்பூணும்சந்தனக்குழம்பும்
த முலைக்கணியிலுந்தழலாம் *
போந்தவெண்திங்கள்கதிர்சுடமெலியும்
பொருகடல்புலம்பிலும்புலம்பும் *
மாந்தளிர்மேனிவண்ணமும்பொன்னும்
வளைகளுமிறைநில்லா * என்தன்
ஏந்திழையிவளுக்கென்னினைந்திருந்தாய் ?
இட ந்தையெந்தைபிரானே ! (௩)

ஊழியிற் பரிதால்காழிகையென்னும்
ஒண்சுடர்துயின்றதாலென்னும் *
ஆழியும்புலம்புமன்றிலுமுறங்கா
தென்றலுந்தீயினிற்கொடிதாம் *

தோழி! ஓ! வென்னும் துணைமுலையரக்கும்
சொல்லுமினென்செய்கேன்? என்னும் *
ஏழையென்பொன்னுக்கென்னினைந்திருந்தாய்?
இடவெந்தையெந்தைபிரானே! (௪)

ஓதிலுமுன்பேரன்றிமற்றேதாள்
உருகும்நின் திருவுருநினைந்து *
காதன்மைபெரிதுகையறவுடையள்
கயல்நெடுங்கண் துயில்மறந்தாள் *
பேதையேன்பேதைபிள்ளைமைபெரிது
தெள்ளியள்வள்ளிநுண்மருங்குல் *
ஏதலர்முன்னாவென்னினைந்திருந்தாய்?
இடவெந்தையெந்தைபிரானே! (௫)

தன்குடிக்கேதும்தக்கவாநினையாள்,
தடங்கடல்நுடங்கெயிலிலங்கை *
வன்குடிமடங்கவாளமர்தொலைத்த
வார்த்தைகேட்டின்புறும்மயங்கும் *
மின்கொடிமருங்குல்சுருங்கமேல்நெருங்கி
மென்முலைபொன்பயந்திருந்த *
என்கொடியிவளுக்கென்னினைந்திருந்தாய்?
இடவெந்தையெந்தைபிரானே! (௬)

உளங்கனிந்திருக்குமுன்னையேபிதற்றும்
உனக்கன்றியெனக்கன்பொன்றிலளால் *
வளங்கனிபொழில்சூழ்மாலிருஞ்சோலை
மாயனே! என்றுவாய்வெருவும் *
களங்கனிமுறுவற்காரிகை பெரிது
கவலையோடவலஞ்சேர்ந்திருந்த *
இளங்கனியிவளுக்கென்னினைந்திருந்தாய்?
இடவெந்தையெந்தைபிரானே! (எ)

அலங்கெழுதடக்கையாயன்வாயாம்பற்கு
அழியுமாலென்னுள்ளமென்னும் *
புலங்கெழுபொருநீர்ப்புட்குழியாடும்
போதுமோநீர்மலைக்கென்னும் *

குலங்கெழுகொல்லிகோமளவல்லி
கொடியிடைநெடுமழைக்கண்ணி *
இலங்கெழில்தோளிக்கென்னினைந்திருந்தாய்?
இடவெந்தையெந்தைபிரானே! (அ)

பொன்குலாம்பயலைபூத்தனமென்தோள்
பொருகயற்கண்துயில்மறந்தாள் *
அன்பினாலுன்மேலாதரம்பெரிது
† இவ்வணங்கினுக்குற்றநோயறியேன் *
மின்குலாமருங்குல்சுருங்கமேல்நெருங்கி
வீங்கியவனமுலையாளுக்கு *
என்கொலாம்? குறிப்பிலென்னினைந்திருந்தாய்?
இடவெந்தையெந்தைபிரானே! (கூ)

அன்னமுமீனுமாமையுமரியும்
ஆயவெம்மாயனே! அருளாய் *
என்னுமின்தொண்டர்க்கின்னருள்புரியும்
இடவெந்தையெந்தைபிரானை *
மன்னுமாமாடமங்கையர்தலைவன்
மானவேற்கலியன்வாயொலிகள் *
பன்னியபனுவல்பாடுவார் நாளும்
பழவினைபற்றறுப்பாரே. (க0)

அடிவரவு:—திவளும் தளம் சாந்தம் ஊழியில் ஓதிலும் தன் உளம் அலம் பொன் அன்னம் திரிபுரம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## அ - ஆந் திருமொழி - திரிபுரம்.



திருவட்டபுயகரம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தர்பாரராகம் - ரூபகதாளம்.)

↓↓ திரிபுரமூன்றெரித்தானும் மற்றைமலர்மிசைமேலயனும்வியப்ப *
முரிதிரைமாகடல்போல்முழங்கி மூவுலகும்முறையால்வணங்க *
எரியனகேசரவாளெயிற்றொடு இரணியனாகமிரண்டுகூறா *
அரியுருவாமிவரார்கொல்? என்ன அட்டபுயகரத்தேனென்றாரே. (க)

† 'என்னணங்கினுக்கு' என்றும் பாடம்.

வெந்திறல்வீரரில்வீரரொப்பார் வேதமுறைத்திமையோர்வணங்கும் *
செந்தமிழ்பாடுவார்தாம்வணங்கும் தேவரிவர்கொல்?தெரிக்கமாட்டேன்*
வந்துகுறளுருவாய்நிமிர்ந்து மாவலிவேள்வியில்மண்ணளந்த *
அந்தணர்போன்றிவரார்கொல் ? என்ன அட்டபுயகரத்தேனென்றாரே.

செம்பொனிலங்குவலங்கைவாளி திண்சிலைதண்டொடுசங்கமொள்வாள்*
உம்பரிருசுடராழியோடு கேடகமொண்மலர்பற்றியெற்றே ! *
வெம்புசினத்தடல்வேழம்வீழ வெண்மருப்பொன்றுபறித்து*இருண்ட
அம்புதம்போன்றிவரார்கொல்? என்ன அட்டபுயகரத்தேனென்றாரே.

மஞ்சுயர்மாமணிக்குன்றமேந்தி மாமழைகாத்தொருமாயவானை,அஞ்ச*
அதன்மருப் † பன்றுவாங்கும் ஆயர்கொல்? மாயமறியமாட்டேன் *
வெஞ்சுடராழியுஞ்சங்குமேந்தி வேதமுனோதுவர்நீதிவானத்து *
அஞ்சுடர்போன்றிவரார்கொல்? என்ன அட்டபுயகரத்தேனென்றாரே.

கலைகளும்வேதமுநீதிநூலும் கற்பமுஞ்சொற்பொருள்தானும்*மற்றை
நிலைகளும்வானவர்க்கும்பிறர்க்கும் நீர்மையினாலருள்செய்து * நீண்ட
மலைகளும்மாமணியும் மலர்மேல்மங்கையுஞ்சங்கமுந்தங்குகின்ற *
அலைகடல்போன்றிவரார்கொல்? என்ன அட்டபுயகரத்தேனென்றாரே.

எங்ஙனுநாமிவர்வண்ணமெண்ணில் ஏதுமறிகிலம், ஏந்திழையார் *
சங்குமனமும்நிறைவுமெல்லாம் தம்மனவாகப்புகுந்து * தாமும்
பொங்குகருங்கடல்பூவைகாயா போதவிழ்நீலம்புனைந்தமேகம் *
அங்ஙனம்போன்றிவரார்கொல்?என்ன அட்டபுயகரத்தேனென்றாரே.

முழுசிவண்டாடியதண்டுழாயின் மொய்ம்மலர்க்கண்ணியும் * மேனியஞ்சாந்
திழுசியகோலமிருந்தவாறும் எங்ஙனஞ்சொல்லுகேன் ? ஓவிநல்லார் *
எழுதியதாமரையன்னகண்ணும் ஏந்தெழிலாகமும்தோளும்வாயும் *
அழகியதாமிவரார்கொல் ? என்ன அட்டபுயகரத்தேனென்றாரே. (ஏ)

மேவியெப்பாலும்விண்ணோர்வணங்க வேதமுரைப்பர்முந்நீர்மடந்தை
தேவி*அப்பாலதிர்சங்கமிப்பால்சக்கரம் மற்றிவர்வண்ணமெண்ணில்*
காவியொப்பார்கடலேயுமொப்பார் கண்ணும்வடிவும்நெடியராய்*என்
ஆவியொப்பாரிவரார்கொல் ? என்ன அட்டபுயகரத்தேனென்றாரே. ()

தஞ்சமிவர்க்கென்வளையும்நில்லா நெஞ்சமுந்தம்மதேசிந்தித்தேற்கு *
வஞ்சிமருங்குல்நெருங்கநோக்கி வாய்திறந்தொன்றுபணித்ததுண்டு *
நஞ்சமுடைத்திவர்நோக்கும்நோக்கம் நானிவர்தம்மையறியமாட்டேன் *
அஞ்சுவன்மற்றிவரார்கொல் ? என்ன அட்டபுயகரத்தேனென்றாரே.()

† 'ஒன்று' என்பதும் பாடம்.

⸸ மன்னவன்தொண்டையர்கோன்வணங்கும் நீள்முடிமாலைவயிரமேகன் *
தன்வலிதன்புகழ்சூழ்ந்தகச்சி அட்டபுயகரத்தாதிதன்னை * [கன் *
கன்னிநன்மாமதிள்மங்கைவேந்தன் காமருசீர்க்கலிகன்றி * குன்றா
இன்னிசையாற்சொன்னசெஞ்சொல்மாலை ஏத்தவல்லார்க்கிடம்வைகுந்தமே.

அடிவரவு:—திரிபுரம் வெந்திறல் செம்பொன் மஞ்சு கலைகளும் எங்ஙனும் முழுசி மேவி தஞ்சம் மன்னவன் சொல்லு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## கூ - ஆந் திருமொழி - சொல்லு.



### திருப்பரமேச்சுரவிண்ணகரம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (யமுநாகல்யாணிராகம்-நுபகதாளம்.)

⸸ சொல்லுவன்சொற்பொருள்தானவையாய்ச்
சுவையூறொலிநாற்றமுந்தோற்றமுமாய் *
நல்லரன் † நான்முகன்நாரணனுக்கிடந்தான்
தடஞ்சூழ்ந்தழகாயகச்சி *
பல்லவன்வில்லவனென்றுலகில்
பலராய்ப்பலவேந்தர்வணங்குகழற்
பல்லவன் * மல்லையர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (க)

கார்மன்னுநீள்விசும்பும் கடலும்
சுடரும்நிலனும்மலையும் * தன்னுந்தித்
தார்மன்னுதாமரைக்கண்ணனிடம்
தடமாமதிள்சூழ்ந்தழகாயகச்சி *
தேர்மன்னுதென்னவனைமுனையிற்செருவில்
திறல்வாட்டியதிண்சிலையோன் *
பார்மன்னுபல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (உ)

உரந்தருமெல்லணைப்பள்ளிகொண்டான்
ஒருகால்முன்னம்மாவுருவாய்க்கடலுள் *
வரந்தருமாமணிவண்ணனிடம்
மணிமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி *

† 'நாரணன்நான்முகனுக்கு' என்றும் பாடம்.

நிரந்தவர்மண்ணையிற்புண்ணுகர்வேல்
நெடுவாயிலுகச்செருவில்முனநாள் *
பரந்தவன்பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (௩)

அண்டமுமெண்டிசையும்நிலனும்
அலைநீரொடுவானெரிகால்முதலா
உண்டவன் * எந்தைபிரானதிடம்
ஒளிமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி *
விண்டவரிண்டைக்குழாமுடனே
விரைந்தாரிரியச்செருவில்முனிந்து *
பண்டொருகால்வளைத்தான்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (௪)

தூம்புடைத்திண்கைவன்தாள்களிற்றின்
துயர்தீர்த்து, அரவம்வெருவ * முனநாள்
பூம்புனற்பொய்கைபுக்கானவனுக்கிடந்தான்
தடஞ்சூழ்ந்தழகாயகச்சி *
தேம்பொழிற்குன்றெயில்தென்னவனைத்
திசைப்பச்செருமேல்வியந்தன்று†சென்ற *
பாம்புடைப்பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (௫)

திண்படைக்கோளரியினுருவாய்த்
திறலோனகலஞ்செருவில்முனநாள் *
புண்படப்போழ்ந்தபிரானதிடம்
பொருமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி *
வெண்குடைநீழல்செங்கோல்நடப்ப
விடைவெல்கொடிவேல்படைமுன்னுயர்த்த *
பண்புடைப்பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (௬)

இலகியநீண்முடிமாவலிதன்பெருவேள்வியில்
மாணுருவாய், முனநாள் *
சலமொடுமாநிலங்கொண்டவனுக்கிடந்தான்
தடஞ்சூழ்ந்தழகாயகச்சி *

---

† 'திசைபப' எனவும் ஓதுவர்.

உலகுடைமன்னவன்தென்னவனைக்
கன்னிமாமதிள்சூழ்கருவூர்வெருவ *
பலபடைசாயவென்றான்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (எ)

குடைத்திறல்மன்னவனாய்ஒருகால்
குரங்கைப்படையா, * மலையாற்கடலை
யடைத்தவனெந்தைபிரானதிடம்
மணிமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி *
விடைத்திறல்வில்லவன்நென்மெலியில்
வெருவச்செருவேல்வலங்கைப்பிடித்த *
படைத்திறற்பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (அ)

பிறையுடைவாணுதற்பின்னைதிறத்து முன்னே
யொருகாற்செருவில்உருமின் *
மறையுடைமால்விடையேழடர்த்தாற்குஇடந்தான்
தடஞ்சூழ்ந்தழகாயகச்சி *
கறையுடைவாள்மறமன்னர்கெடக்
கடல்போல்முழங்குங்குரற்கடுவாய் *
பறையுடைப்பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (கூ)

↓↓ பார்மன்னுதொல்புகழ்ப்பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகர்மேல் *
கார்மன்னுநீள்வயல்மங்கையர்தந்தலைவன
கலிகன்றிகுன்றாதுரைத்த *
சீர்மன்னுசெந்தமிழ்மாலைவல்லார்
திருமாமகள்தன்னருளால் * உலகில்
தேர்மன்னராய்ஒலிமாகடல்சூழ்
செழுநீருலகாண்டுதிகழ்வர்களே. (கo)

அடிவரவு:—சொல்லு கார் உரம் அண்டமும் தாம்பு திண் இலகிய குடை பிறை பார மஞ்சாடு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## க௦ - ஆந் திருமொழி - மஞ்சாடு.

---

### திருக்கோவலூர்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஆபிராகம் - அதிதாளம்.)

↓↓ மஞ்சாடுவரையேழுங்கடல்களேழும்
வானகமும்மண்ணகமும்மற்றுமெல்லாம் *
எஞ்சாமல்வயிற்றடக்கியாலின்மேல் ஓரிளந்தளிரிற்
கண்வளர்ந்தவீசன்தன்னை *
துஞ்சாநீர்வளஞ்சுரக்கும்பெண்ணைத்தென்பால்
தூயநான்மறையாளர்சோமுச்செய்ய *
செஞ்சாலிவிளைவயலுள்திகழ்ந்துதோன்றும்
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (க)

கொந்தலர்ந்தநறுந்துழாய்சாந்தம்தூபம்
தீபங்கொண்டமரர்தொழப்பணங்கொள்பாம்பில் *
சந்தணிமென்முலைமலராள்தரணிமங்கை
தாமிருவரடிவருடுந்தன்மையானை *
வந்தனைசெய்துஇசையேழாறங்கம் ஐந்து
வளர்வேள்விநான்மறைகள்மூன்றுதீயும் *
சிந்தனைசெய்திருபொழுதுமொன்றும் செல்வத்
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (உ)

கொழுந்தலரும்மலர்ச்சோலைக்குழாங்கொள்பொய்கைக்
கோள்முதலைவாளெயிற்றுக்கொண்டற்கெள்கி *
அழுந்தியமாகளிற்றினுக்கன்றுஆழியேந்தி
அந்தரம்மேவரத்தோன்றியருள்செய்தானை *
எழுந்தமலர்க்கருநீலமிருந்தில்காட்ட
இரும்புன்னைமுத்தரும்பிச்செம்பொன்காட்ட *
செழுந்தடநீர்க்கமலந்தீவிகைபோற்காட்டும்
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (ஙு)

தாங்கரும்போர்மாலிபடப்பறவையூர்ந்து
தராதலத்தோர்குறைமுடித்ததன்மையானை *
ஆங்கரும்பிக்கண்ணீர்சோரந்தன்புகூரும்
அடியவர்கட்காரமுதமானான்தன்னை *

கோங்கரும்புசுரபுன்னைகுரவார்சோலைக்
குழாவரிவண்டிசைபாடும்பாடல்கேட்டு *
தீங்கரும்புகண்வளருங்கழனிசூழ்ந்த
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (ச)

கறைவளர்வேற்கரன்முதலாக்கவந்தன்வாலி
கணையொன்றினால்மடியஇலங்கைதன்னுள் *
பிறையெயிற்றுவாளரக்கர்சேனையெல்லாம்
பெருந்தகையோடுடன்துணித்தபெம்மான்தன்னை *
மறைவளரப்புகழ்வளரமாடந்தோறும
மண்டபமொண்தொளியனைத்தும்வாரமோத *
சிறையணைந்தபொழிலணைந்ததென்றல்வீசும்
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (ரு)

உறியார்ந்தநறுவெண்ணெயொளியாற்சென்றுஅங்கு
உண்டானைக்கண்டாய்ச்சியுரலோடார்க்க *
தறியார்ந்தகருங்களிறேபோலநின்று
தடங்கண்கள்பனிமல்குந்தன்மையானை *
வெறியார்ந்தமலர்மகள்நாமங்கையோடு
வியன்கலையெண்தோளினாள்விளங்கு * செல்வச்
செறியார்ந்தமணிமாடம்திகழ்ந்துதோன்றும்
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (சு)

இருங்கைம்மாகரிமுனிந்துபரியைக்கீறி
இனவிடைகளேழடர்த்துமருதஞ்சாய்த்து *
வருஞ்சகடமிறவுதைத்துமல்லையட்டு
வஞ்சஞ்செய்கஞ்சனுக்குநஞ்சானானை *
கருங்கமுகுபசும்பாளைவெண்முத்தீன்று
காயெல்லாம்மரகதமாய்ப்பவளங்காட்ட *
செருந்திமிகமொட்டலர்த்துந்தேன்கொள்சோலைத்
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (எ)

பாரேறுபெரும்பாரந்தீரப் பண்டு
பாரதத்துத்தூதியங்கி * பார்த்தன்செல்வத்
தேரேறுசாரதியாயெதிர்ந்தார்சேனை
செருக்களத்துத்திறலழியச்செற்றான்தன்னை *

போரேறொன்றுடையானும்அளகைக்கோனும்
புரந்தரனும்நான்முகனும்பொருந்துமூர்போல் *
சீரேறுமறையாளர்நிறைந்த செல்வத்
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (அ)

தூவடிவிற்பார்மகள்பூமங்கையோடு
சுடராழிசங்கிருபாற்பொலிந்துதோன்ற *
காவடிவிற்கற்பகமேபோலநின்று
கலந்தவர்கட்குஅருள்புரியுங்கருத்தினானை *
சேவடிகைதிருவாய்கண்சிவந்தவாடை
செம்பொன்செய்திருவுருவமானான்தன்னை *
தீவடிவிற்சிவனயனேபோல்வார்மன்னு
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (கூ)

⸸⸸ வாரணங்கொளிடர்கடிந்தமாலை நீல
மரதகத்தைமழைமுகிலேபோல்வான்தன்னை *
சீரணங்குமறையாளர்நிறைந்த செல்வத்
திருக்கோவலூரதனுள்கண்டேனென்று *
வாரணங்குமுலைமடவார்மங்கைவேந்தன்
வாட்கலியனொலியைந்துமைந்தும்வல்லார் *
காரணங்களாலுலகங்கலந்தங்கேத்தக்
கரந்தெங்கும்பரந்தானைக்காண்பர்தாமே. (க0)

அடிவரவு:—மஞ்சாடு கொந்து கொழுந்து தாங்கு கறை உறி இருங்கை பார் தூவடிவில் வாரணம் இருந்தண்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## மூன்றாம்பத்து.

### க - ஆந் திருமொழி - இருந்தண்மாநிலம்.

திருவயிந்திரபுரம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (செஞ்சுருட்டிராகம் - ஆதிதாளம்.)

⸸⸸ இருந்தண்மாநிலமேனமதாய் வளைமருப்பினில் † அகத்தொடுக்கி *
கருந்தண்மாகடற்கண்துயின்றவனிடம் கமலநன்மலர்த்தேறல்
அருந்தி*இன்னிசைமுரன்றெழுமளிகுலம்பொதுளியம்பொழிலூடே*
செருந்திநாண்மலர்சென்றணைந்துழிதரு திருவயிந்திரபுரமே. (க)

† ‘அகத்தடக்கி’ என்பதும் பாடம்,

மின்னுமாழியங்கையவன் செய்யவளுறைதருதிருமார்பன் *
பன்னுநான்மறைப்பல்பொருளாகிய பரனிடம், வரைச்சாரல் *
பின்னுமாதவிப்பந்தலில் பெடைவரப்பிணியவிழ்கமலத்து *
தென்னவென்றுவண்டின்னிசைமுரல்தரு திருவயிந்திரபுரமே. (உ)

வையமேழுமுண்டு ஆலிலைவைகியமாயவன் * அடியவர்க்கு
மெய்யனாகியதெய்வநாயகனிடம் மெய்தகுவரைச்சாரல் *
மொய்கொள்மாதவிசெண்பகம்முயங்கிய முல்லையங்கொடியாட *
செய்யதாமரைச்செழும்பணைதிகழ்தரு திருவயிந்திரபுரமே. (ந)

மாறுகொண்டுடன்றெதிர்ந்தவல்லவுணன்தன் மார்பகமிருபிளவா *
கூறுகொண்டு அவன்குலமகற்கின்னருள்கொடுத்தவனிடம் *மிடைந்து
சாறுகொண்டமென்கரும்பிளங்கழை தகைவிசும்புறமணிநீழல் *
சேறுகொண்டதண்பழனமதெழில்திகழ் திருவயிந்திரபுரமே. (ச)

ஆங்குமாவலிவேள்வியிலிரந்துசென்று அகலிடமளந்து * ஆயர்
பூங்கொடிக்கினவிடைபொருதவனிடம், பொன்மலர்திகழ் * வேங்கை
கோங்குசெண்பகக்கொம்பினில் குதிகொடுகுரக்கினமிரைத்தோடி *
தேன்கலந்ததண்பலங்கனிநுகர்தரு திருவயிந்திரபுரமே. (ரு)

கூனுலாவியமடந்தைதன் கொடுஞ்சொலின்திறத்துஇளங்கொடியோ [டும் *
கானுலாவியகருமுகில்திருநிறத்தவனிடம், கவினாரும் *
வானுலாவியமதிதவழ்மால்வரை மாமதிள்புடைசூழ *
தேனுலாவியசெழும்பொழில்தழுவிய திருவயிந்திரபுரமே. (சு)

மின்னின்நுண்ணிடைமடக்கொடிகாரணம் விலங்கலின்மிசையிலங்கை
மன்னன் * நீண்முடிபொடிசெய்தமைந்தனதிடம், மணிவரைநீழல்*
அன்னமாமலர் அரவிந்தத்தமளியில் பெடையொடுமினிதமர *
செங்நெலார்கவரிக்குலைவீசு தண்திருவயிந்திரபுரமே. (எ)

விரைகமழ்ந்தமென்கருங்குழல்காரணம் வில்லிறுத்து, † அடல்மழைக்கு*
நிரைகலங்கிடவரைகுடையெடுத்தவன் நிலவியவிடம், தடமார் *
வரைவளந்திகழ்மதகரிமருப்பொடு மலைவளரகிலுந்தி *
திரைகொணர்ந்தணைசெழுநதிவயல்புகு திருவயிந்திரபுரமே. (அ)

வேல்கொள்கைத்தலத்தரசர்வெம்போரினில் விசயனுக்காய், மணித்தேர்*
கோல்கொள்கைத்தலத்தெந்தைபெம்மானிடம் குலவுதண்வரைச்சாரல்*
கால்கொள்கண்கொடிக்கையெழக் கமுகிளம்பாளைகள்கமழ்சாரல் *
சேல்கள்பாய்தருசெழுநதிவயல்புகு திருவயிந்திரபுரமே. (கூ)

† 'அடர்மழைக்கு' என்பதும் பாடம்.

⁂ மூவராகியவொருவனை மூவுலகுண்டுமிழ்ந்தளந்தானை *
தேவர்தானவர்சென்றுசென்றிறைஞ்சத் தண்திருவயிந்திரபுரத்து *
மேவுசோதியை வேல்வலவன்கலிகன்றிவிரித்துரைத்த *
பாவுதண்தமிழ்பத்திவைபாடிடப் பாவங்கள்பயிலாவே. (௧௦)

அடிவரவு:—இருந்தண் மின்னும் வையம் மாறு ஆங்கு கூன் மின்னின் விரை வேல் மூவர் ஊன்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## உ - ஆந் திருமொழி - ஊன்வாட.



### திருச்சித்திரகூடம். (௧)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (சங்கராபரணராகம் - அடதாளம்.)

⁂ ஊன்வாடவுண்ணாதுயிர்காவலிட்டு
உடலிற்பிரியாப்புலனைந்தும்நொந்து *
தாம்வாடவாடத்தவஞ்செய்யவேண்டா
தமதாவிமையோருலகாளகிற்பீர்! *
கானாடமஞ்ஞைக்கணமாட மாடே
கயலாடுகானீர்ப்பழனம்புடைபோய் *
தேனாடமாடக்கொடியாடு தில்லைத்
திருச்சித்ரகூடஞ்சென்றுசேர்மின்களே. (௧)

காயோடுநீடுகனியுண்டு, வீசு
கடுங்கால்நுகர்ந்து, நெடுங்காலம் * ஐந்து
தீயோடுநின்றுதவஞ்செய்யவேண்டா
திருமார்பனைச்சிந்தையுள்வைத்துமென்பீர்! *
வாயோதுவேதம்மலிகின்றதொல்சீர்
மறையாளர்நாளும்முறையால்வளர்த்த *
தீயோங்கவோங்கப்புகழோங்கு தில்லைத்
திருச்சித்ரகூடஞ்சென்றுசேர்மின்களே. (௨)

வெம்புஞ்சினத்துப்புனக்கேழலொன்றாய்
விரிநீர்முதுவெள்ளமுள்புக்கழுந்த *
வம்புண்பொழில்சூழுலகன்றெடுத்தான்
அடிப்போதணைவான்விருப்போடிருப்பீர்! *

↓↓ மஞ்சுலாமணிமாடங்கள்சூழ் திருவெள்ளறையதன்மேய *
அஞ்சனம்புரையுநதிருவுருவனை ஆதியையமுதத்தை *
நஞ்சுலாவியவேல்வலவன் கலிகன்றிசொல்லையிரண்டும் *
எஞ்சலின்றிநின்றேத்தவல்லார் இமையோர்க்கரசாவர்களே. (கo)

அடிவரவு:—வென்றி வசை வெய்ய வாம்பரி மானவேல் பொங்கு ஆறு முன் ஆங்கு மஞ்சு உந்தி.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



ச - ஆந் திருமொழி - உந்தி.



திருவரங்கம். (க)

கலிநிலைத்துறை. (ஸஹாநாராகம் - அடதாளம்)

↓↓ உந்திமேல்நான்முகனைப்படைத்தான் உலகுண்டவ
னெந்தைபெம்மான் * இமையோர்கள்தாதைக்கு இடமென்பரால் *
சந்தினோடுமணியுங்கொழிக்கும புனற்காவிரி *
அந்திபோலும்நிறத்தார்வயல்சூழ் தென்னரங்கமே. (க)

வையமுண்டாலிலைமேவுமாயன், மணிநீண்முடி *
பைகொள்நாகத்தணையான் பயிலுமிடமென்பரால *
தையல்நல்லார்குழல்மாலையும் மற்றவர்தடமுலை *
செய்யசாந்துங்கலந்திழிபுனல்சூழ் தென்னரங்கமே. (உ)

பண்டிவ்வையமளப்பான்சென்று மாவலிகையில்நீர்
கொண்ட * ஆழித்தடக்கைக் குறளனிடமென்பரால் *
வண்டுபாடும்மதுவார்புனல் வந்திழிகாவிரி *
அண்டநாறும்பொழில்சூழ்ந்து அழகார்தென்னரங்கமே. (ங)

விளைத்தவெம்போர் விறல்வாளரக்கன்நகர்பாழ்பட *
வளைத்தவல்வில்தடக்கையவனுக்கு இடமென்பரால் *
துளைக்கையானைமருப்பும் அகிலுங்கொணர்ந்துந்தி * முன்
திளைக்குஞ்செல்வப்புனற்காவிரிசூழ் தென்னரங்கமே. (ச)

வம்புலாம்கூந்தல்மண்டோதரிகாதலன் வான்புக *
அம்புதன்னால்முனிந்த அழகனிடமென்பரால் *
உம்பர்கோனும்உலகேழும் வந்தீண்டிவணங்கும் * நல்
செம்பொனாரும்மதிள்சூழ்ந்து அழகார்தென்னரங்கமே. (ரு)

கலைபுடுத்தவகலல்குல் வன்பேய்மகள்தாயென *
முலைகொடுத்தாளுயிருண்டவன் † வாழிடமென்பரால் *
குலையெடுத்தகதலிப் பொழிலூடும்வந்துந்தி * முன்
அலையெடுக்கும்புனற்காவிரிசூழ் தென்னரங்கமே. (௬)

கஞ்சன்நெஞ்சும்கடுமல்லரும் சகடமும்காலினால் *
துஞ்சவென்றசுடராழியான் † வாழிடமென்பரால் *
மஞ்சுசேர்மாளிகை நீடகில்புகையும் * ‡ மாமறையோர்
செஞ்சொல்வேள்விப்புகையுங்கமழும் தென்னரங்கமே. (௭)

ஏனமீனாமையோடு அரியும்சிறுகுறளுமாய் *
தானுமாய தரணித்தலைவனிடமென்பரால் *
வானும்மண்ணும்நிறையப் புகுந்தீண்டிவணங்கும் * நல்
தேனும்பாலுங்கலந்தன்னவர்சேர் தென்னரங்கமே. (௮)

சேயனென்றும்மிகப்பெரியன் நுண்நேர்மையினாயவிம்
$ மாயை * ஆருமறியாவகையான் இடமென்பரால் *
வேயின்முத்தும்மணியுங்கொணர்ந்து ஆர்புனற்காவிரி *
ஆயபொன்மாமதிள்சூழ்ந்து அழகார்தென்னரங்கமே. (௯)

↓↓ அல்லிமாதரமரும் திருமார்வனரங்கத்தை *
கல்லின்மன்னுமதிள் மங்கையர்கோன்கலிகன்றிசொல் *
நல்லிசைமாலைகள் நாலிரண்டுமிரண்டுமுடன் *
வல்லவர்தாம்உலகாண்டு பின்வானுலகாள்வரே. (௧0)

அடிவரவு:—உந்தி வையம் பண்டு விளைத்த வம்பு கலை கஞ்சன் ஏனம் சேயன் அல்லி வெருவாதாள்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

## ரு - ஆந் திருமொழி - வெருவாதாள்.

### திருவரங்கம். (உ)

[பிரிவாற்றது வருந்துந் தலைவியைக்குறித்துத் தாய இரங்கிக்கூறியபாசுரம்.]

அறுசீராசிரியவிருத்தம். (காம்போதிராகம் - ஆதிதாளம்.)

↓↓ வெருவாதாள்வாய்வெருவி வேங்கடமே! வேங்கடமே! என்கின்றாளால் *
மருவாளாலென்குடங்கால்வாள்நெடுங்கண் துயில்மறந்தாள் * வண்டார்கொண
லுருவாளன்வானவர்தமுயிராளன்ஒலிதிரைநீர்ப்பெளவங்கொண்ட[ட
திருவாளன் * என்மகளைச்செய்தனகள் எங்ஙனம்நான்சிந்திக்கேனே?()

† 'வாழுமிடம்' என்றும் பாடம். ‡ 'மறையோர்' என்றே ஓதுவர்.
$ 'மாயையை' என்றும் வழங்குவர்.

கலையாளாவகலல்குல் கனவளையுங்கையாளா என்செய்கேன்நான்? *
விலையாளா அடியேனை வேண்டுதியோ?வேண்டாயோ?என்னும்*மெய்ய
மலையாளன்வானவர்தந்தலையாளன் மராமரமேழெய்தவென்றிச்
சிலையாளன்*என்மகளைச்செய்தனகள் எங்ஙனம்நான்சிந்திக்கேனே?(உ)

மானாயமென்னோக்கி வாள்நெடுங்கண்ணீர்மல்கும்வளையுஞ்சோரும் *
தேனாயநறுந்துழா யலங்கலின் திறம்பேசியுறங்காள்காண்மின் *
கானாயன்கடிமனையில்தயிருண்டுநெய்பருக நந்தன்பெற்ற
ஆனாயன் * என்மகளைச்செய்தனகள் அம்மனைமீர்! அறிகிலேனே. (ரு)

தாய்வாயிற்சொற்கேளாள் தன்னாயத்தோடணையாள்தடமென்கொங்கை
யே*ஆரச்சாந்தணியாள் எம்பெருமான் திருவரங்கமெங்கே?என்னும்*
பேய்மாயமுலையுண்டிவ்வுலகுண்டபெருவயிற்றன் பேசில்நங்காய்! *
மாமாயன்என்மகளைச்செய்தனகள் மங்கைமீர்! மதிக்கிலேனே. (சு)

பூண்முலைமேல்சாந்தணியாள் பொருகயற்கண்மையெழுதாள்பூவைபேணாள்*
ஏணறியாளெத்தனையும் எம்பெருமான்திருவரங்கமெங்கே? என்னும் *
நாண்மலராள்நாயகனாய் நாமறியவாய்ப்பாடிவளர்ந்தநம்பி *
ஆண்மகனாயென்மகளைச்செய்தனகள் அம்மனைமீர்! அறிகிலேனே. (ரு)

தாதாடுவனமாலை தாரானோ? என்றென்றேதளர்ந்தாள்காண்மின் *
யாதானுமொன்றுரைக்கில்எம்பெருமான் திருவரங்கமென்னும்*பூமேல்
மாதாளன்குடமாடிமதுசூதன் மன்னர்க்காய்முன்னம்சென்ற
தூதாளன்*என்மகளைச்செய்தனகள் எங்ஙனம்நான்சொல்லுகேனே?()

வாராளுமிளங்கொங்கைவண்ணம்வேறாயினவாறெண்ணாள் *எண்ணில்
பேராளன்பேரல்லால்பேசாள் இபபெண்பெற்றேனென்செய்கேன்நான்? *
தாராளன் தண்குடந்தைநகராளன் ஐவர்க்காயமரிலுய்த்த
தேராளன் *என்மகளைச்செய்தனகள் எங்ஙனம்நான்செப்புகேனே?(எ)

உறவாதுமிலளென்றென்று ஒழியாதுபலரேசுமலராயிற்றால் *
மறவாதேயெப்பொழுதும் மாயவனே! மாதவனே! என்கின்றாளால்*
பிறவாதபேராளன்பெண்ணாளன்மண்ணாளன் விண்ணோர்தங்கள்
அறவாளன்*என்மகளைச்செய்தனகள் அம்மனைமீர்! அறிகிலேனே.(அ)

பந்தோடுகழல்மருவாள் பைங்கிளியும்பாலூட்டாள்பாவைபேணாள் *
வந்தானோ! திருவரங்கன் வாரானோ! என்றென்றேவளையுஞ்சோரும்*
சந்தோகன்பௌழியன் ஐந்தழலோம்புதைத்திரியன்சாமவேதி *
† அந்தோ! வந்தென்மகளைச்செய்தனகள் அம்மனைமீர்! அறிகிலேனே.

---

† 'அந்தோவென்பொன்மகளை' என்பது பாடாந்தரம்.

↓↓சேலுகளும்வயல்புடைசூழ் திருவரங்கத்தம்மானைச்சிந்தைசெய்த *
நீலமலர்க்கண்மடவாள்நிறையழிவைத் தாய்மொழிந்தவதனை*நேரார்
காலவேற்பரகாலன் கலிகன்றியொலிமாலைகற்றுவல்லார் *
மாலைசேர்வெண்குடைக்கீழ்மன்னவராய்ப் பொன்னுலகில்வாழ்வர்தாமே.(௧௦)

அடிவரவு:—வெருவாதாள் கலை மான் தாய் பூண் தாதாடு வாராளும் உறவு பகதோம் சேல் கைம்மானம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



௬ - ஆந் திருமொழி - கைம்மானம்.



திருவரங்கம். (௩)

கலிவிருத்தம். (மாவிளம் - நுபகதாளம்.)

↓↓ கைம்மானமழகளிற்றைக் கடற்கிடந்தகருமணியை *
மைம்மானமரகதத்தை மறையுரைத்ததிருமாலை *
எம்மானைஎனக்கென்றுமினியானைப் பனிகாத்த
அம்மானை * யான்கண்டது அணிநீர்த்தென்னரங்கத்தே. (௧)

↓↓ பேரானைக் குறுங்குடியெம்பெருமானை * திருத்தண்கா
லூரானைக் கரம்பனூருத்தமனை * முத்திலங்கு
காரார்திண்கடலேழும் மலையேழிவ்வுலகேழுண்டும் *
ஆராதென்றிருந்தானைக் கண்டதுதென்னரங்கத்தே. (௨)

ஏனாகியுலகிடந்து அன்றுஇருநிலனும்பெருவிசும்பும் *
தானாயபெருமானைத் தன்னடியார்மனத்துஎன்றும் *
தேனாகியமுதாகித் திகழ்ந்தானை * மகிழ்ந்தொருகால்
ஆனாயனானானைக் கண்டதுதென்னரங்கத்தே (௩)

வளர்ந்தவனைத்தடங்கடலுள் வலியுருவில்திரிசகடம் *
† தளர்ந்துதிரவுதைத்தவனைத் தரியாதன்றிரணியனைப்
பிளந்தவனை * பெருநிலமீரடிநீட்டிப் பண்டொருநாள்
அளந்தவனை * யான்கண்டது அணிநீர்த்தென்னரங்கத்தே. (௪)

நீரழலாய் நெடுநிலனாய்நின்றானை * அன்றுஅரக்க
னூரழலாலுண்டானைக் கண்டார்பின்காணுமே *
பேரழலாய்ப்பெருவிசும்பாய்ப் பின்மறையோர்மந்திரத்தின் *
ஆரழலாலுண்டானைக் கண்டதுதென்னரங்கத்தே. (௫)

† 'தளர்ந்துதிர' என்றும் பாடாந்தரம்.

தஞ்சினத்தைத்தவிர்த்தடைந்தார் தவநெறியை * தரியாது
கஞ்சனைக்கொன்று அன்றுலகமுண்டுமிழ்ந்தகற்பகத்தை *
வெஞ்சினத்தகொடுந்தொழிலோன் விசையுருவையசைவித்த *
அஞ்சிறைப்புட்பாகனை யான்கண்டதுதென்னரங்கத்தே. (சு)

சிந்தனையைத்தவநெறியைத் திருமாலை * பிரியாது
வந்தெனதுமனத்திருந்த வடமலையை * வரிவண்டார்
கொந்தணைந்தபொழிற்கோவல் உலகளப்பானடிநிமிர்த்த
அந்தணனை * யான்கண்டது அணிநீர்த்தென்னரங்கத்தே. (எ)

துவரித்தவுடையவர்க்கும் தூய்மையில்லாச்சமணர்க்கும் *
அவர்கட்குஅங்கருளில்லாவருளானை * தன்னடைந்த
எமர்கட்குமடியேற்கும் எம்மாற்குமெம்மனைக்கும் *
அமரர்க்கும்பிரானாரைக் கண்டதுதென்னரங்கத்தே. (அ)

பொய்வண்ணம்மனத்தகற்றிப் புலனைந்தும்செலவைத்து *
மெய்வண்ணம்நினைந்தவர்க்கு மெய்ந்நின்றவித்தகனை *
மைவண்ணம்கருமுகில்போல் திகழ்வண்ணமரதகத்தின் *
அவ்வண்ணவண்ணனை யான்கண்டதுதென்னரங்கத்தே. (கூ)

↓↓ ஆமருவிநிரைமேய்த்த அணியரங்கத்தம்மானை *
காமருசீர்க்கலிகன்றி ஒலிசெய்தமலிபுகழ்சேர் *
நாமருவுதமிழ்மாலை நாலிரண்டோடிரண்டினையும் *
தாமருவிவல்லார்மேல் சாராதீ † வினைதானே. (க0)

அடிவரவு:—கைம்மானம் பேரானை ஏனுகி வளர்ந்தவனை நீர் தம் சிந்தனை துவரித்த பொய் ஆமருவி பண்டை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



எ - ஆந் திருமொழி - பண்டை.



திருவரங்கம். (ச)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஸாவேரிராகம் - ஆதிதாளம்.)

↓↓ பண்டைநான்மறையும்வேள்வியும் கேள்விப்
பதங்களும் பதங்களின்பொருளும் *
பிண்டமாய்விரிந்தபிறங்கொளியனலும்
பெருகியபுனலொடுநிலனும் *

† 'வினைதாமே' எனவும் ஓதுவர்.

கொண்டல்மாருதமுங்குரைகடலேழும்
ஏழுமாமலைகளும்விசும்பும் *
அண்டமுந்தானாய்நின்றவெம்பெருமான்
அரங்கமாநகரமர்ந்தானே. (க)

இந்திரன்பிரமனீசனென்றிவர்கள்
எண்ணில்பல்குணங்களேயியற்ற *
தந்தையுந்தாயுமக்களும்மிக்க
சுற்றமும் சுற்றிநின்றகலாப்
பந்தமும் * பந்தமறுப்பதோர்மருந்தும்
பான்மையும், பல்லுயிர்க்கெல்லாம் *
அந்தமும்வாழ்வுமாயவெம்பெருமான்
அரங்கமாநகரமர்ந்தானே. (உ)

மன்னுமாநிலனும்மலைகளுங்கடலும்
வானமுந்தானவருலகும் *
துன்னுமாயிருளாய்த்துலங்கொளிசுருங்கித்
தொல்லைநான்மறைகளும்மறைய *
பின்னும்வானவர்க்கும்முனிவர்க்கும்நல்கிப்
பிறங்கிருள்நிறங்கெட * ஒருநாள்
அன்னமாயன்றங்கருமறைபயந்தான்
அரங்கமாநகரமர்ந்தானே. (ங)

மாயிருங்குன்றமொன்றுமத்தாக
மாசுணமதனொடுமளவி *
பாயிரும்பௌவம்பகடுவிண்டலறப்
படுதிரைவிசும்பிடைப்படர *
சேயிருவிசும்புந்திங்களுஞ்சுடரும்
தேவருந்தாமுடன்திசைப்ப *
ஆயிரந்தோளாலலைகடல்கடைந்தான்
அரங்கமாநகரமர்ந்தானே. (ச)

எங்ஙனேயுய்வர்? தானவர்நினைந்தால்
இரணியனிலங்குபூணகலம் *
பொங்குவெங்குருதிபொன்மலைபிளந்து,
பொழிதருமருவிபொத்திழிய *

வெங்கண்வாளெயிற்றோர்வெள்ளிமாவிலங்கல்
விண்ணுறக்கனல்விழித்தெழுந்தது *
அங்ஙனேயொக்கவரியுருவானான்
அரங்கமாநகரமர்ந்தானே. (௫)

ஆயிரங்குன்றம்சென்றுதொக்கனைய
அடல்புரையெழில்திகழ்திரள்தோள் *
ஆயிரந்துணியவடல்மழுப்பற்றி
மற்றவனகல்விசும்பணைய *
ஆயிரம்பெயராலமரர்சென்றிறைஞ்ச
அறிதுயிலலைகடல்நடுவே *
ஆயிரஞ்சுடர்வாயரவணைத்துயின்றான்
அரங்கமாநகரமர்ந்தானே. (௬)

சுரிகுழற்கனிவாய்த்திருவினைப்பிரித்த
கொடுமையிற்கடுவிசையரக்கன் *
எரிவிழித்திலங்குமணிமுடிபொடிசெய்து
இலங்கைபாழ்படுப்பதற்கெண்ணி *
வரிசிலைவளையவடுசரம்துரந்து
மறிகடல்நெறிபட * மலையால்
அரிகுலம்பணிகொண்டலைகடலடைத்தான்
அரங்கமாநகரமர்ந்தானே. (எ)

↓↓ ஊழியாயோமத்துச்சியாய் ஒருகா
லுடைய தேரொருவனாய் * உலகில்
சூழிமால்யானைத்துயர்கெடுத்து
இலங்கைமலங்கவன்றடுசரந்துரந்து *
பாழியால்மிக்கபார்த்தனுக்கருளிப்
பகலவனொளிகெட * பகலே
ஆழியாலன்றங்காழியைமறைத்தான்
அரங்கமாநகரமர்ந்தானே. (அ)

பேயினார்முலையூண்பிள்ளையாய் ஒருகால்
பெருநிலம்விழுங்கி * அதுமிழ்ந்த
வாயனாய் மாலாயாலிலைவளர்ந்து
மணிமுடிவானவர்தமக்குச்

சேயனாய் * அடியேற்கணியனாய்வந்து
என்சிந்தையுள்வெந்துயரறுக்கும் *
ஆயனாயன்றுகுன்றமொன்றெடுத்தான்
அரங்கமாநகரமர்ந்தானே. (க)

↓↓ பொன்னும்மாமணியும்முத்தமும்சுமந்து
பொருதிரைமாநதிபுடைசூழ்ந்து *
அன்னமாடுலவுமலேபுனல்சூழ்ந்த
அரங்கமாநகரமர்ந்தானை *
மன்னுமாமாடமங்கையர்தலைவன்
மானவேற்கலியன்வாயொலிகள் *
பன்னியபனுவல்பாடுவார்நாளும்
பழவினைபற்றறுப்பாரே. (க0)

அடிவரவு:—பண்டை இந்திரன் மன்னு மாயிரும் எங்ஙனே ஆயிரம் சுரி ஊழி பேயினார் பொன்னும் ஏழை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## அ - ஆந் திருமொழி - ஏழையேதலன்.



திருவரங்கம். (ரு)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தந்யாசிராகம் - ஆதிதாளம்.)

↓↓ ஏழையேதலன்கீழ்மகனென்னாது
இரங்கி மற்றவற்கின்னருள்சுரந்து *
மாழைமான்மடநோக்கியுன்தோழி
உம்பியெம்பியென்றொழிந்திலை * உகந்து,
தோழன்நீயெனக்கிங்கொழியென்ற
சொற்கள்வந்து அடியேன் மனத்திருந்திட *
ஆழிவண்ண! நின்னடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே! (க)

வாதமாமகன்மர்க்கடம்விலங்கு
மற்றோர்சாதியென்றொழிந்திலை * உகந்து
காதலாதரங்கடலினும்பெருகச் செய்
தகவினுக்கில்லைகைம்மாறென்று *

கோதில்வாய்மையினுயொடுமுடனே
உண்பன்நானென்றவொண்பொருள் * எனக்கும்
ஆதல்வேண்டுமென்றடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே ! (உ)

கடிகொள்பூம்பொழிற்காமருபொய்கை
வைகுதாமரைவாங்கியவேழம் *
முடியும்வண்ணமோர்முழுவலிமுதலை
பற்ற மற்றதுநின்சரண்நினைப்ப *
கொடியவாய்விலங்கின்னுயிர்மலங்கக்
கொண்டசீற்றமொன்றுண்டுளதறிந்து * உன்
அடியனேனும்வந்தடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே ! (௩)

நஞ்சுசோர்வதோர்வெஞ்சினவரவம்
வெருவிவந்துநின்சரணெனச்சரண *
நெஞ்சிற்கொண்டுநின்னஞ்சிறைப்பறவைக்கு
அடைக்கலம்கொடுத்தருள்செய்ததறிந்து *
வெஞ்சொலாளர்கள்நமன்தமர்கடியர்
கொடியசெய்வனவுள * அதற்குஅடியேன்
அஞ்சிவந்துநின்னடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே ! (௪)

மாகமாநிலம்முழுதும்வந்திறைஞ்சும்
மலரடிகண்டமாமறையாளன் *
தோகைமாமயிலன்னவரின்பம்
துற்றிலாமையில அத்த ! இங்கொழிந்து *
போகம்நீயெய்திப்பின்னும்நம்மிடைக்கே
போதுவாயென்றபொன்னருள் * எனக்கும்
ஆகவேண்டுமென்றடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே ! (௫)

மன்னுநான்மறைமாமுனிபெற்ற
மைந்தனை மதியாதவெங்கூற்றந்
தன்னையஞ்சி * நின்சரணெனச்சரணாய்த்
தகவில்காலனையுகமுனிந்தொழியா *

பின்னையென்றும்நின் திருவடிபிரியாவண்ணம்
எண்ணியபேரருள் * எனக்கும்
அன்னதாகுமென்றடியிணையடைந்தேன
அணிபொழில்திருவரங்கத்தம்மானே ! (சா)

ஓதுவாய்மையும்உவனியப்பிறப்பும்
உனக்குமுன் தந்தவந்தணனொருவன் *
காதலென்மகன்புகலிடங்காணேன்
கண்டுநீதருவாயெனக்கென்று *
கோதில்வாய்மையினானுனைவேண்டிய
குறைமுடித்தவன்சிறுவனைக்கொடுத்தாய் *
ஆதலால்வந்துன்னடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே ! (எ)

வேதவாய்மொழியந்தணனொருவன்
எந்தை! நின்சரண், என்னுடைமனைவி *
காதல்மக்களைப்பயத்தலுங்காணாள்
† கடியதோர்தெய்வங்கொண்டொளிக்குமென்றழைப்ப *
ஏதலார்முன்னேயின்னருளவற்குச்செய்து
உன்மக்கள்மற்றிவரென்றுகொடுத்தாய் *
ஆதலால்வந்துன்னடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே ! (அ)

↓↓ துளங்குநீண்முடியரசர்தமகுரிசில்
தொண்டைமன்னவன் திண்திறலொருவற்கு *
உளங்கொளன்பினோடின்னருள்சுரந்து
அங்கோடுநாழிகையேழுடனிருப்ப *
வளங்கொள்மந்திரம்மற்றவற்கருளிச்
செய்தவாறு அடியேனறிந்து * உலக
மளந்தபொன்னடியேயடைந்துய்ந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே ! (கூ)

↓↓ மாடமாளிகைசூழ்திருமங்கை
மன்னன் ஒன்னலர்தங்களைவெல்லும் *
ஆடல்மாவலவன்கலிகன்றி
அணிபொழில்திருவரங்கத்தம்மானை *

---

† 'கடியதெய்வம்' என்றும் பாடம்.

நீடுதொல்புகழாழிவல்லானை
எந்தையைநெடுமாலைநினைந்த *
பாடல்பத்திவைபாடுமின்தொண்டீர் !
பாட † நும்மிடைப்பாவம்நில்லாவே. (கo)

அடிவரவு:—ஏழை வாதம் கடி நஞ்சு மாகம் மனம் ஓது வேதம் துளங்கு மாடம் கை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## கூ - ஆம் திருமொழி - கையிலங்கு.



### திருப்பேர்நகர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (அடாணாராகம் - ஜம்பைதாளம்.)

↓↓ கையிலங்காழி ‡ சங்கன்கருமுகில்திருநிறத்தன் *
பொய்யிலன்மெய்யன் தன்தாளடைவரேல்அடிமையாக்கும் *
செய்யலர்கமலமோங்கு செறிபொழில்தென்திருப்பேர் *
பையரவணையான்நாமம் பரவிநானுய்ந்தவாறே ! (க)

வங்கமார்கடல்களேழும் மலையும்வானகமும்மற்றும் *
அங்கண்மாஞாலமெல்லாம் அமுதுசெய்துமிழ்ந்தவெந்தை *
திங்கள்மாமுகிலணவு செறிபொழில்தென்திருப்பேர் *
எங்கள்மாலிறைவன்நாமம் ஏத்திநானுய்ந்தவாறே ! (உ)

ஒருவனையுந்திப்பூமேல் ஓங்குவித்து, ஆகந்தன்னால் *
ஒருவனைச்சாபம்நீக்கி உம்பராளென்றுவிட்டான் *
பெருவரைமதிள்கள்சூழ்ந்த பெருநகரரவணைமேல் *
கருவரைவண்ணன் § தென்பேர் கருதிநானுய்ந்தவாறே ! (ங)

ஊனமர்தலையொன்றேந்தி உலகெலாம்திரியுமீசன் *
ஈனமர்சாபம்நீக்காயென்ன ஒண்புனலையீந்தான் *
தேனமர்பொழில்கள்சூழ்ந்த செறிவயல்தென்திருப்பேர் *
வானவர்தலைவன்நாமம் வாழ்த்திநானுய்ந்தவாறே ! (ச)

வக்கரன்வாய்முன்கீண்ட மாயனே ! என்றுவானோர்
புக்கு * அரண்தந்தருளாயென்னப் பொன்னாகத்தானை *
நக்கரியுருவமாகி நகங்கிளர்ந்திடந்துகந்த *
சக்கரச்செல்வன்தென்பேர்த் தலைவன்தாளடைந்துய்ந்தேனே. (ரு)

† 'நும்முடை' என்பதும் பாடம். ‡ 'சங்கம்' என்பது வ்யாக்யாநபாடம்.
§ 'தன்பேர்' என்பது வ்யாக்யாநபாடம்.

விலங்கலாற்கடலடைத்து விளங்கிழைபொருட்டு * வில்லால்
இலங்கைமாநகர்க்கிறைவன் இருபதுபுயம்துணித்தான் *
நலங்கொள்நான்மறைவல்லார்கள் ஓத்தொலியேத்தக்கேட்டு *
மலங்குபாய்வயல்திருப்பேர் மருவிநான்வாழ்ந்தவாறே! (சு)

வெண்ணெய்தானமுதுசெய்ய வெகுண்டுமத்தாய்ச்சியோச்சி *
கண்ணியார்குறுங்கயிற்றால் கட்டவெட்டென்றிருந்தான் *
திண்ணமாமதிள்கள்சூழ்ந்த தென்திருப்பேருள் * வேலை
வண்ணனார்நாமம் நாளும்வாய்மொழிந்துய்ந்தவாறே! (எ)

அம்பொனாருலகமேழுமறிய ஆய்ப்பாடிதன்னுள் *
கொம்பனார்பின்னைகோலம் கூடுதற்கேறுகொன்றான் *
செம்பொனார்மதிள்கள்சூழ்ந்த தென்திருப்பேருள்மேவும் *
எம்பிரான்நாமம் நாளுமேத்திநானுய்ந்தவாறே! (அ)

நால்வகைவேதம்ஐந்துவேள்வி ஆறங்கம்வல்லார் *
மேலைவானவரில்மிக்க வேதியர்ஆதிகாலம் *
சேலுகள்வயல்திருப்பேர்ச் செங்கண்மாலோடும்வாழ்வார் *
சீலமாதவத்தர்சிந்தையாளி என்சிந்தையானே. (கூ)

↓↓ வண்டறைபொழில்திருப்பேர் வரியரவணையில் * பள்ளி
கொண்டுறைகின்றமாலைக் கொடிமதிள்மாடமங்கை *
திண்திறல்தோட்கலியன் செஞ்சொலால்மொழிந்தமாலை *
கொண்டிவைபாடியாடக் கூடுவர்நீள்விசும்பே. (கo)

அடிவரவு:—கை வங்கம் ஒருவனை ஊன் வக்கரன் விலங்கல் வெண்ணெய் அம்பொன் நால்வகை வண்டறை தீதறு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## கo - ஆந் திருமொழி - தீதறு.



### திருநந்திபுரவிண்ணகரம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (சுருட்டிராகம் - ஜம்பைதாளம்.)

↓↓ தீதறுநிலத்தொடெரிகாலினொடு நீர்கெழுவிசும்புமவையாய் *
மாசறுமனத்தினொடுஉறக்கமொடிறக்கை யவையாயபெருமான *
தாய் † செறவுளைந்துதயிருண்டுகுடமாடு தடமார்வர், தகைசேர் *
நாதனுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே! (க)

† 'சிற' என்று சிலர் பாடமோதுவார்; அப்பொழுது 'சிற' என்பது குறுகியதென்க.

உய்யும்வகையுண்டுசொனசெய்யில் உலகேழும்ஒழியாமைமுனநாள் *
மெய்யினளவேயமுதுசெய்யவல ஐயனவன்மேவுநகர்தான் *
மையவரிவண்டுமதுவுண்டுகிளையோடு மலர்கிண்டி, அதன்மேல் *
நைவளம்நவிற்றுபொழில் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே! (உ)

உம்பருலகேழுகடலேழுமலையேழும் ஒழியாமைமுனநாள் *
தம்பொன்வயிறாரளவுமுண்டுஅவையுமிழ்ந்த தடமார்வர், தகைசேர் *
வம்புமலர்கின்றபொழில் பைம்பொன்வருதும்பிமணிகங்குல்வயல்சூழ் *
நம்பனுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே! (௩)

பிறையினொளியெயிறிலகமுறுகியெதிர்பொருதுமென வந்தஅசுரர் *
இறைகளவைநெறுநெறெனவெறிய அவர்வயிறழல நின்றபெருமான் *
சிறைகொள்மயில்குயில்பயிலமலர்களுகஅளிமுரல அடிகொள்நெடுமா *
நறைசெய்பொழில்மழைதவழும் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே!

மூளவெரிசிந்திமுனிவெய்தி அமர்செய்துமென வந்தவசுரர் *
தோளுமவர்தாளுமுடியோடுபொடியாக நொடியாமளவெய்தான் *
வாளும்வரிவில்லும்வளையாழிகதைசங்கமிவை அங்கையுடையான் *
நாளுமுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே! (ரு)

தம்பியொடுதாமொருவர்தன்துணைவி காதல்துணையாகமுனநாள் *
வெம்பியெரிகானகமுலாவுமவர்தாம் இனிதுமேவுநகர்தான் *
கொம்புகுதிகொண்டுகுயில்கூவமயிலாலும் எழிலார்புறவுசேர் *
நம்பியுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே! (சா)

தந்தைமனமுந்துதுயர்நந்தஇருள்வந்தவிறல் நந்தன்மதலை *
எந்தையிவனென்றமரர்கந்தமலர்கொண்டுதொழ நின்றநகர்தான் *
மந்தமுழவோசைமழையாகவெழுகார் மயில்களாடுபொழில்சூழ் *
நந்திபணிசெய்தநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே! (எ)

எண்ணில்நினைவெய்தியினியில்லையிறையென்று முனியாளர்திருவார் *
பண்ணில்மலிகீதமொடுபாடி அவராடலொடு கூடஎழிலார் *
மண்ணிலிதுபோலநகரில்லையென வானவர்கள் தாம்மலர்கள்தூய் *
நண்ணியுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே! (அ)

வங்கமலிபௌவமதுமாமுகடினுச்சிபுக, மிக்கபெருநீர் *
அங்கமழியாரவனதாணைதலைசூடும் அடியாரறிதியேல் *
பொங்குபுனலுந்துமணிகங்குலிருள்சீறுமொளி எங்குமுளதால் *
நங்கள்பெருமானுறையும் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே! (கூ)

↓↓ நறைசெய்பொழில்மழைதவழும் நந்திபுரவிண்ணகரம்நண்ணியுறையு
உறைகொள்புகராழிசுரிசங்கமவை அங்கையுடையானை*ஒளிசேர்[ம்*
கறைவளரும்வேல்வல்ல கலியனொலிமாலையிவையைந்துமைந்தும் *
முறையிலிவைபயிலவலஅடியவர்கள்கொடுவினைகள் முழுதகலுமே. ()

அடிவரவு:—தீது உய்யும் உம்பர் பிறை மூள தம்பியொடு தநதை எண்ணில் வங்கம் நறைசெய் வண்டு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ஆறாம்பத்து.

### க - ஆந் திருமொழி - வண்டுணும்.



திருவிண்ணகர். (க)

வஞ்சிவிருத்தம். (புன்னாகவாரளிராகம் - அடதாளம்.)

↓↓ வண்டுணுநறுமலரிண்டைகொண்டு *
பண்டைநம்வினைகெடவென்று * அடிமேல்
தொண்டருமமரரும்பணியநின்று * அங்கு
அண்டமொடுஅகலிடமளந்தவனே ! *
† ஆண்டாய் ! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே ! (க)

அண்ணல்செய்து அலைகடல்கடைந்து * அதனுள்
கண்ணுதல்நஞ்சுண்ணக்கண்டவனே ! *
விண்ணவரமுதுண அமுதில்வரும் *
பெண்ணமுதுண்டஎம்பெருமானே ! *
ஆண்டாய் ! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே ! (உ)

குழல்நிறவண்ண ! நின்கூறுகொண்ட *
தழல்நிறவண்ணன் நண்ணார்நகரம்
விழ * நனிமலைசிலைவளைவுசெய்து * அங்கு
அழல்நிறஅம்பதுவானவனே ! *
ஆண்டாய் ! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே ! (ங)

† இந்த அளவடியிரண்டும் தனிமகுடம்.

நிலவொடுவெயில்நிலவிருசுடரும் *
உலகமுமுயிர்களும்உண்டொருகால் *
கலைதருகுழவியின்உருவினையாய் *
அலைகடலாலிலைவளர்ந்தவனே ! *
ஆண்டாய் ! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே ! (சு)

பாரொழுகடலெழுமலையெழுமாய் *
சீர்கெழும்இவ்வுலகேழுமெல்லாம் *
ஆர்கெழுவயிற்றினிலடக்கிநின்று * அங்கு
ஓரெழுத்துஓருருவானவனே ! *
ஆண்டாய் ! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே ! (ரு)

கார்கெழுகடல்களும்மலைகளுமாய் *
ஏர்கெழுமுலகமுமாகி * முத
லார்களும்அறிவருநிலையினையாய் *
சீர்கெழுநான்மறையானவனே ! *
ஆண்டாய் ! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே ! (சு)

உருக்குறுநறுநெய்கொண்டுஆரழலில் *
இருக்குறுமந்தணர்சந்தியின்வாய் *
பெருக்கமொடுஅமரர்களமரநல்கும் *
இருக்கினில்இன்னிசையானவனே ! *
ஆண்டாய் ! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே ! (எ)

காதல்செய்துஇளையவர்கலவிதரும் *
வேதனைவினையதுவெருவுதலாம் *
ஆதலினுனதடியணுகுவன்நான் *
போதலர்நெடுமுடிப்புண்ணியனே ! *
ஆண்டாய் ! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே ! (அ)

சாதலும்பிறத்தலும்என்றிவற்றை *
காதல்செய்யாதுஉனகழலடைந்தேன் *
ஓதல்செய்நான்மறையாகி * உம்பர்
ஆதல்செய்மூவுருவானவனே ! *

ஆண்டாய்! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே ! (௯)

↓↓ பூமருபொழிலணிவிண்ணகர்மேல *
காமருசீர்க்கலிகன்றிசொன்ன *
பாமருதமிழிவைபாடவல்லார் *
வாமனனடியிணைமருவுவரே. (க0)

அடிவரவு:—வண்டு அண்ணல் குழல் நிலவொடு பார கார உருக்குறு காதல் சாதல் பூமரு பொறுத்தேன்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## உ - ஆந் திருமொழி - பொறுத்தேன்.



### திருவிண்ணகர். (உ)

கலிநிலைத்துறை. (நாதநாமக்ரியைராகம் - ஆதிதாளம்.)

↓↓ பொறுத்தேன்புன்சொல்நெஞ்சில் பொருளின்பமெனவிரண்டும்
இறுத்தேன் * ஐம்புலன்கட்கிடனாயின வாயிலொட்டி
அறுத்தேன் * ஆர்வச்செற்றமவை † தம்மை மனத்தகற்றி
வெறுத்தேன் * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே ! (க)

மறந்தேனுன்னைமுன்னம் மறந்தமதியின்மனத்தால் *
இறந்தேனெத்தனையும் அதனாலிடும்பைக்குழியில *
பிறந்தேயெய்த்தொழிந்தேன் பெருமான் ! திருமார்பா ! *
சிறந்தேன்நின்னடிக்கே திருவிண்ணகர்மேயவனே ! (உ)

மானேய்நோக்கியர்தம வயிற்றுக்குழியிலுழைக்கும் *
‡ ஊனேயாக்கைதன்னை உதவாமையுணர்ந்துணர்ந்து *
வானே ! மாநிலமே ! வந்துவந்தென்மனத்திருந்த
தேனே ! * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே ! (௩)

பிறிந்தேன்பெற்றமக்கள்பெண்டிரென்றிவர் பின்னுதவா
தறிந்தேன் * நீடணித்தவருளென்னும் ஒள்வாளுருவி
எறிந்தேன் * ஐம்புலன்களிடர்தீர எறிந்துவந்து
செறிந்தேன் * $ நின்னடிக்கே திருவிண்ணகர்மேயவனே ! (௪)

† 'தன்னை' எனச் சிலர் பாடமோதுவர்.

‡ 'ஊனேராக்கை' என்பதும் பாடம்.

$ 'நின்னடைந்தேன்' என்று சில ஸ்ரீகோசங்கள்.

பாண்தேன்வண்டறையுங்குழலார்கள் பல்லாண்டிசைப்ப *
ஆண்டார்வையமெல்லாம் அரசாகி * முன்னாண்டவரே
மாண்டாரென்றுவந்தார் அந்தோ! மனைவாழ்க்கைதன்னை
வேண்டேன் * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! (ரு)

கல்லாவைம்புலன்களவை கண்டவாறுசெய்யகில்லேன் *
மல்லா! மல்லமருள்மல்லர்மாள மல்லடர்த்த
மல்லா! * மல்லலம்சீர் மதிள்நீரிலங்கையழித்த
வில்லா! * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! (சு)

வேறாயானிருந்தேன் வெகுளாதுமனக்கொள்ளெந்தாய்! *
ஆறாவெந்நரகத்து அடியேனையிடக்கருதி *
கூறாவைவர்வந்து குமைக்கக்குடிவிட்டவரை *
தேறாதுன்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! (எ)

தீவாய்வல்வினையார் உடன்நின்றுசிறந்தவர்போல் *
மேவாவெந்நரகத்து † இடவுற்றுவிரைந்துவந்தார் *
மூவாவானவர்தம்முதல்வா! மதிகோள்விடுத்த
தேவா! * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! (அ)

போதார்தாமரையாள்புலவிக் குலவானவர்தம்
கோதா! * கோதில்செங்கோல் குடைமன்னரிடைநடந்த
தூதா! * தூமொழியாய்! சுடர்போலென்மனத்திருந்த
வேதா! * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! (கூ)

‖ தேனார்பூம்புறவில் திருவிண்ணகர்மேயவனை *
வானாரும்மதிள்சூழ் வயல்மங்கையர்கோன், * மருவார்
ஊனார்வேற்கலியன் ஒலிசெய்தமிழ்மாலைவல்லார் *
கோனாய், வானவர்தம் கொடிமாநகர்கூடுவரே. (க0)

**அடிவரவு:**—பொறுத்தேன் மறந்தேன் மானேய பிறந்தேன் பாண் கல்லா வேறா தீவாய் போதார் தேனார் துறப்பேன்

**திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.**



† 'இடருற்று' என்று ஓதுவர்.

## ௩ - ஆந் திருமொழி - துறப்பேன்.

திருவிண்ணகர். (௩)

கலிநிலைத்துறை (ஆநந்தபைரவிராகம் - ஆதிதாளம்.)

↓↓ துறப்பேனல்லேன் இன்பம, துறவாது * நின்னுருவம்
மறப்பேனல்லேன் என்றும்மறவாது * யானுலகில்
பிறப்பேனாகவெண்ணேன் பிறவாமைபெற்றது * நின்
திறத்தேனாதன்மையால் திருவிண்ணகரானே ! (க)

துறந்தேனார்வச்செற்றச்சுற்றம் துறந்தமையால் *
சிறந்தேன்நின்னடிக்கேயடிமை, திருமாலே ! *
அறந்தானாய்த்திரிவாய் ! உன்னையென்மனத்தகத்தே *
திறம்பாமற்கொண்டேன் திருவிண்ணகரானே ! (௨)

மானேய்நோக்குநல்லார் மதிபோல்முகத்துலவும் *
ஊனேய்கண்வாளிக்கு உடைந்தோட்டந்துஉன்னடைந்தேன் *
கோனே ! குறுங்குடியுட் குழகா ! திருநறையூர்த்
தேனே ! * வருபுனல்சூழ் திருவிண்ணகரானே ! (௩)

சாந்தேந்துமென்முலையார் தடந்தோள்புணரின்பவெள்ளத்
தாழ்ந்தேனை * அருநரகத்தழுந்தும் பயன்படைத்தேன் *
போந்தேன்புண்ணியனே ! உன்னையெய்தியென்தீவினைகள்
தீர்ந்தேன் * நின்னடைந்தேன் திருவிண்ணகரானே ! (௪)

மற்றோர்தெய்வமெண்ணேன் உன்னையென்மனத்துவைத்துப்
பெற்றேன் * பெற்றதுவும் பிறவாமையெம்பெருமான் ! *
வற்றாநீள்கடல்சூழ் இலங்கையிராவணனைச்
செற்றாய் ! * கொற்றவனே ! திருவிண்ணகரானே ! (௫)

மையொண்கருங்கடலும் நிலனுமமணிவரையும் *
செய்யசுடரிரண்டும் இவையாயநின்னை * நெஞ்சில்
உய்யும்வகையுணர்ந்தேன் உண்மையாலினி * யாதும்மற்றோர்
தெய்வம்பிறிதறியேன் திருவிண்ணகரானே ! (௬)

வேறேகூறுவதுண்டு அடியேன்விரித்துரைக்கு
மாறே * நீபணியாதடை நின்திருமனத்து *
கூறேன்நெஞ்சுதன்னால் குணங்கொண்டு * மற்றோர்தெய்வம
தேறேன்உன்னையல்லால் திருவிண்ணகரானே ! (௭)

முளிந்தீந்தவெங்கடத்து மூரிப்பெருங்களிற்றால் *
விளிந்தீந்தமாமரம்போல் வீழ்ந்தாரைநினையாதே *
அளிந்தோர்ந்தசிந்தை நின்பாலடியேற்கு * வானுலகம்
தெளிந்தேயென்றெய்துவது? திருவிண்ணகரானே ! (௯)

சொல்லாய்திருமார்வா ! உனக்காகித்தொண்டுபட்ட
நல்லேனை * வினைகள்நலியாமை நம்புநம்பீ ! *
† மல்லா ! குடமாடீ ! மதுசூதனே ! * உலகில்
செல்லாநல்லிசையாய் ! திருவிண்ணகரானே ! (௰)

‡‡ தாரார்மலர்க்கமலத் தடஞ்சூழ்ந்ததண்புறவில் *
சீரார்நெடுமறுகில் திருவிண்ணகரானை *
காரார்புயல்தடக்கைக் கலியனொலிமாலை *
ஆராரிவைவல்லார் அவர்க்குஅல்லலில்லாமே. (௧௧)

அடிவரவு:— துறப்பேன் துறந்தேன் மானேய சாந்து மற்றோரை வேறே முளிந்து சொல்லாய் தாரார் கண்ணும்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



ச - ஆந் திருமொழி - கண்ணுஞ்சுழன்று.



திருநறையூர். (க)

கலிநிலைத்துறை. (பந்துவராளி ராகம் - ஆதிதாளம்)

‡‡ கண்ணும்சுழன்று பீளையோடு ஐளைவந்தேங்கினால் *
பண்ணின்மொழியார் பையநடமினென்னாதமுன் *
விண்ணும்மலையும் வேதமும்வேள்வியுமாயினான் *
நண்ணுநறையூர் நாம்தொழுதும்எழுநெஞ்சமே ! (க)

கொங்குண்குழலார் கூடியிருந்துசிரித்து * நீர்
இங்கென் ? இருமி எம்பால்வந்ததென்றிகழாதமுன் *
திங்களெரிகால் செஞ்சுடராயவன்தேசுடை *
நங்கள்நறையூர் நாம்தொழுதும்எழுநெஞ்சமே ! (உ)

கொங்கார்குழலார் கூடியிருந்துசிரித்து * எம்மை
எங்கோலம்ஐயா ! என் ? இனிக்காண்பதென்னாதமுன் *
செங்கோல் ‡ வலவன்தான் பணிந்தேத்தித்திகழுமூர் *
நங்கோன்நறையூர் நாம்தொழுதும் எழுநெஞ்சமே ! (௩)

† 'மல்லார்' என்பதும் பாடம். ‡ 'வளவன்' என்றும் பாடம்.

கொம்புமரவுழும் வல்லியும்வென்றநுண்ணேரிடை *
வம்புண்குழலார் வாசலடைத்திகழாதமுன் *
செம்பொன்கமுகினம் தான்கனியுஞ்செழுஞ்சோலைசூழ் *
நம்பன்நறையூர் நாம்தொழுதும்எழுநெஞ்சமே ! (ச)

விலங்கும்கயலும் வேலுமொண்காவியும்வென்றகண் *
சலங்கொண்டசொல்லார் தாங்கள்சிரித்திகழாதமுன் *
மலங்கும்வராலும் வாளையும்பாய்வயல்சூழ்தரு *
நலங்கொள்நறையூர் நாம்தொழுதும்எழுநெஞ்சமே ! (ரு)

மின்னேரிடையார் வேட்கையைமாற்றியிருந்து *
என் ? நீரிருமி எம்பால்வந்ததென்றிகழாதமுன் *
தொன்னீரிலங்கைமலங்க விலங்கெரியூட்டினான் *
நன்னீர்நறையூர் நாம்தொழுதும்எழுநெஞ்சமே ! (சா)

வில்லேர்நுதலார் வேட்கையைமாற்றிச்சிரித்து * இவன்
பொல்லான்திரைந்தானென்னும் புறனுரைகேட்பதன்முன் *
சொல்லார்மறைநான்கோதி உலகில்நிலாயவர் *
நல்லார்நறையூர் நாம்தொழுதும்எழுநெஞ்சமே ! (எ)

வாளொண்கண்நல்லார்தாங்கள் மதனனென்றார்தம்மை *
கேண்மின்களீளையோடு ஏங்குகிழவனென்னாதமுன் *
வேள்வும்விழவும் வீதியிலென்றுமறாதவூர் *
நாளும்நறையூர் நாமதொழுதும்எழுநெஞ்சமே ! (அ)

கனிசேர்ந்திலங்குநல்வாயவர் காதன்மைவிட்டிட *
குனிசேர்ந்துடலம் கோலில்தளர்ந்திளையாதமுன் *
பனிசேர்விசும்பில் பால்மதிகோள்விடுத்தானிடம் *
நனிசேர்நறையூர் நாம்தொழுதும்எழுநெஞ்சமே ! (கூ)

‡‡ பிறைசேர்நுதலார் பேணுதல்நம்மையிலாதமுன் *
நறைசேர்பொழில்சூழ் நறையூர்தொழுநெஞ்சமே ! என்ற *
கறையார்நெடுவேல்மங்கையர்கோன் கலிகன்றிசொல் *
மறவாதுரைப்பவர் வானவர்க்கின்னரசாவரே. (க0)

அடிவரவு:—கண்ணும் கொங்குண் கொங்கார் கொம்பு விலங்கு மின் வில் வாள் கனி பிறை கலங்க.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



# ரு - ஆந் திருமொழி - கலங்கமுந்நீர்.

## திருநறையூர். (உ)

கலிநிலைத்துறை (செந்துருட்டி ராகம் - அடதாளம்.)

†† கலங்கமுந்நீர்கடைந்து ! அமுதங்கொண்டு * இமையோர்
துளங்கல்தீரநல்கு சோதிச்சுடராய *
வலங்கையாழிஇடங்கைச்சங்கம் உடையானூர் *
நலங்கொள்வாய்மை அந்தணர்வாழுமநறையூரே. (க)

முனையார்சீயமாகி அவுணன்முரண்மார்வம் *
புனைவாளுகிரால் போழ்படவீர்ந்தபுனிதனூர் *
சினையார்தேமாஞ்செந்தளிர்கோதிக் குயில்கூவும *
நனையார்சோலைசூழ்ந்து அழகாயநறையூரே. (உ)

ஆனைப்புரவிதேரொடுகாலாளணிகொண்ட *
சேனைத்தொகையைச்சாடி இலங்கைசெற்றானூர் *
மீனைத்தழுவிவீழ்ந்தெழும் மள்ளர்க்குஅலமந்து *
நானப்புதலில் ஆமையொளிக்கும்நறையூரே. (௩)

உறியார்வெண்ணெயுண்டு உரலோடுங்கட்டுண்டு *
வெறியார்கூந்தல்பின்னைபொருட்டு ஆன்வென்றானூர் *
பொறியார்மஞ்ஞை பூம்பொழில்தோறுமநடமாட *
நறுநாண்மலர்மேல் வண்டிசைபாடும்நறையூரே. (௪)

விடையேழ்வென்று மென்தோளாய்ச்சிக்கன்பனாய் *
நடையால்நின்றமருதம்சாய்த்த நாதனூர் *
பெடையோடன்னம் பெய்வளையார்தம்பின்சென்று *
நடையோடியலி நாணியொளிக்குமநறையூரே. (ரு)

பகுவாய்வன்பேய்கொங்கைசுவைத்து ஆருயிருண்டு *
புகுவாய்நின்ற போதகம்வீழப்பொருதானூர் *
நெகுவாய்நெய்தற்பூமதுமாந்திக் கமலத்தின் *
நகுவாய்மலர்மேல் அன்னமுறங்கும்நறையூரே. (சா)

முந்துநூலும்முப்புரிநூலும் முன்னீந்த *
அந்தணாளன்பிள்ளையை அஞ்ஞான்றளித்தானூர் *
பொந்தில்வாழும் பிள்ளைக்காகிப் புள்ளோடி *
நந்துவாரும் பைம்புனல்வாவிநறையூரே. (௭

† 'அமுதங்கொண்டே' என்ற பாடம் செய்யுளோசைக்குச் சேரும்.

வெள்ளைப்புரவித்தேர்விசயற்காய் விறல்வியூகம்
விள்ள * சிந்துக்கோன்விழ வூர்ந்தவிமலனூர் *
கொள்ளைக்கொழுமீனுண் குருகுஓடிப்பெடையோடும் *
நள்ளக்கமலத்தேறலுகுச்கும் நறையூரே. (அ)

↓↓ பாரையூரும்பாரந்தீரப் பார்த்தன்தன்
தேரையூரும் * தேவதேவன்சேருமூர் *
தாரையூரும் தண்தளிர்வேலிபுடைசூழ *
நாரையூரும் நல்வயல்சூழ்ந்தநறையூரே. (கூ)

↓↓ தாமத்துளப நீண்முடிமாயன்தான்நின்ற *
நாமத்திரள்மாமாளிகைசூழ்ந்த நறையூர்மேல் *
காமக்கதிர்வேல்வலலான் கலியனொலிமாலை *
சேமத்துணையாம் செப்புமவர்க்குத்திருமாலே. (கO)

அடிவரவு:—கலங்க முனை ஆனை உறி விடை பகுவாய் முந்து வெள்ளை பாரை தாமம் அம்பரம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## சா - ஆந் திருமொழி - அம்பரமும்.



திருநறையூர் (ரூ)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தோடிராகம் - ஆதிதாளம்.)

↓↓ அம்பரமும்பெருநிலனும்திசைகளெட்டும்
அலைகடலும்குலவரையுமுண்டகண்டன் *
கொம்பமரும்வடமரத்தினிலைமேல் பள்ளி
கூடினான்திருவடியேகூடகிற்பீர்! *
வம்பவிழும்செண்பகத்தின்வாசமுண்டு
மணிவண்டுவகுளத்தின்மலர்மேல்வைகு *
செம்பியன்கோச்செங்கணான்சேர்ந்தகோயில
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. (க)

கொழுங்கயலாய்நெடுவெள்ளங்கொண்டகாலம்
குலவரையின்மீதோடியண்டத்தப்பால் *
எழுந்தினிதுவிளையாடுமீசனெந்தை
இணையடிக்கீழினிதிருப்பீர்! இனவண்டாலும் *

உழுஞ்செறுவில்மணிகொணர்ந்துகரைமேற்சிந்தி
உலகெல்லாம்சந்தனமுமகிலுங்கொள்ள *
செழும்பொன்னிவளங்கொடுக்கும்சோழன்சேர்ந்த
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. (உ)

பவ்வநீருடையாடையாகச்சுற்றிப்
பாரகலம்திருவடியாப்பவனம்மெய்யா *
செவ்விமாதிரமெட்டும்தோளா அண்டம்
திருமுடியாநின்றான்பாற்செல்லகிற்பீர்! *
கவ்வைமாகளிறுந்திவிண்ணியேற்ற
கழல்மன்னர்மணிமுடிமேற்காகமேற *
தெய்வவாள்வலங்கொண்டசோழன்சேர்ந்த
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. (ங)

பைங்கணாளரியுருவாய்வெருவநோக்கிப்
பருவரைத்தோளிரணியனைப்பற்றிவாங்கி *
அங்கைவாளுகிர்நுதியாலவனதாகம்
அங்குருதிபொங்குவித்தானடிக்கீழ்நிற்பீர்! *
வெங்கண்மாகளிறுந்திவிண்ணியேற்ற
விறல்மன்னர்திறலழியவெம்மாவுய்த்த *
செங்கணான்கோச்சோழன்சேர்ந்தகோயில்
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. (௪)

அன்றுலகமூன்றினையுமளந்து வேறா
அரியுருவாயிரணியனதாகங்கீண்டு *
வென்றவனைவிண்ணுலகிற்செலவுய்த்தாற்கு
விருந்தாவீர்! மேலெழுந்துவிலங்கல்பாய்ந்து *
பொன்சிதறிமணிகொணர்ந்துகரைமேற்சிந்திப்
புலம்பரந்துநிலம்பரக்கும்பொன்னிநாடன் *
தென்தமிழன் வடபுலக்கோன்சோழன்சேர்ந்த
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. (ரு)

தன்னாலேதன்னுருவம்பயந்ததானாய்த்
தயங்கொளிசேர்மூவுலகும்தானாய்வானாய் *
தன்னாலேதன்னுருவின்மூர்த்திமூன்றாய்த்
தானாயனாயினான்சரணென்றுய்வீர்! *

மின்னொடுவேலேந்துவிளைந்தவேளை
விண்ணேறத்தனிவேலுய்த்துலகமாண்ட *
தென்னாடன்குடகொங்கன்சோழன்சேர்ந்த
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. (௬)

முலைத்தடத்தநஞ்சுண்டுதுஞ்சப்பேய்ச்சி
முதுதுவரைக்குலபதியாக் காலிப்பின்னே *
இலைத்தடத்தகுழலூதியாயர்மாதர்
இனவளைகொண்டானடிக்கீழெய்தகிற்பீர் ! *
மலைத்தடத்தமணிகொணர்ந்துவையமுய்ய
வளங்கொடுக்கும்வருபுனலம்பொன்னிநாடன் *
சிலைத்தடக்கைக்குலச்சோழன்சேர்ந்தகோயில்
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. (எ)

முருக்கிலங்குகனித்துவர்வாய்ப்பின்னைகேள்வன்
மன்னெல்லாம்முன்னவியச்சென்று * வென்றிச்
செருக்களத்துத்திறலழியச்செற்றவேந்தன்
சிரந்துணித்தான்திருவடிநும்சென்னிவைப்பீர் ! *
இருக்கிலங்குதிருமொழிவாயெண்தோளீசற்கு
எழில்மாடமெழுபதுசெய்துலகமாண்ட *
திருக்குலத்துவளச்சோழன்சேர்ந்தகோயில்
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே (அ)

தாராளன்தண்ணரங்கவாளன் பூமேல்
தனியாளன்முனியாளரேத்தநின்ற
பேராளன் * ஆயிரம்பேருடையவாளன்
பின்னைக்குமணவாளன்பெருமைகேட்பீர் ! *
பாராளரவரிவரென்றழுந்தையேற்ற
படைமன்னருடல்துணியப்பரிமாவுய்த்த *
தேராளன்கோச்சோழன்சேர்ந்தகோயில்
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. (௯)

↓↓ செம்மொழிவாய்நால்வேதவாணர்வாழும்
திருநறையூர்மணிமாடச்செங்கண்மாலை *
பொய்ம்மொழியொன்றில்லாதமெய்ம்மையாளன்
புலமங்கைக்குலவேந்தன், புலமையார்ந்த *

அம்மொழிவாய்க்கலிகன்றியின்பப்பாடல்
பாடுவார், வியனுலகில்நமனார்பாடி *
வெம்மொழிகேட்டஞ்சாதேமெய்ம்மைசொல்லில்
விண்ணவர்க்குவிருந்தாகும்பெருந்தக்கோரே. (கய)

அடிவரவு:—அம்பரம் கொழு பவ்வம் பைங்கண் அன்று தன்னாலே மூலை முருக்கு தாராளன் செம்மொழி ஆளும்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## எ - ஆந் திருமொழி - ஆளும்பணியும்.



### திருநறையூர். (ச)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஆரபிராகம் - ரூபகதாளம்.)

↓↓ ஆளும்பணியுமடியேனைக்கொண்டான் விண்டநிசாசரரை *
தோளுந்தலையுந்துணிவெய்தச் சுடுவெஞ்சிலைவாய்ச்சரந்துரந்தான் *
வேளுஞ்சேயுமனையாரும் வேற்கணாரும்பயில்வீதி *
நாளும்விழவினொலியோவா நறையூர்நின்றநம்பியே. (க)

முனியாய்வந்துமூவெழுகால் முடிசேர்மன்னருடல்துணிய *
தனிவாய்மழுவின்படையாண்ட தாரார்தோளான், வார்புறவில் *
பனிசேர்முல்லைபல்லரும்பப் பானலொருபால்கண்காட்ட *
† நனிசேர்கமலமுகங்காட்டும் நறையூர்நின்றநம்பியே. (உ)

தெள்ளார்கடல்வாய்விடவாய சினவாளரவில்துயிலமர்ந்து *
துள்ளாவருமான்விழ வாளிதுரந்தான், இரந்தான்மாவலிமண் *
புள்ளார்புறவிற்பூங்காவி புலன்கொள்மாதர்கண்காட்ட *
நள்ளார்கமலமுகங்காட்டும் நறையூர்நின்றநம்பியே. (ங)

ஒளியாவெண்ணெயுண்டானென்றுரலோடாய்ச்சியொண்கயிற்றால் *
விளியாவார்க்கவாப்புண்டு விம்மியழுதான், மென்மலர்மேல் *
களியாவண்டுகள்ளுண்ணக் காமர்தென்றலலர்தூற்ற *
நளிர்வாய்முல்லைமுறுவலிக்கும் நறையூர்நின்றநம்பியே. (ச)

வில்லார்விழவில்வடமதுரை விரும்பிவிரும்பாமல்லடர்த்து *
கல்லார்திரள்தோட்கஞ்சனைக் காய்ந்தான்பாய்ந்தான்காளியன்மேல் *
சொல்லார்சுருதிமுறையோதிச் சோமுச்செய்யுந்தொழிலினோர் *
நல்லார்மறையோர்பலர்வாழும் நறையூர்நின்றநம்பியே. (ரு)

† 'நனிசேர் வயலுள் முத்தலைக்கும்' என்பது வ்யாக்யாநபாடம்.

வள்ளிகொழுநன்முதலாய மக்களோடுமுக்கணன் [ன் *
வெள்கியோட*விறல்வாணன் வியன்தோள்வனத்தைத்துணித்துகந்தா
பள்ளிகமலத்திடைப்பட்ட பகுவாயலவன்முகம்நோக்கி *
நள்ளியூடும்வயல்சூழ்ந்த நறையூர்நின்றநம்பியே. (சு)

மிடையாவந்தவேல்மன்னர்வீய விசயன்தேர்கடவி *
குடையாவரையொன்றெடுத்து ஆயர்கோவாய்நின்றான்கூராழிப
படையான் * வேதநான்கைந்துவேள்வி அங்கமாறிசையேழ் *
நடையாவல்லவந்தணர்வாழ் நறையூர்நின்றநம்பியே (எ)

பந்தார்விரலாள்பாஞ்சாலி கூந்தல்முடிக்க * பாரதத்துக்
கந்தார்களிற்றுக்கழல்மன்னர்கலங்கச் சங்கம்வாய்வைத்தான் *
செந்தாமரைமேலயனோடு சிவனுமனையபெருமையோர் *
நந்தாவண்கைமறையோர்வாழ் நறையூர்நின்றநம்பியே. (அ)

ஆறும்பிறையுமரவமும் அடம்புஞ்சடைமேலணிந்து * உடலம
நீறும்பூசியேறூரும் இறையோன்சென்றுகுறையிரப்ப *
மாறொன்றில்லாவாசநீர் வரைமார்பகலத்தளித்துகந்தான் *
நாறும்பொழில்சூழ்ந்தழகாய நறையூர்நின்றநம்பியே. (கூ)

↓↓ நன்மையுடையமறையோர்வாழ் நறையூர்நின்றநம்பியை *
கன்னிமதிள்சூழ்வயல்மங்கைக் கலியனொலிசெய்தமிழ்மாலை *
பன்னியுலகிற்பாடுவார் பாடுசாராபழவினைகள் *
மன்னியுலகமாண்டுபோய் வானோர்வணங்கவாழ்வாரே. (க0)

அடிவரவு:—ஆளும் முனி தெள்ளார ஒளியா வில் வள்ளி மிடையா பந்து ஆறும் நன்மை மான்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்



## அ - ஆந் திருமொழி - மான்கொண்ட.



### திருநறையூர். (ரு)

தரவுகொச்சககலிப்பா. (பைரவிராகம் - ஜம்பைதாளம்.)

↓↓ மான்கொண்டதோல்மார்வின் மாணியாய் * மாவலிமண்
தான்கொண்டு தாளாலளந்தபெருமானை *
தேன்கொண்டசாரல் திருவேங்கடத்தானை *
நான்சென்றுநாடி நறையூரிற்கண்டேனே. (க)

முந்நீரைமுன்னாள் கடைந்தானை * மூழ்த்தநாள்
அந்நீரைமீனாய் அமைத்தபெருமானை *
தென்னாலிமேய திருமாலையெம்மானை *
நன்னீர்வயல்சூழ் நறையூரிற்கண்டேனே. (௨)

தூவாயபுள்ளூர்ந்துவந்து துறைவேழம் *
மூவாமைநல்கி முதலைதுணித்தானை *
தேவாதிதேவனைச் செங்கமலக்கண்ணானை *
நாவாயுளானை நறையூரிற்கண்டேனே. (௩)

ஓடாவரியாய் இரணியனையூனிடந்த *
சேடார்பொழில்சூழ் திருநீர்மலையானை *
வாடாமலர்த்துழாய் மாலைமுடியானை *
நாள்தோறும்நாடி நறையூரிற்கண்டேனே. (௪)

கல்லார்மதிள்சூழ் கடியிலங்கைக்காரரக்கன் *
வல்லாகங்கீள வரிவெஞ்சரந்துரந்த
வில்லானை * செல்வவிபீடணற்கு வேறாக *
நல்லானைநாடி நறையூரிற்கண்டேனே. (௫)

உம்பருலகோடு உயிரெல்லாம் * உந்தியில்
வம்புமலர்மேல்படைத்தானைமாயோனை *
அம்பன்னகண்ணாள் அசோதைதன்சிங்கத்தை *
நம்பனைநாடி நறையூரிற்கண்டேனே. (௬)

கட்டேறுநீள்சோலைக் காண்டவத்தைத்தீமூட்டி
விட்டானை * மெய்யமமர்ந்த பெருமானை *
மட்டேறுகற்பகத்தை மாதர்க்காய் * வண்துவரை
நட்டானைநாடி நறையூரிற்கண்டேனே. (௭)

மண்ணின்மீபாரங்கெடுப்பான் மறமன்னர் *
பண்ணின்மேல்வந்த படையெல்லாம்பாரதத்து *
விண்ணின்மீதேற விசயன்தேரூர்ந்தானை *
நண்ணிநான்நாடி நறையூரிற்கண்டேனே. (௮)

†† பொங்கேறுநீள்சோதிப் பொன்னாழிதன்னோடும் *
சங்கேறுகோலத் தடக்கைப்பெருமானை *
கொங்கேறுசோலைக் குடந்தைக்கிடந்தானை *
நங்கோனைநாடி நறையூரிற்கண்டேனே. (௯)

↓↓ மன்னுமதுரை வசுதேவர்வாழ்முதலை *
நன்னறையூர்நின்ற நம்பியை * வம்பவிழ்தார்க்
கன்னவிலும்தோளான் கலியனொலிவல்லார் *
பொன்னுலகில்வானவர்க்குப் புத்தேளிராகுவரே.

அடிவரவு:—மான் முந்நீரை தூவாய ஓடா கல் உம்பர் கட மண்ணின் பொங்கு மன்னு பெடை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## கூ - ஆந் திருமொழி - பெடையடர்த்த.



### திருநறையூர். (கூ)

*தரவுகொச்சகக்கலிப்பா (யமுனாகல்யாணிராகம் - ரூபகதாளம்)*

↓↓ பெடையடர்த்தமடவன்னம் பிரியாது * மலர்க்கமலம்
மடலெடுத்துமதுநுகரும் வயலுடுத்ததிருநறையூர் *
முடையடர்த்தசிரமேந்தி மூவுலகும்பலிதிரிவோன் *
இடர்கெடுத்ததிருவாளன் இணையடியேயடைநெஞ்சே! (க)

கழியாரும்கனசங்கம் கலந்தெங்கும்நிறைந்தேறி *
வழியாரமுத்தீன்று வளங்கொடுக்கும்திருநறையூர் *
பழியாரும்விறலரக்கன் பருமுடிகளவைசிதற *
அழலாரும்சரந்துரந்தான் அடியிணையேயடைநெஞ்சே! (உ)

சுளைகொண்டபலங்கனிகள் தேன்பாய * கதலிகளின்
திளைகொண்டபழங்கெழுமு திகழ்சோலைத்திருநறையூர் *
வளைகொண்டவண்ணத்தன் பின்தோன்றல் * மூவுலகோடு
அளைவெண்ணெயுண்டான்தன் அடியிணையேயடைநெஞ்சே! (ங)

துன்றோளித்துகிற்படலம் துன்னியெங்கும்மாளிகைமேல் *
நின்றாரவான்மூடும் நீள்செல்வத்திருநறையூர் *
மன்றாரக்குடமாடி வரையெடுத்துமழைதடுத்த *
குன்றாரும்திரள்தோளன் குரைகழலேயடைநெஞ்சே! (ச)

அகிற்குறடும்சந்தனமும் அம்பொன்னுமணிமுத்தும் *
மிகக்கொணர்ந்துதிரையுந்தும் வியன்பொன்னித்திருநறையூர் *
பகற்கரந்த சுடராழிப்படையான் * இவ்வுலகேழும்
புகக்கரந்ததிருவயிற்றன் பொன்னடியேயடைநெஞ்சே! (ரு)

பொன்முத்துமரியுகிரும் புழைக்கைம்மாகரிக்கோடும் *
மின்னத்தண்திரையுந்தும் வியன்பொன்னித்திருநறையூர் *
மின்னொத்தநுண்மருங்குல் மெல்லியலை * திருமார்பில்
மன்னத்தான்வைத்துகந்தான் மலரடியேயடைநெஞ்சே ! (சு)

சீர்தழைத்தகதிர்ச்செந்நெல் செங்கமலத்திடையிடையின் *
பார்தழைத்துக்கரும்போங்கிப் பயன்விளைக்குந்திருநறையூர் *
கார்தழைத்ததிருவுருவன் கண்ணபிரான்விண்ணவர்கோன் *
தார்தழைத்ததுழாய்முடியன் தளிரடியேயடைநெஞ்சே ! (எ)

↓↓ குலையார்ந்தபழுக்காயும் பசுங்காயும்பாளைமுத்தும் *
தலையார்ந்தவிளங்கமுகின் தடஞ்சோலைத்திருநறையூர் *
மலையார்ந்தகோலஞ்சேர் மணிமாடம்மிகமன்னி *
நிலையாரநின்றான்தன் நீள்கழலேயடைநெஞ்சே ! (அ)

மறையாரும்பெருவேள்விக் கொழும்புகைபோய்வளர்ந்து * எங்கும்
நிறையாரவான்மூடும் நீள்செல்வத்திருநறையூர் *
பிறையாருஞ்சடையானும் பிரமனும்முன்தொழுதேத்த *
இறையாகிநின்றான்தன் இணையடியேயடைநெஞ்சே ! (௯)

↓↓ திண்களசமதிள்புடைசூழ் திருநறையூர்நின்றானை *
வண்களகநிலவெறிக்கும் வயல்மங்கைநகராளன் *
பண்களகம்பயின்றசீர்ப் பாடலிவைபத்தும்வல்லார் *
விண்களகத்திமையவராய் வீற்றிருந்துவாழ்வாரே. (கo)

அடிவரவு:—பெடை கழி சுளை துன்று அகில் பொன் சீர் குலை மறை திண் கிடந்த.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## கo - ஆந் திருமொழி - கிடந்தநம்பி.



### திருநறையூர். (எ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (கமாஸ்பாகம் - த்ரிபுடைதாளம்.)

↓↓ கிடந்தநம்பிகுடந்தைமேவிக் கேழலாயுலகை
யிடந்தநம்பி * எங்கள்நம்பி எறிஞராணழிய *
கடந்தநம்பிகடியாரிலங்கை உலகையீரடியால் *
நடந்தநம்பிநாமஞ்சொலலில் நமோநாராயணமே. (க)

விடந்தானுடையவரவம்வெருவச் செருவில்முனநாள் * முன்
தடந்தாமரைநீர்ப்பொய்கைபுக்கு மிக்கதாடாளன் *
இடந்தான்வையம்கேழலாகி உலகைபீரடியால் *
நடந்தானுடையநாமம்சொல்லில் நமோநாராயணமே. (௨)

பூணாதனலும் தறுகண்வேழம்மறுக * வளைமருப்பைப்
பேணான்வாங்கி அமுதம்கொண்ட பெருமான்திருமார்வன் *
பாணாவண்டுமுரலும்கூந்தல் ஆய்ச்சிதயிர்வெண்ணெய் *
நாணாதுண்டான்நாமம்சொல்லில் நமோநாராயணமே. (௩)

கல்லார்மதிள்சூழ் கச்சிநகருள்நச்சி * பாடகத்துள்
எல்லாவுலகும்வணங்க இருந்தவம்மான் * இலங்கைக்கோன்
வல்லாளாகம் வில்லால்முனிந்தவெந்தை * விபீடணற்கு
நல்லானுடையநாமம்சொல்லில் நமோநாராயணமே. (௪)

குடையாவரையால் நிரைமுன்காத்தபெருமான் * மருவாத
விடைதானேழும்வென்றான் கோவல்நின்றான் * தென்னிலங்கை
அடையாவரக்கர்வீயப் பொருதுமேவிவெங்கூற்றம் *
நடையாவுண்ணக்கண்டான்நாமம் நமோநாராயணமே. (௫)

கானஎண்கும்குரங்கும் முசுவும்படையா * அடலரக்கர்
மானமழித்துநின்ற வென்றியம்மான் * எனக்கென்றும்
தேனும்பாலுமமுதுமாய திருமால்திருநாமம் *
நானும்சொன்னேன்நமருமுரைமின் நமோநாராயணமே. (௬)

நின்றவரையும்கிடந்தகடலும் திசையுமிருநிலனும் *
ஒன்றுமொழியாவண்ணம்எண்ணி நின்றவம்மானார் *
குன்றுகுடையாவெடுத்த அடிகளுடையதிருநாமம் *
நன்றுகாண்மின்தொண்டீர்! சொன்னேன் நமோநாராயணமே. (௭)

கடுங்கால்மாரிகல்லேபொழிய அல்லேயெமக்கென்று
படுங்கால் * நீயேசரணென்று ஆயரஞ்ச, அஞ்சாமுன் *
நெடுங்காற்குன்றம்குடையொன்றேந்தி நிரையைச்சிரமத்தால் *
நடுங்காவண்ணம்காத்தான்நாமம் நமோநாராயணமே. (௮)

பொங்குபுணரிக்கடல்சூழாடை நிலமாமகள்மலர்மா
மங்கை * பிரமன்சிவனிந்திரன் வானவர்நாயகராய *
எங்களடிகள் இமையோர்தலைவருடையதிருநாமம் *
நங்கள்வினைகள்தவிரவுரைமின் நமோநாராயணமே. (௯)

↓↓ வாவித்தடஞ்சூழ்மணிமுத்தாற்று நறையூர்நெடுமாலை *
நாவிற்பரவிநெஞ்சிற்கொண்டு நம்பிநாமத்தை *
காவித்தடங்கண்மடவார்கேள்வன் கலியனொலிமாலை *
மேவிச்சொல்லவல்லார்பாவம் நில்லாவீயுமே. (கO)

அடிவரவு:—கிடந்த விடம் பூணு கல் குடை கானம் நின்ற கடுங்கால் பொங்கு வாவி கறவா.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்



ஏழாம்பத்து.

## க - ஆந் திருமொழி - கறவாமட நாகு.



திருநறையூர். (அ)

கலிவிருத்தம். (முகாரிராகம் - ரூபகதாளம்.)

↓↓ கறவாமடநாகு தன்கன்றுள்ளினாற்போல் *
மறவாதடியேன் உன்னையேயழைக்கின்றேன் *
நறவார்பொழில்சூழ் நறையூர்நின்றநம்பி ! *
பிறவாமையெனைப்பணி எந்தைபிரானே ! (க)

வற்றாமுதுநீரொடு மால்வரையேழும் *
துற்றாகமுன் துற்றிய தொல்புகழோனே ! *
அற்றேனடியேன் உன்னையேயழைக்கின்றேன் *
பெற்றேனருள் தந்திடு என்னெந்தைபிரானே ! (உ)

தாரேன்பிறர்க்கு உன்னருளென்னிடைவைத்தாய் *
ஆரேனதுவே பருகிக்களிக்கின்றேன் *
காரேய்கடலேமலையே திருக்கோட்டி
யூரே * உகந்தாயை உகந்தடியேனே. (ங)

புள்வாய்பிளந்த புனிதா ! என்றழைக்க *
உள்ளேநின்று என் னுள்ளங்குளிருமொருவா ! *
கள்வா ! கடலமலைக்கிடந்தகரும்பே ! *
வள்ளால் ! உன்னையெங்ஙனம்நான்மறக்கேனே ? (ச)

வில்லேர்நுதல் வேல்நெடுங்கண்ணியும்நீயும் *
கல்லார்கடுங்கானம் திரிந்தகளிறே ! *
நல்லாய் ! நரநாரணனே ! எங்கள்நம்பி ! *
சொல்லாயுன்னை யான்வணங்கித்தொழுமாறே. (ரு)

பனியேய்பரங்குன்றின் பவளத்திரளே ! *
முனியே ! திருமூழிக்களத்துவிளக்கே ! *
இனியாயதொண்டரோம் பருகின்னமுதாய
கனியே ! * உன்னைக்கண்டுகொண்டு உய்ந்தொழிந்தேனே. ! (சு)

கதியேயில்லை நின்னருளல்லதெனக்கு *
நிதியே ! திருநீர்மலைநித்திலத்தொத்தே ! *
பதியே ! பரவித்தொழும்தொண்டர்தமக்குக்
கதியே ! * உன்னைக்கண்டுகொண்டு உய்ந்தொழிந்தேனே. (எ)

அத்தா ! அரியே ! என்று உன்னையழைக்க *
பித்தாவென்றுபேசுகின்றார் பிறரென்னை *
முத்தே ! மணிமாணிக்கமே! முளைக்கின்ற
வித்தே ! * உன்னையெங்ஙனம் நான்விடுகேனே ? (அ)

தூயாய் ! சுடர்மாமதிபோல் உயிர்க்கெல்லாம் *
தாயாயளிக்கின்ற தண்தாமரைக்கண்ணா ! *
ஆயா ! அலைநீருலகேழும் முன்னுண்ட
வாயா ! * உன்னையெங்ஙனம நான்மறக்கேனே ? (கூ)

‡‡ வண்டார்பொழில்சூழ் நறையூர்நம்பிக்கு * என்றும்
தொண்டாய கலியன்ஒலிசெய்தமிழ்மாலை *
தொண்டீர் ! இவைபாடுமின் பாடிநின்றாட *
உண்டேவிசும்பு உநதமக்கில்லைதுயரே (க0)

அடிவரவு:—கறவா வற்றா தாரேன் புள் வில் பனி கதி அத்தா தூயாய் வண்டார் புள்ளாய்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## உ - ஆந் திருமொழி - புள்ளாயேனமுமாய்.

திருநறையூர். (கூ)

கலிநிலைத்துறை. (கேதாரகௌளராகம் - ஆதிதாளம்.)

‖ புள்ளாயேனமுமாய்ப்புகுந்து என்னையுள்ளங்கொண்ட
கள்வா! என்றலும் * என்கண்கள்நீர்கள்சோர்தருமால் *
உள்ளேநின்றுருகி நெஞ்சமுன்னையுள்ளியக்கால் *
நள்ளேனுன்னையல்லால நறையூர்நின்றநம்பியோ! (க)

ஓடாவாளரியின் உருவாய்மருவி * என்தன்
மாடேவந்து அடியேன் மனங்கொள்ளவல்லமைந்தா! *
பாடேன்தொண்டர்தம்மைக் கவிதைப்பனுவல்கொண்டு *
நாடேனுன்னையல்லால் நறையூர்நின்றநம்பியோ! (உ)

எம்மானுமெம்மனையும என்னைப்பெற்றொழிந்ததற்பின் *
அம்மானுமம்மனையும் அடியேனுக்காகிநின்ற *
நன்மானவொண்சுடரே! நறையூர்நின்றநம்பீ! * உன்
மைம்மானவண்ணமலலால் மகிழ்ந்தேத்தமாட்டேனே. (௩)

சிறியாய்ஓர்பிள்ளையுமாய் உலகுண்டோராலிலைமேல்
உறைவாய்! * என்நெஞ்சினுள்ளே உறைவாய்! உறைந்ததுதான் *
அறியாதிருந்தறியேன் அடியேன்அணிவண்டுகிண்டும் *
நறைவாரும்பொழில்சூழ் நறையூர்நின்றநம்பியோ! (௪)

நீண்டாயைவானவர்கள் நினைந்தேத்திக்காண்பரிதால் *
ஆண்டாயென்றாதரிக்கப்படுவாய்க்கு நானடிமை
பூண்டேன் * என்நெஞ்சினுள்ளே புகுந்தாயைப்போகலொட்டேன் *
நாண்தானுனக்கொழிந்தேன் நறையூர்நின்றநம்பியோ! (௫)

எந்தாதைதாதையப்பால் எழுவர்பழவடிமை
வந்தார் * என்நெஞ்சினுள்ளே வந்தாயைப்போகலொட்டேன் *
அந்தோ! என்னாருயிரே! அரசே! அருளெனக்கு *
நந்தாமலதந்தவெந்தாய்! நறையூர்நின்றநம்பியோ! (௬)

மன்னஞ்சவாயிரந்தோள் மழுவில்துணித்தமைந்தா! *
என்னெஞ்சத்துள்ளிருந்து இங்கினிப்போய்ப்பிறரொருவர் *
வன்னெஞ்சம்புக்கிருக்கவொட்டேன் வளைத்துவைத்தேன் *
நன்னெஞ்சவன்னமன்னும் நறையூர்நின்றநம்பியோ! (எ)

எப்போதும்பொன்மலரிட்டு இமையோர்தொழுது * தங்கள்
கைப்போதுகொண்டிறைஞ்சிக் கழல்மேல்வணங்கநின்றாய் *
இப்போதென்னெஞ்சினுள்ளே புகுந்தாயைப்போகலொட்டேன் *
நற்போதுவண்டுகிண்டும் நறையூர்நின்றநம்பியோ ! (அ)

ஊனேராக்கைதன்னை உழந்தோம்பிவைத்தமையால் *
யானாயென்தனக்காய் அடியேன்மனம்புகுந்த
தேனே ! * தீங்கரும்பின்தெளிவே ! என்சிந்தைதன்னால் *
நானேயெய்தப்பெற்றேன் நறையூர்நின்றநம்பியோ ! (கூ)

↓↓ நன்னீர்வயல்புடைசூழ் நறையூர்நின்றநம்பியை *
கன்னீரமால்வரைத்தோள் கலிகன்றிமங்கையர்கோன் *
சொன்னீரசொன்மாலை சொல்லுவார்கள் * சூழ்விசும்பில்
நன்னீர்மையால்மகிழ்ந்து நெடுங்காலம்வாழ்வாரே. (கo)

அடிவரவு:—புள் ஓடா எம்மானை பிறியாய நீண்டாய எந்தாதை மனை எப்போதும் ஊனேரா நன்னீர் சினவில்

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



௩ - ஆந் திருமொழி - சினவில்



திருநறையூர். (கo)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (மோஹநராகம் - ரூபகதாளம்.)

↓↓ சினவிற்செங்கணரக்கருயிர்மாளச்
செற்றவில்லியென்றுகற்றவர்தந்தம்
மனமுட்கொண்டு * என்றுமெப்போதும்நின்றேத்தும்
மாமுனியை மரமேழெய்தமைந்தனை *
நனவிற்சென்றார்க்குநண்ணற்கரியானை
நானடியேன்நறையூர்நின்றநம்பியை *
கனவிற்கண்டேனின்றுகண்டமையால் என்
கண்ணிணைகள்களிப்பக்களித்தேனே. (க)

தாய்நினைந்தகன்றேயொக்க என்னையும்
தன்னையேநினைக்கச்செய்து, தானெனக்காய் *
நினைந்தருள்செய்யுமப்பனை
அன்றிவ்வையகமுண்டுமிழ்ந்திட்ட

வாயனை * மகரக்குழைக்காதனை
மைந்தனை மதிட்கோவலிடைகழி
யாயனை * அமரர்க்கரியேற்றை என்
அன்பனையன்றியாதரியேனே. (௨)

வந்தநாள்வந்தென்நெஞ்சிடங்கொண்டான்
மற்றோர்நெஞ்சறியான் * அடியேனுடைச்
சிந்தையாய்வந்துதென்புலர்க்கென்னைச
சேர்கொடான் இதுசிககெனப்பெற்றேன் *
கொந்துலாமபொழிலசூழ்குடநதைததலைக்
கோவினைக் குடமாடியகூததனை *
எந்தையையெந்தைதந்தைதம்மானை
எமபிரானையெத்தாலமறககேனே ? (௩)

உரங்களாலியன்றமன்னர்மாளப
பாரதததொருதேரைவாக்காய்ச்சென்று *
இரங்கியூர்ந்தவர்ககின்னருள்செய்யும
எம்பிரானை வம்பார்புனறகாவிரி *
அரங்கமாளியென்னாளிவிண்ணாளி
ஆழிசூழிலங்கைமலங்கச்சென்று *
சரங்களாண்டதண்தாமரைககண்ணனுக்கன்றி
என்மனமதாழ்ந்துநில்லாதே. (௪)

ஆங்குவெநநரகததழுநதும்போது
அஞ்சேலென்றடியேனையங்கேவந்து
தாங்கு * தாமரையன்னபொனனாடி
யெமபிரானை உமபாககணியாய்நின்ற *
வேங்கடத்தரியைபபரிகீறியை
வெண்ணெயுண்டுரலினிடையாப்புண்ட
தீங்கருமபினை * தேனைநன்பாலினையன்றி
என்மனம்சிநதைசெய்யாதே. (௫)

எட்டனைபபொழுதாகிலும என்று
மென்மனத்தகலாதிருக்குமபுகழ் *
தட்டலர்த்தபொன்னேயலர்கோங்கின்
தாழ்பொழில்திருமாலிருஞ்சோலையங்

கட்டியை * கரும்பின்றவின்சாற்றைக்
காதலால்மறைநான்கும்முன்னோதிய
பட்டனை * பரவைத்துயிலேற்றை என்
பண்பனையன்றிப்பாடல்செய்யேனே. (௬)

பண்ணினின்மொழியாழ்நரம்பிற்பெற்ற
பாலையாகியிங்கேபுகுந்து * என்
கண்ணும்நெஞ்சும்வாயுமிடங்கொண்டான்
கொண்டபின்மறையோர்மனந்தன்னுள் *
விண்ணுளார்பெருமானையெம்மானை
வீங்குநீர்மகரந்திளைக்கும்கடல்
வண்ணன் * மாமணிவண்ணனெம்மண்ணல்
வண்ணமேயன்றிவாயுரையாதே. (எ)

இனியெப்பாவம்வந்தெய்தும்? சொல்லீர்
எமக்கிம்மையேயருள்பெற்றமையால் * அடும்
துனியைத்தீர்த்துஇன்பமேதருகின்றதோர்
தோற்றத்தொன்னெறியை * வையம்தொழப்படும்
முனியைவானவரால்வணங்கப்படும்
முத்தினைப் பத்தர்தாம்நுகர்கின்றதோர்
கனியை * காதல்செய்தென்னுள்ளம்கொண்ட
கள்வனை இன்றுகண்டுகொண்டேனே. (அ)

என்செய்கேன் அடியேன்? உரையீர்இதற்கு என்றும்
என்மனத்தேயிருக்குமபுகழ் *
தஞ்சையாளியைப் பொன்பெயரோன்
நெஞ்சமன்றிடந்தவனைத் தழலேபுரை *
மின்செய்வாளரக்கன்நகர்பாழ்படச்
சூழ்கடற்சிறைவைத்து, இமையோர்தொழும *
பொன்செய்மால்வரையைமணிக்குன்றினை அன்றி
என்மனம்போற்றியென்னாதே. (௯)

‡‡ தோடுவிண்டலர்பூம்பொழில்மங்கையர்
தோன்றல் வாட்கலியன்திருவாலி
நாடன் * நன்னறையூர்நின்றநம்பிதன்
நல்லமாமலர்ச்சேவடிசென்னியிற்

சூடியும் * தொழுதுமெழுந்தாடியும்
தொண்டர்கட்கவன்சொன்னசொலமாலை *
பாடல்பத்திவைபாடுமின்தொண்டீர் !
பாட நும்மிடைப்பாவம்நில்லாவே. (௧0)

அடிவரவு:—சினவில் தாய் வந்த உரங்கள் ஆங்கு எட்டனை பண்ணின் இனி என்செய்கேன் தோடு கண்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



௪ - ஆந் திருமொழி - கண்சோர.



திருச்சேறை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (அடாணவேரிராகம் - அடதாளம்.)

↓↓ கண்சோரவெங்குருதிவந்திழிய வெந்தழலபோற்கூந்தலாளை *
மண்சேரமுலையுண்டமாமதலாய்! வானவர்தம்கோவே ! என்று *
விண்சேருமிளந்திங்களகடுரிஞ்சு மணிமாடமல்கு * செல்வத் [ரே.
தண்சேறையெம்பெருமான்தாள்தொழுவார்காண்மின் என்தலைமேலா

அம்புருவவரிநெடுங்கண் அலர்மகளைவரையகலத்தமர்ந்து * மல்லற்
கொம்புருவவிளங்கனிமேல் இளங்கன்றுகொண்டெறிந்தகூத்தர்போலாம் *
வம்பலரும்தண்சோலை வண்சேறைவானுந்துகோயில்மேய * [ரே.
எமபெருமான்தாள்தொழுவார எப்பொழுதுமென்மனததேயிருக்கின்

மீதோடிவாளெயிறுமின்னிலக முன்விலகுமுருவினளை *
காதோடுகொடிமூக்கன்றுடனறுதத கைததலத்தா ! என்றுநின்று *
தாதோடுவண்டலமபும தண்சேறையெமபெருமான்தாளையேத்தி *
போதோடுபுனலதூவும்புண்ணியரே விண்ணவரிறுபொலிகின்றாரே.(௩)

தேராளும்வாளரக்கன் தென்னிலங்கைவெஞ்சமததுப்பொன்றிவீழ *
போராளுஞ்சிலையதனால்பொருகணைகள்போக்குவித்தாயென்று*நாளும
தாராளும்வரைமார்பன் தண்சேறையெமபெருமான், உம்பராளும் *
பேராளன்பேரோதுமபெரியோரை ஒருகாலும்பிரிகிலேனே. (௪)

வந்திக்கும்மற்றவர்க்கும் மாசுடம்பில்வல்லமணர்தமக்குமல்லேன் *
முந்திச்சென்றரியுருவாய் இரணியனைமுரணழித்தமுதல்வர்க்கல்லால் *
சந்தப்பூமலர்ச்சோலைத் தண்சேறையெம்பெருமான்தாளை * நாளும்
சிந்திப்பார்க்குஎன்னுள்ளம் தேனூறியெப்பொழுதும்தித்திக்குமே. ()

பண்டேனமாயுலகையன்றிடந்த பண்பாளா! என்றுநின்று*[ன்றேன்*
தொண்டானேன்திருவடியேதுணையல்லால் துணையிலேன்சொல்லுகி
வண்டேந்தும்மலர்ப்புறவில் வண்சேறையெம்பெருமானடியார்தம்மை*
கண்டேனுக்கிதுகாணீர் என்நெஞ்சும்கண்ணிணையும்களிக்குமாறே. ()

பைவிரியும்வரியரவில் படுகடலுள்துயிலமர்ந்தபண்பா! என்றும்*[ம்*
மைவிரியும்மணிவரைபோல் மாயவனே! என்றென்றும், வண்டார்நீல
செய்விரியும்தண்சேறையெம்பெருமான் திருவடியைச்சிந்தித்தேற்கு * என்
ஐயறிவும்கொண்டானுக்காளானார்க்கு ஆளாமென்னன்புதானே. (எ)

உண்ணாதுவெங்கூற்றம் ஓவாதபாவங்கள்சேரா * மேலை [னை *
விண்ணோரும்மண்ணோரும்வந்திறைஞ்சும் மென்தளிர்போலடியி
பண்ணாரவண்டியம்பும் பைம்பொழில்சூழ்தண்சேறையம்மான்தன்னை*
கண்ணாரக் † கண்டுருகிக் கையாரத்தொழுவாரைக்கருதுங்காலே. (அ)

கள்ளத்தேன்பொய்யகத்தேனாதலால் ‡போதொருகால்கவலையென்னும்*
வெள்ளத்தேற்கென்கொலோ? விளைவயலுட்கருநீலம்களைஞர்தாளா
தள்ள*தேன்மணநாறும் தண்சேறையெம்பெருமான்தாளை*நாளும்[ல்
உள்ளத்தேவைப்பாருக்கு இதுகாணீரென்னுள்ளமுருகுமாறே. (கூ)

⸸ பூமாண்சேர்கருங்குழலார்போல்நடந்து வயல்நின்றபெடையோடு*அன்ன
தேமாவினின்னிழலிற்கண்துயிலும் தண்சேறையம்மான்தன்னை *
வாமான்தேர்ப்பரகாலன் கலிகன்றியொலிமாலைகொண்டுதொண்டீர்! *
தூமாண்சேர்பொன்னடிமேற்சூட்டுமினும்துணைக்கையால்தொழுதுநின்றே.

அடிவரவு:—கண் அம்பு மீதோடி தோராளும் வந்திக்கும் பண்டு பைவிரியும
உண்ணாது கள்ளத்தேன் பூமாண் தந்தை

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆம் திருமொழி - தந்தைகாலில்.



### திருவழுந்தூர். (க)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஸௌராஷ்ட்ர ராகம் - அடதாளம்.)

[தலைவனைப்புணர்ந்துபிரிந்த தலைவி தனதுபாங்கியாக்குத்
தலைவன்பதியுரைத்த பாசுரம்.]

⸸⸸ தந்தைகாலில்பெருவிலங்கு தாளவிழ * நள்ளிருட்கண்
வந்தஎந்தைபெருமானார் மருவிநின்றவூர்போலும் *
முந்திவானம்மழைபொழியும் மூவாவுருவில்மறையாளர் *
அந்திமூன்றுமனலோம்பும் அணியார்வீதியழுந்தூரே. (க)

---

† 'கண்டிறைஞ்சி' என்றும் பாடம் ‡ 'போதருகால்' என்றும் பாடம்.

பாரித்தெழுந்த படைமன்னர்தம்மைமாள * பாரதத்துத்
தேரிற்பாகனாயூர்ந்த தேவதேவனூர்போலும் *
நீரிற்பணைத்தநெடுவாளைக்கு அஞ்சிப்போனகுருகினங்கள் *
ஆரற்கவுளோடருகணையும் அணியார்வயல்சூழழுந்தூரே. (௨)

செம்பொன்மதிள்சூழ்தென்னிலங்கைக்கிறைவன் சிரங்களையிரண்டும் *
உம்பர்வாளிக்கிலக்காக உதிர்த்தவுரவோனூர்போலும் *
கொம்பிலார்ந்தமாதவிமேல் கோதிமேய்ந்தவண்டினங்கள் *
அம்பராவும்கண்மடவார் ஐம்பாலணையுமழுந்தூரே (௩)

வெள்ளத்துள்ளோராலிலைமேல் மேவியடியேன்மனம்புகுந்து * என்
உள்ளத்துள்ளும்கண்ணுள்ளும் நின்றார்நின்றவூர்போலும் *
புள்ளுப்பிள்ளைக்கிரைதேடிப் போனகாதற்பெடையோடும் *
அள்ளற்செறுவிற்கயல்நாடும் அணியார்வயல்சூழழுந்தூரே. (௪)

பகலுமிரவும்தானேயாய்ப் பாரும்விண்ணும்தானேயாய் *
நிகரில்சுடராயிருளாகி நின்றார்நின்றவூர்போலும் *
துகிலின்கொடியும்தேர்த்துகளும் துன்னிமாதர்கூந்தல்வாய் *
அகிலின்புகையால்முகிலேய்க்கும் அணியார்வீதியழுந்தூரே. (௫)

ஏடிலங்குதாமரைபோல் செவ்வாய்முறுவல்செய்தருளி *
மாடுவந்தென்மனம்புகுந்து நின்றார்நின்றவூர்போலும் *
நீடுமாடத்தனிச்சூலம் போழக்கொண்டல்துளிதூவ *
ஆடலரவத்தார்ப்போவா அணியார்வீதியழுந்தூரே (௬)

மாலைப்புகுந்துமலரணைமேல்வைகி அடியேன்மனம்புகுந்து * என்
நீலக்கண்கள்பனிமல்க நின்றார்நின்றவூர்போலும் *
வேலைக்கடல்போல்நெடுவீதி விண்தோய்சுதைவெண்மணிமாடத்து *
ஆலைப்புகையாலழற்கதிரை மறைக்கும்வீதியழுந்தூரே. (௭)

வஞ்சிமருங்குலிடைநோவ மணந்துநின்றகனவகத்து * என்
நெஞ்சுநிறையக்கைகூப்பி நின்றார்நின்றவூர்போலும் *
பஞ்சியன்னமெல்லடி நற்பாவைமார்கள் * ஆடகத்தின்
அஞ்சிலம்பினார்ப்போவா அணியார்வீதியழுந்தூரே. (௮)

என்னைம்புலனுமெழிலுங்கொண்டு இங்கேநெருநலெழுந்தருளி *
பொன்னங்கலைகள்மெலிவெய்தப் போனபுனிதரூர்போலும் *
மன்னுமுதுநீரரவிந்த மலர்மேல்வரிவண்டிசைபாட *
அன்னம்பெடையோடுடனாடும் அணியார்வயல்சூழழுந்தூரே. (௯)

↓↓ நெல்லிற்குவளைகண்காட்ட நீரிற்குமுதம்வாய்காட்ட *
அல்லிக்கமலம்முகங்காட்டும் கழனியழுந்தூர்நின்றானை *
வல்லிப்பொதும்பிற்குயில்கூவும் மங்கைவேந்தன்பரகாலன் *
சொல்லிற்பொலிந்ததமிழ்மாலை சொல்லப்பாவம்நில்லாவே. (க0)

அடிவரவு:—தந்தை பாரித்து செம்பொன் வெள்ளத்துள் பகல் ஏடு மாலை வஞ்சி என் நெல்லில் சிங்கம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## கூ - ஆந் திருமொழி - சிங்கமதாய்.



### திருவழுந்தூர். (உ)

கலிநிலைத்துறை. (மத்யமாவதிராகம் - ரூபகதாளம்)

↓↓ சிங்கமதாயவுணன் திறலாகம்முன்கீண்டுகந்த *
சங்கமிடத்தானைத் தழலாழிவலத்தானை *
செங்கமலத்தயனனையார் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
அங்கமலக்கண்ணனை அடியேன்கண்டுகொண்டேனே. (க)

கோவானார்மடியக் கொலையார்மழுக்கொண்டருளும் *
மூவாவானவனை முழுநீர்வண்ணனை * அடியார்க்கு
ஆ! ஆ! என்றிரங்கித் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
தேவாதிதேவனை யான்கண்டுகொண்டுதிளைத்தேனே. (உ)

உடையானை ஒலிநீருலகங்கள்படைத்தானை *
விடையானோடவன்று விறலாழிவிசைத்தானை *
அடையார்தென்னிலங்கையழித்தானை அணியழுந்தூர்
உடையானை * அடியேன் அடைந்துய்ந்துபோனேனே. (ஙு)

குன்றால்மாரிதடுத்தவனைக் குலவேழமன்று
பொன்றாமை * அதனுக்கருள்செய்த போரேற்றை *
அன்றாவின்நறுநெய்யமர்ந்துண்ண அணியழுந்தூர்
நின்றானை * அடியேன் கண்டுகொண்டுநிறைந்தேனே. (ச)

கஞ்சனைக்காய்ந்தானைக் கண்ணமங்கையுள்நின்றானை *
வஞ்சனப்பேய்முலையூடு உயிர்வாய்மடுத்துண்டானை *
செஞ்சொல்நான்மறையோர் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
அஞ்சனக்குன்றந்தன்னை அடியேன்கண்டுகொண்டேனே. (ரு)

பெரியானை அமரர்தலைவற்கும்பிரமனுக்கும் *
உரியானையுகந்தானவனுக்கும் உணர்வதனுக்கு
அரியானை * அழுந்தூர்மறையோர்கள் அடிபணியும்
கரியானை * அடியேன் கண்டுகொண்டுகளித்தேனே. (௬)

திருவாழ்மார்வன்தன்னைத் திசைமண்ணீரெரிமுதலா *
உருவாய்நின்றவனை ஒலிசேருமாருதத்தை *
அருவாய்நின்றவனைத் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
கருவார்கற்பகத்தைக் கண்டுகொண்டுகளித்தேனே. (௭)

நிலையாளாக என்னையுகந்தானை * நிலமகள்தன்
முலையாள்வித்தகனை முதுநான்மறைவீதிதொறும் *
† அலையாருங்கடல்போல்முழங்கும் தென்னழுந்தையில்மன்னிநின்ற*
கலையார்சொற்பொருளைக் கண்டுகொண்டுகளித்தேனே. (௮)

↓↓ பேரானைக் குடந்தைப்பெருமானை * இலங்கொளிசேர்
வாரார்வனமுலையாள் மலர்மங்கைநாயகனை *
ஆராவின்னமுதைத் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
காரார்கருமுகிலைக் கண்டுகொண்டுகளித்தேனே. (௯)

↓↓ திறல்முருகனனையார் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
அறமுதல்வனவனை அணியாலியர்கோன், மருவார் *
கறைநெடுவேல்வலவன் கலிகன்றிசொல்லைந்திரண்டும் *
முறைவழுவாமைவல்லார் முழுதாள்வர்வானுலகே. (௧0)

அடிவரவு:—சிங்கமது கோ உடையானை குன்றால் கஞ்சனை பெரியானை திரு நிலை பேரானை திறல் திரு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



எ - ஆந் திருமொழி - திருவுக்கும்.



திருவழுந்தூர். (௩)

எண்சீராசிரியவிருத்தம். (செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.)

↓↓ திருவுக்குந்திருவாகியசெல்வா !
தெய்வத்துக்கரசே ! செய்யகண்ணா ! *
உருவச்செஞ்சுடராழிவல்லானே !
உலகுண்டவொருவா ! திருமார்பா ! *

† 'அலையார்' என்ற பாடம் ஓசைக்குச் சேரும்.

ஒருவற்காற்றியுய்யும்வகையென்றால்
உடன்நின்றைவரென்னுள்புகுந்து * ஒழியாது
அருவித்தின்றிட அஞ்சிநின்னடைந்தேன்
அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே ! (க)

பந்தார்மெலவிரல்நல்வளைத்தோளி
பாவைபூமகள்தன்னொடுமுடனே
வந்தாய் * என்மனத்தேமன்னிநின்றாய்
மாலவண்ணா ! மழைபோலொளிவண்ணா ! *
சந்தோகா ! பௌழியா ! தைத்திரியா !
சாமவேதியனே ! நெடுமாலே ! *
அந்தோ ! நின்னடியன்றிமற்றறியேன்
அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே ! (உ)

நெய்யாராழியும்சங்குமேந்தும
நீண்டதோளுடையாய் ! * அடியேனைச
செய்யாதவுலகத்திடைச்செய்தாய்
சிறுமைக்கும்பெருமைக்குமுள்புகுந்து *
பொய்யாலைவரென்மெய்குடியேறிப்
போற்றிவாழ்வதற்கஞ்சிநின்னடைந்தேன் *
ஐயா ! நின்னடியன்றிமற்றறியேன்
அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே ! (ங)

பரனே ! பஞ்சவன்பௌழியன்சோழன்
பார்மன்னர்மன்னர்தாம்பணிந்தேத்தும்
வரனே ! * மாதவனே ! மதுசூதா !
மற்றோர்நல்துணைநின்னலாலிலேன்காண் *
நரனே ! நாரணனே ! திருநறையூர்நம்பீ !
எம்பெருமான் ! உம்பராளும்
அரனே ! * ஆதிவராகமுன்னாய் !
அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே ! (ச)

விண்டான்விண்புகவெஞ்சமத்தரியாய்ப
பரியோன்மார்வகம்பற்றிப்பிளந்து *
பண்டானுய்யவோர்மாலவரையேந்தும்
பண்பாளா ! பரனே ! பவித்திரனே ! *

கண்டேன்நான் கலியுகத்ததன்தன்மை
கருமமாவதும்மென்தனக்கறிந்தேன் *
அண்டா! நின்னடியன்றிமற்றறியேன்
அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே! (ரு)

தோயாவின் தயிர்நெய்யமுதுண்ணச்
சொன்னார்சொல்லிநகும்பரிசே * பெற்ற
தாயாலாப்புண்டிருந்தழுதேங்கும்
தாடாளா! தரையோர்க்கும்விண்ணோர்க்கும்
சேயாய்! * கிரேததிரேததுவாபர
கலியுகம் இவைநான்குமுனாய்! *
ஆயா! நின்னடியன்றிமற்றறியேன்
அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே! (சு)

கறுத்துக்கஞ்சனையஞ்சமுனிந்தாய்!
கார்வண்ணா! கடல்போலொளிவண்ணா! *
இறுத்திட்டான்விடையேழும்முன்வென்றாய்!
எந்தாய்! அந்தரமேழுமுனாய்! *
பொறுத்துக்கொண்டிருந்தால்பொறுக்கொணாப்
போகமே நுகர்வான்புகுந்து * ஐவர்
அறுத்துத்தின்றிடவஞ்சிநின்னடைந்தேன்
அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே! (எ)

நெடியானே! கடிஆர்கலிநம்பீ!
நின்னையேநினைந்திங்கிருப்பேனை *
கடியார்காளையரைவர்புகுந்து
காவல்செய்தவக்காவலைப்பிழைத்து *
குடிபோந்துன்னடிக்கீழ்வந்துபுகுந்தேன்
கூறைசோறிவைதந்தெனக்கருளி *
அடியேனைப்பணியாண்டுகொளெந்தாய்!
அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே! (அ)

கோவாய்ஐவரென்மெய்குடியேறிக்
கூறைசோறிவைதாவென்றுகுமைத்துப்
போகார் * நானவரைப்பொறுக்ககிலேன்
புனிதா! புட்கொடியாய்! நெடுமாலே! *

தீவாய்நாகணையில் துயில்வானே !
திருமாலே ! இனிச்செய்வதொன்றறியேன் *
ஆ ! ஆ ! என்றடியேற்குஇறையிரங்காய்
அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே ! (க)

↓↓ அன்னமன்னுபைம்பூம்பொழில்சூழ்ந்த
அழுந்தூர்மேலதிசைநின்றவம்மானை ! *
கன்னிமன்னுதிண்தோட்கலிகன்றி
ஆலிநாடன் மங்கைக்குலவேந்தன் *
சொன்னவின்தமிழ்நன்மணிக்கோவை
தூயமாலையிவைபத்தும்வல்லார் *
மன்னிமன்னவராயுலகாண்டு
மானவெண்குடைக்கீழ்மகிழ்வாரே. (கo)

**அடிவரவு:**—திருவுக்கும பந்தார நெய் பரனே விண்டான் தோயா கறுத்து நெடியானே கோவாய அன்னம் செங்கமலம.

**திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்**



அ - ஆந் திருமொழி - செங்கமலம்.



திருவழுந்தூர். (ச)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பியாகடை ராகம் - ஆதிதாளம்.)

↓↓ செங்கமலத்திருமகளும்புவியும்
செம்பொன்திருவடியினிணைவருடமுனிவரேத்த *
வங்கமலிதடங்கடலுளநந்தனென்னும்
வரியரவினணைத்துயின்றமாயோன்காண்மின் *
எங்குமலிநிறைபுகழ்நால்வேதம் ஐந்து
வேள்விகளும்கேள்விகளுமியன்றதன்மை *
அங்கமலததயனனையார்பயிலும்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (க)

முன்னிவ்வுலகேழுமிருள்மண்டியுண்ண
முனிவரொடுதானவர்கள்திசைப்ப * வந்து
பன்னுகலைநால்வேதப்பொருளையெல்லாம்
பரிமுகமாயருளியவெம்பரமன்காண்மின் *

செந்நெல்மலிகதிர்க்கவரிவீசச்
சங்கமவைமுரலச்செங்கமலமலரையேறி *
அன்னமலிபெடையோடுமமரும்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே

குலத்தலையமதவேழம்பொய்கைபுக்குக்
கோள்முதலைபிடிக்கஅதற்கனுங்கிநின்று *
நிலத்திகழும்மலர்ச்சுடரேய்சோதீ ! என்ன
நெஞ்சிடர்தீர்த்தருளியஎன்நிமலன்காண்மின் *
மலைத்திகழ்சந்தகிலகனகமணியும்கொண்டு
வந்துந்திவயல்கள்தொறும்மடைகள்பாய *
அலைத்துவரும்பொன்னிவளம்பெருகும்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே.

சிலம்புமுதற்கலனணிந்தோர் † செங்கண்குன்றம்
திகழ்ந்ததெனத்திருவுருவம்பன்றியாகி *
இலங்குபுவிமடந்தைதனையிடந்துபுல்கி
எயிற்றிடைவைத்தருளியவெம்மீசன்காண்மின் *
புலம்புசிறைவண்டொலிப்பப்பூகம்தொக்க
பொழில்கள்தொறும்குயில்கூவமயிலகளால *
அலம்புதிரைப்புனல்புடைசூழ்ந்து அழகார்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே.

சினமேவுமடலரியினுருவமாகித்
திறல்மேவுமிரணியனதாகம்கீண்டு *
மனமேவுவஞ்சனையால்வந்தபேய்ச்சி
மாளஉயிர்வெளவியவெம்மாயோன்காண்மின் *
இனமேவுவரிவளைக்கையேந்தும் கோவை
‡ யேய்வாய்மரகதம்போற்கிளியினின்சொல்
அனமேவுநடைமடவார்பயிலும்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே.

வானவர்தம்துயர்தீரவந்துதோன்றி
மாணுருவாய்மூவடிமாவலியைவேண்டி *
தாணமரவேழுலகுமளந்தவென்றித்
தனிமுதல்சக்கரப்படையென்தலைவன்காண்மின் *

† 'செங்கற்குன்றம்' என்று அரும்பதம். ‡ 'ஏய்வாய' என்றும் பாடம்.

தேனமரும்பொழில்தழுவுமெழில்கொள்வீதிச்
செழுமாடமாளிகைகள்கூடந்தோறும் *
ஆனதொல்சீர்மறையாளர்பயிலும்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (சு)

பந்தணைந்தமெல்விரலாள்சீதைக்காகிப்
பகலவன்மீதியங்காதவிலங்கைவேந்தன் *
அந்தமில்திண்கரஞ்சிரங்களபுரண்டுவீழ
அடுகணையாலெய்துகந்தவம்மான்காண்மின் *
செந்தமிழும்வடகலையும்திகழ்ந்தநாவர்
திசைமுகனையனையவர்கள்செம்மைமிக்க *
அந்தணர்தமாகுதியின்புகையார்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (எ)

கும்பமிகுமதவேழம்குலையக்கொம்பு
பறித்து மழவிடையடர்த்துக்குரவைகோத்து *
வம்பவிழும்மலர்க்குழலாளாய்ச்சிவைத்த
தயிர்வெண்ணெய் உண்டுகந்தமாயோன்காண்மின் *
செம்பவளமரதகம் நன்முத்தம்காட்டத்
திகழ்பூகம்கதலிபலவளமிக்கெங்கும் *
அம்பொன்மதிள்பொழில்புடைசூழ்ந்தழகார்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (அ)

ஊடேறுகஞ்சனொடுமல்லும்வில்லும்
ஒண்கரியுமுருள்சகடுமுடையசெற்ற *
நீடேறுபெருவலித்தோளுடையவென்றி
நிலவுபுகழ்நேமியங்கைநெடியோன்காண்மின் *
சேடேறுபொழில்தழுவுமெழில்கொள்வீதித்
திருவிழவில்மணியணிந்ததிண்ணைதோறும *
ஆடேறுமலர்க்குழலார்பயிலும்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (கூ)

↓↓ பன்றியாய்மீனாகியரியாய்ப் பாரைப்
படைத்துக்காத்துண்டுமிழ்ந்தபரமன்தன்னை *
அன்றமரர்க்கதிபதியுமயனும்சேயும்
அடிபணியவணியழுந்தூர்நின்றகோவை *

கன்றிநெடுவேல்வலவனாலிநாடன்
கலிகன்றியொலிசெய்தவின்பப்பாடல் *
ஒன்றினொடுநான்குமோரைந்தும்வல்லார்
ஒலிகடல்சூழுலகாளுமும்பர்தாமே. (கo)

அடிவரவு:—செங்கமலம் முன் குலம் சிலம்பு சினம் வானவர் பந்து கும்பம் ஊடேறு பன்றி கள்ளம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்



௯ - ஆந் திருமொழி - கள்ளம்மனம்.



திருச்சிறுபுலியூர்.

கலிவிருத்தம். (அபநுபாதகம் - ஆதிதாளம்.)

⇣⇣ கள்ளம்மனம்விள்ளும்வகை கருதிக்கழல்தொழுவீர் ! *
வெள்ளம்முதுபரவைத் திரைவிரிய * கரையெங்கும்
தெள்ளும்மணிதிகழும் சிறுபுலியூர்ச்சலசயனத
துள்ளும் * எனதுள்ளத்துளும் உறைவாரையுள்ளீரே. (க)

தெருவில்திரிசிறுநோன்பியர் செஞ்சோற்றொடுகஞ்சி
மருவி * பிரிந்தவர்வாய்மொழி மதியாதுவந்தடைவீர் ! *
திருவிற்பொலிமறையோர் சிறுபுலியூர்ச்சலசயனத்து *
உருவக்குறளடிகள் அடி உணர்மின்உணர்வீரே. (உ)

பறையும்வினைதொழுதுய்ம்மினீர் பணியும்சிறுதொண்டீர் ! *
அறையும்புனலொருபால் வயலொருபால்பொழிலொருபால் *
சிறைவண்டினமறையும் சிறுபுலியூர்ச்சலசயனத
துறையும் * இறையடியல்லது ஒன்றிறையும்அறியேனே. (௩)

வானார்மதிபொதியுஞ்சடை மழுவாளியொடொருபால் *
தானாகியதலைவனவன் அமரர்க்கதிபதியாம் *
தேனார்பொழில்தழுவும் சிறுபுலியூர்ச்சலசயனத்து
ஆனாயனது * அடியல்லது ஒன்றறியேனடியேனே. (ச)

நந்தாநெடுநரகத்திடை நணுகாவகை * நாளும்
எந்தாய் ! என இமையோர்தொழுதேத்துமிடம் * எறிநீர்ச்
செந்தாமரைமலரும் சிறுபுலியூர்ச்சலசயனத்து
அந்தாமரையடியாய் ! உனதடியேற்கருள்புரியே. (ரு)

முழுநீலமுமலராம்பலும் அரவிந்தமும்விரவி *
கழுநீரொடுமடவாரவர் கண்வாய்முகமலரும் *
செழுநீர்வயலதழும் சிறுபுலியூர்ச்சலசயனம் *
தொழுநீர்மையதுடையார் அடிதொழுவார்துயரிலரே. (சு)

↓↓ சேயோங்குதண்திருமாலிருஞ்சோலைமலை உறையும்
மாயா! * எனக்குரையாயிது மறைநான்கினுளாயோ? *
தீயோம்புகைமறையோர் சிறுபுலியூர்ச்சலசயனத்
தாயோ? * உனதடியார்மனத்தாயோ? அறியேனே. (எ)

மையார்வரிநீலம் மலர்க்கண்ணார்மனம்விட்டிட்டு *
உய்வானுனகழலே தொழுதெழுவேன் * கிளிமடவார்
செவ்வாய்மொழிபயிலும் சிறுபுலியூர்ச்சலசயனத்து *
ஐவாயரவணைமேல் உறையமலா! அருளாயே. (அ)

↓↓ கருமாமுகிலுருவா! கனலுருவா! புனலுருவா! *
பெருமால்வரையுருவா! பிறவுருவா! நினதுருவா! *
திருமாமகள்மருவும் சிறுபுலியூர்ச்சலசயனத்து *
அருமாகடலமுதே! உனதடியேசரணமே. (கூ)

↓↓ சீரார்நெடுமறுகில் சிறுபுலியூர்ச்சலசயனத்து *
ஏரார்முகில்வண்ணன்தனை இமையோர்பெருமானை *
காரார்வயல்மங்கைக்கிறை கலியனொலிமாலை *
பாரார்இவைபரவித்தொழப் பாவம்பயிலாவே. (க௦)

அடிவரவு:—கள்ளம் தெருவில் பறையும் வான் நந்த முழு சேயோங்கு மையார் கரு சீரார் பெரும்புறம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## க௦ - ஆந் திருமொழி - பெரும்புறக்கடலை.



### திருக்கண்ணமங்கை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தோடிராகம் - அடதாளம்.

↓↓ பெரும்புறக்கடலையடலேற்றினைப்
பெண்ணையாணை * எண்ணில்முனிவர்க்கருள
தருந்தவத்தைமுத்தின்திரள்கோவையைப்
பத்தராவியைநித்திலத்தொத்தினை *

அரும்பினையலரையடியேன்மனத்தாசையை
அமுதம்பொதியின்சுவை *
கரும்பினைக்கனியைச்சென்றுநாடிக்
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (க)

மெய்ந்நலத்தவத்தைத்திவத்தைத்தருமெ
மெய்யைப்பொய்யினை, கையிலோர்சங்குடை *
மைந்நிறக்கடலைக்கடல்வண்ணனை மாலை
ஆலிலைப்பள்ளிகொள்மாயனை *
நென்னலைப்பகலையிற்றைநாளினை
நாளையாய்வரும்திங்களையாண்டினை *
கன்னலைக்கரும்பினிடைத்தேறலைக்
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (உ)

எங்களுக்கருள்செய்கின்றவீசனை
வாசவார்குழலாள்மலைமங்கைதன்
பங்கனை * பங்கில்வைத்துகந்தான்றன்னைப்
பான்மையைப்பனிமாமதியந்தவழ் *
மங்குலைச்சுடரைவடமாமலை
உச்சியை நச்சிநாம்வணங்கப்படும
கங்குலை * பகலைச்சென்றுநாடிக்
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (ங)

பேய்முலைத்தலைநஞ்சுண்டபிள்ளையைத்
தெள்ளியார்வணங்கப்படும்தேவனை *
மாயனைமதிட்கோவலிடைகழிமைந்தனை
அன்றியந்தணர்சிந்தையு
ளீசனை * இலங்குஞ்சுடர்ச்சோதியை
எந்தையையெனக்கெய்ப்பினில்வைப்பினை *
காசினைமணியைச்சென்றுநாடிக்
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (ச)

↓↓ ஏற்றினையிமயத்துளெம்மீசனை
இம்மையைமறுமைக்குமருந்தினை *
ஆற்றலையண்டத்தப்புறத்துய்த்திடும்
ஐயனைக் கையிலாழியொன்றேந்திய

கூற்றினை * குருமாமணிக்குன்றினை
நின்றவூர்நின்றநித்திலத்தொத்தினை *
காற்றினைப்புனலைச்சென்றுநாடிக்
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (ரு)

துப்பனைத்துரங்கம்படச்சீறியதோன்றலைச்
சுடர்வான்கலன்பெய்ததோர்
செப்பினை * திருமங்கைமணாளனைத்
தேவனைத் திகழும்பவளத்தொளி
யொப்பனை * உலகேழினையூழியை
ஆழியேந்தியகையனை அந்தணர்
கற்பினை * கழுநீர்மலரும்வயல்
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (சு)

திருத்தனைத்திசைநான்முகன்தந்தையைத்
தேவதேவனைமூவரில்முன்னிய
விருத்தனை * விளங்குஞ்சுடர்ச்சோதியை
விண்ணைமண்ணினைக் கண்ணுதல்கூடிய
அருத்தனை * அரியைப்பரிகீறியவப்பனை
அப்பிலாரழலாய்நின்ற
கருத்தனை * களிவண்டறையும்பொழில்
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (எ)

வெஞ்சினக்களிற்றைவிளங்காயவீழக்
கன்றுவீசியவீசனை * பேய்மகள்
துஞ்சநஞ்சுசுவைத்துண்டதோன்றலைத்
தோன்றல்வாளரக்கன்கெடத்தோன்றிய
நஞ்சினை * அமுதத்தினைநாதனை
நச்சுவாருச்சிமேல்நிற்குநம்பியை *
கஞ்சனைத்துஞ்சவஞ்சித்தவஞ்சனைக்
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (அ)

பண்ணினைப்பண்ணில்நின்றதோர்பான்மையைப்
பாலுள்நெய்யினைமாலுருவாய்நின்ற
விண்ணினை * விளங்குஞ்சுடர்ச்சோதியை
வேள்வியைவிளக்கினொளிதன்னை *

மண்ணினைமலையையலைநீரினை
மாலைமாமதியைமறையோர் தங்கள்
கண்ணினை * கண்களாரளவும்நின்று
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (கூ)

↓↓ கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனென்று
காதலாற்கலிகன்றியுரைசெய்த *
வண்ணவொண்தமிழொன்பதோடொன்றிவை
வல்லராயுரைப்பார், மதியந்தவழ் *
விண்ணில்விண்ணவராய்மகிழ்வெய்துவர்
மெய்ம்மைசொல்லின்வெண்சங்கமொன்றேந்திய
கண்ண! * நின்தனக்குக்குறிப்பாகில்
கற்கலாம் கவியின்பொருள்தானே. (கO)

அடிவரவு:—பெரு மெய் எங்களுக்கு பேய் எற்றினை தப்பினை திருத்தினை வெஞ்சினம் பண்ணினை கண்ணமங்கையுள் சிலை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## எட்டாம்பத்து

### க - ஆந் திருமொழி - சிலையிலங்கு.



திருக்கண்ணபுரம். (க)

[தலைமகனைப் பிரிந்து ஈடுபட்ட தலைமகளது செயல்கண்ட தாய் வியந்துகூறிய பாசுரம்.]

அறுசீராசிரியவிருத்தம். (காம்பூஜிராகம் - நடைகதாளம்.)

↓↓ சிலையிலங்குபொன்னாழி திண்படைதண்டொண்சங்கமென்கின்றாளால் *
மலையிலங்குதோள்நான்கே மற்றவனுக்கெற்றேகாணென்கின்றாளால் *
முலையிலங்குபூம்பயலை முன்போடஅன்போடியிருக்கின்றாளால் *
கலையிலங்குமொழியாளர் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ?

↓↓ செருவரைமுன்னாசறுத்த சிலையன்றோ? கைத்தலத்ததென்கின்றாளால் *
பொருவரைமுன்போர்தொலைத்தபொன்னாழிமற்றொருகையென்கின்றாளால் *
ஒருவரையும்நின்னொப்பா ரொப்பிலாவென்னப்பா! என்கின்றாளால் *
கருவரைபோல்நின்றானைக் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? (உ)

துன்னுமாமணிமுடிமேல் துழாயலங்கல்தோன்றுமாலென்கின்றாளால் *
மின்னுமாமணிமகரகுண்டலங்கள் வில்வீசுமென்கின்றாளால் *
பொன்னின்மாமணியாரம் அணியாகத்திலங்குமாலென்கின்றாளால் *
கன்னிமாமதிள்புடைசூழ் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ?

தாராயதண்துளப வண்டுழுதவரைமார்பனென்கின்றாளால் *
போரானைக்கொம்பொசித்த புட்பாகனென்னம்மானென்கின்றாளால் *
ஆராலும்காண்மின்கள் அம்பவளம்வாயவனுக்கென்கின்றாளால் *
கார்வானம்நின்றதிரும் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ? (ச)

அடித்தலமும்தாமரையே அங்கைகளும்பங்கயமேயென்கின்றாளால் *
முடித்தலமும்பொற்பூணும் என்நெஞ்சத்துள் † ளகலாதென்கின்றாளால் *
வடித்தடங்கண்மலரவளோ வரையாகத்துள்ளிருப்பாள் ? என்கின்றாளால் *
கடிக்கமலம்கள்ளுகுக்கும் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ?()

பேராயிரமுடையபேராளன் பேராளனென்கின்றாளால் *
ஏரார்கனமகரகுண்டலத்தன் எண்தோளனென்கின்றாளால் *
நீரார்மழைமுகிலே நீள்வரையேயொக்குமாலென்கின்றாளால் *
காரார் ‡ வயலமரும் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? (சு)

செவ்வரத்தவுடையாடை அதன்மேலோர்சிவளிகைக்கச்சென்கின்றாளால் *
அவ்வரத்தவடியிணையும் அங்கைகளும்பங்கயமேயென்கின்றாளால் *
மைவளர்க்கும்மணியுருவம் மரதகமோ ! மழைமுகிலோ ! என்கின்றாளால் *
கைவளர்க்குமழலாளர் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ? (எ)

கொற்றப்புள்ளொன்றேறி மன்றாடேவருகின்றானென்கின்றாளால் *
வெற்றிப்போரிந்திரற்கும் இந்திரனேயொக்குமாலென்கின்றாளால் *
பெற்றக்காலவனாகம் பெண்பிறந்தோமுய்யோமோ ! என்கின்றாளால் *
கற்றநூல்மறையாளர் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ? (அ)

வண்டமரும்வனமாலை மணிமுடிமேல்மணநாறுமென்கின்றாளால் *
உண்டிவர்பாலன்பெனக்கென் றொருகாலும்பிரிகிலேனென்கின்றாளால் *
பண்டிவரைக்கண்டறிவதெவ்வூரில் ? யாமென்றேயயில்கின்றாளால் *
கண்டவர்தம்மனம்வழங்கும் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? (கூ)

‡‡ மாவளருமென்னோக்கி மாதராள்மாயவனைக்கண்டாளென்று *
காவளரும்கடிபொழில்சூழ் கண்ணபுரத்தம்மானைக்கலியன்சொன்ன *
பாவளரும்தமிழ்மாலை பன்னியநூலிவையைந்துமைந்தும்வல்லார் *
பூவளரும்கற்பகஞ்சேர் பொன்னுலகில்மன்னவராய்ப்புகழ்தக்கோரே.

அடிவரவு:—சிலை செரு தன்னு தார் அடி பேர் செவ்வரத்த கொற்றம் வண்டு மாவளரும் தெள்ளியீர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'அகலாவென்கின்றாளால்' என்பதும் பாடம்.
‡ 'வயல்மருவும்' என்றும் பாடம்.

## உ - ஆந் திருமொழி - தெள்ளியீர்.

### திருக்கண்ணபுரம். (உ)

[தலைவியின் நிலைகண்ட தாய் தலைமகனை இயற்பழித்தும், தலைமகளது இளமைக்கு இரங்கியும் கூறிய பாசுரம்.]

வெண்டளையாலமைந்த தரவுகொச்சகக்கலிப்பா (ஸைந்தவி ராகம்-அடதாளம்.)

↓↓ தெள்ளியீர்! தேவர்க்குந்தேவர் திருத்தக்கீர்! *
வெள்ளியீர்! வெய்யவிழுநிதிவண்ணர் * ஓ!
துள்ளுநீர்க் கண்ணபுரந்தொழுதாளிவள்
கள்வியோ! * கைவளைகொள்வது தக்கதே? (௧)

நீணிலாமுற்றத்து நின்றிவள்நோக்கினாள் *
காணுமோ? கண்ணபுரமென்றுகாட்டினாள் *
பாணனார் திண்ணமிருக்க இனியிவள்
நாணுமோ? * நன்றுநன்றுநறையூரர்க்கே. (௨)

↓↓ அருவிசோர்வேங்கடம் நீர்மலையென்றுவாய்
வெருவினாள் * மெய்யம்வினவியிருக்கின்றாள் *
பெருகுசீர்க் கண்ணபுரமென்றுபேசினாள்
உருகினாள் * உள்மெலிந்தாள் இதுவென்கொலோ? (௩)

உண்ணும்நாளில்லை உறக்கமுந்தானில்லை *
பெண்மையும் சாலநிறைந்திலள்பேதைதான் *
கண்ணனூர் கண்ணபுரந்தொழும், கார்க்கடல்
வண்ணர்மேல் * எண்ணம்இவட்குஇதுவென்கொலோ? (௪)

கண்ணனூர்கண்ணபுரம் தொழும்காரிகை *
பெண்மையுந்தன்னுடை உண்மையுரைக்கின்றாள் *
வெண்ணெயுண்டுஆப்புண்ட வண்ணம்விளம்பினால் *
வண்ணமும் பொன்னிறமாவதொழியுமே. (௫)

வடவரைநின்றும்வந்து இன்றுகணபுரம் *
இடவகைகொள்வது யாமென்றுபேசினாள் *
மடவரல்மாதரென்பேதை இவர்க்கிவள்
கடவதென்? * கண்துயில் இன்றிவர்கொள்ளவே. (௬)

தரங்கநீர்பேசினும் தண்மதிகாயினும் *
இரங்குமோ? எத்தனைநாளிருந்தெள்கினாள்? *
துரங்கம்வாய்கீண்டுகந்தானது தொன்மை * ஊர்
அரங்கமேயென்பது இவள்தனக்காசையே. (௭)

தொண்டெல்லாம்நின்னடியே தொழுதுய்யுமா
கண்டு * தான்கணபுரம் தொழப்போயினள் *
வண்டுலாம்கோதைஎன்பேதை மணிநிறம்
கொண்டுதான் * கோயின்மைசெய்வது தக்கதே? (அ)

முள்ளெயிறேய்ந்தில கூழைமுடிகொடா *
தெள்ளியளென்பதோர்தேசிலள் என்செய்கேன்? *
கள்ளவிழ்சோலைக் கணபுரம்கைதொழும்
பிள்ளையை * பிள்ளையென்றெண்ணப்பெறுவரே? (௯)

⸸⸸ கார்மலி கண்ணபுரத்தெம்மடிகளை *
பார்மலிமங்கையர்கோன் பரகாலன்சொல் *
சீர்மலிபாடல் இவைபத்தும்வல்லவர் *
நீர்மலிவையத்து நீடுநிற்பார்களே. (௧0)

அடிவரவு:—தெள்ளியீர் நீணிலா அருவி உண்ணும் கண்ணன் வடவரை தரங்கம் தொண்டு முள் கார் கரை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



௩ - ஆந் திருமொழி - கரையெடுத்த.



திருக்கண்ணபுரம். (௩)

[தலைமகனைப்பிரிந்த தலைவி இரங்கிக்கூறிய பாசுரம்: அறத்தொடு நிற்றல்.]

தரவுகொச்சகக்கலிப்பா. (கேதாரகௌளராகம் - ரூபகதாளம்.)

⸸⸸ கரையெடுத்தசுரிசங்கும் கனபவளத்தெழுகொடியும் *
திரையெடுத்துவருபுனல்சூழ் திருக்கண்ணபுரத்துறையும் *
விரையெடுத்ததுழாயலங்கல விறல்வரைத்தோள்புடைபெயர *
வரையெடுத்தபெருமானுக்கு இழந்தேனென்வரிவளையே. (௧)

அரிவிரவுமுகிற்கணத்தால் அகிற்புகையால்வரையோடும் *
தெரிவரியமணிமாடத் திருக்கண்ணபுரத்துறையும் *
வரியரவினணைத்துயின்று மழைமதத்தசிறுதறுகண் *
கரிவெருவமருப்பொசித்தாற்கு இழந்தேனென்கனவளையே. (௨)

துங்கமாமணிமாட நெடுமுகட்டின்சூலிகை * போம்
திங்கள்மாமுகில்துணிக்கும் திருக்கண்ணபுரத்துறையும் *
பைங்கண்மால்விடையடர்த்துப் பனிமதிகோள்விடுத்துகந்த *
செங்கண்மாலம்மானுக்கு இழந்தேனென்செறிவளையே. (௩)

கணமருவுமயிலகவு கடிபொழில்சூழ்நெடுமறுகில் *
திணமருவுகனமதிள்சூழ் திருக்கண்ணபுரத்துறையும் *
மணமருவுதோளாய்ச்சி ஆர்க்கப்போய் * உரலோடும்
புணர்மருதமிறநடந்தாற்கு இழந்தேனென்பொன்வளையே. (ச)

வாயெடுத்தமந்திரத்தால் அந்தணர்தம்செய்தொழில்கள் *
தீயெடுத்துமறைவளர்க்கும் திருக்கண்ணபுரத்துறையும் *
தாயெடுத்தசிறுகோலுக்கு உளைந்தோடி * தயிருண்ட
வாய்துடைத்தமைந்தனுக்கு இழந்தேனென்வரிவளையே. (ரு)

மடலெடுத்தநெடுந்தாழை மருங்கெல்லாம்வளர்பவளம் *
திடலெடுத்துச்சுடரிமைக்கும் திருக்கண்ணபுரத்துறையும *
அடலடர்த்தன்றிரணியனை முரணழிய, அணியுகிரால் *
உடலெடுத்தபெருமானுக்கு இழந்தேனென்னொளிவளையே. (சு)

வண்டமரும்மலர்ப்புன்னை வரிநீழலணிமுத்தம் *
தெண்திரைகள்வரத்திரட்டும் திருக்கண்ணபுரத்துறையும் *
எண்திசையுமெழுசுடரும் இருநிலனும்பெருவிசும்பும் *
உண்டுமிழ்ந்தபெருமானுக்கு இழந்தேனென்னொளிவளையே. (எ)

கொங்குமலிகருங்குவளை கண்ணாக, தெண்கயங்கள் *
செங்கமலமுகமலர்த்தும் திருக்கண்ணபுரத்துறையும் *
வங்கமலிதடங்கடலுள் வரியரவினணைத்துயின்ற *
செங்கமலநாபனுக்கு இழந்தேனென்செறிவளையே. (அ)

வாராளுமிளங்கொங்கை நெடும்பணைத்தோள்மடப்பாவை *
சீராளும்வரைமார்பன் திருக்கண்ணபுரத்துறையும் *
பேராளனாயிரம்பேர் ஆயிரவாயரவணைமேல் *
பேராளர்பெருமானுக்கு இழந்தேனென்பெய்வளையே. (கூ)

‡‡ தேமருவுபொழில்புடைசூழ் திருக்கண்ணபுரத்துறையும்
வாமனனை * மறிகடல்சூழ் வயலாலிவளநாடன் *
காமருசீர்க்கலிகன்றி கண்டுரைத்ததமிழ்மாலை *
நாமருவியிவைபாட வினையாயநண்ணாவே. (கo)

அடிவரவு:—கரை அரி தங்கம் கணம் வாய் மடல் வண்டு கொங்கு வாராளும் தேமருவு விண்ணவர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ப - ஆந் திருமொழி - விண்ணவர்.

திருக்கண்ணபுரம். (ச)

[தலைமகன்டத்தூடுபட்டதலைவி ஆற்றதுதும்பியைநோக்கிக்கூறியபாசுரம்.]

தரவுகொச்சகக்கலிப்பா. (காம்போதி - ஆதிதாளம்.)

‡‡ விண்ணவர்தங்கள்பெருமான் திருமார்வன் *
மண்ணவரெல்லாம்வணங்கும் மலிபுகழ்சேர் *
கண்ணபுரத்தெம்பெருமான் கதிர்முடிமேல் *
வண்ணநறுந்துழாய் வந்தூதாய்கோல்தும்பீ ! (க)

வேதமுதல்வன் விளங்குபுரிநூலன் *
பாதம்பரவிப் பலரும்பணிந்தேத்தி *
காதன்மைசெய்யும் கண்ணபுரத்தெம்பெருமான் *
தாதுநறுந்துழாய் தாழ்ந்தூதாய்கோல்தும்பீ ! (உ)

விண்டமலரெல்லாம் ஊதிநீயென்பெறுதி ? *
அண்டமுதல்வன் அமரர்களெல்லாரும் *
கண்டுவணங்கும் கண்ணபுரத்தெம்பெருமான் *
வண்டுநறுந்துழாய் வந்தூதாய்கோல்தும்பீ ! (௩)

நீர்மலிகின்றது ஓர்மீனாய்யாமையுமாய் *
சீர்மலிகின்றது ஓர்சிங்கவுருவாகி *
கார்மலிவண்ணன் கண்ணபுரத்தெம்பெருமான் *
தார்மலிதண்துழாய் தாழ்ந்தூதாய்கோல்தும்பீ ! (ச)

ஏரார்மலரெல்லாம் ஊதிநீயென்பெறுதி ? *
பாராருலகம் பரவ, பெருங்கடலுள் *
காராலமயான கண்ணபுரத்தெம்பெருமான் *
தாரார்நறுந்துழாய் தாழ்ந்தூதாய்கோல்தும்பீ ! (ரு)

மார்வில்திருவன் வலனேந்துசக்கரத்தன் *
பாரைப்பிளந்த பரமன்பரஞ்சோதி *
காரில்திகழ் காயாவண்ணன்கதிர்முடிமேல *
தாரில்நறுந்துழாய் தாழ்ந்தூதாய்கோல்தும்பீ ! (சு)

வாமனன்கற்கி மதுசூதன்மாதவன் *
தார்மன்னுதாசரதியாய தடமார்வன் *
காமன்தன்தாதை கண்ணபுரத்தெம்பெருமான் *
தாமநறுந்துழாய் தாழ்ந்தூதாய்கோல்தும்பீ ! (எ)

நீலமலர்கள் நெடுநீர்வயலமருங்கில் *
சாலமலரெல்லாம் ஊதாதே * வாளரக்கர்
காலன் கண்ணபுரத்தெம்பெருமான்கதிர்முடிமேல் *
கோலநறுந்துழாய் கொண்டூதாய்கோல்தும்பீ ! (அ)

நந்தன்மதலை நிலமங்கைநல்துணைவன் *
அந்தமுதல்வன் அமரர்கள்தம்பெருமான் *
கந்தம்கமழ் காயாவண்ணன்கதிர்முடிமேல் *
கொந்துநறுந்துழாய் கொண்டூதாய்கோல்தும்பீ ! (கூ)

↓↓ வண்டமருஞ்சோலை வயலாலிநல்நாடன் *
கண்டசீர்வென்றிக் கலியனொலிமாலை *
கொண்டல்நிறவண்ணன் கண்ணபுரத்தானை *
தொண்டரோம்பாட நினைந்தூதாய்கோல்தும்பீ ! (க0)

அடிவரவு:—விண்ணவர் வேதம் விண்ட நீர் எரார் மார்வில் வாமனன் நீலம் நந்தன் வண்டமரும தந்தை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆம் திருமொழி - தந்தை.



### திருக்கண்ணபுரம் (ரு)

அறுசீராசிரியவிருத்தம். (யதுகுலகாம்போதிராகம் - ஆதிதாளம்.)

[தலைவனைப் பிரிந்த தலைவி அந்திப்பொழுதில் தலைவன் வாராது நீட்டிக்க, தென்றல் முதலியவற்றால் வருந்திக் கூறுதல்.]

↓↓ தந்தைகாலில்விலங்கற வந்துதோன்றியதோன்றல்பின்*தமியேன்தன்
சிந்தைபோயிற்றுத் திருவருளவனிடைப்பெறுமளவிருந்தேனை *
அந்திகாவலன் அமுதுறுபசுங்கதிரவை சுட, அதனோடும் *
மந்தமாருதம்வனமுலைதடவந்து வலிசெய்வதொழியாதே. (க)

மாரிமாக்கடல்வளைவணற்கிளையவன் வரைபுரைதிருமார்பில் *
தாரினாசையிற்போயினநெஞ்சமும் தாழ்ந்தது, ஓர்துணைகாணேன் *
ஊரும்துஞ்சிற்றுஉலகமும்துயின்றது ஒளியவன்விசும்பியங்கும் *
தேரும்போயிற்றுத்திசைகளும்மறைந்தன செய்வதொன்றறியேனே.()

ஆயன்மாயமேயன்றி, மற்றென்கையில் வளைகளுமிறைநில்லா *
பேயினாருயிருண்டிடும்பிள்ளை நம்பெண்ணுயிர்க்கிரங்குமோ ? *
தூயமாமதிக்கதிர்சுடத்துணையில்லை இணைமுலைவேகின்றதால் *
ஆயன்வேயினுக்கழிகின்றதுள்ளமும் அஞ்சேலென்பாரிலையே. (௩)

கயங்கொள்புண்தலைக்களிறுந்துவெந்திறல் கழல்மன்னர்பெரும்போரில்*
மயங்கவெண்சங்கம்வாய்வைத்தமைந்தனும் வந்திலன், மறிகடல்நீர் *
தயங்குவெண்திரைத்திவலைநுண்பனியென்னும் தழல்முகந்து இளமுலைமேல்*
இயங்குமாருதம்விலங்கில்என்னாவியை எனக்கெனப்பெறலாமே. (௪)

ஏழுமாமரம்துளைபடச்சிலைவளைத்து இலங்கையைமலங்குவித்த
ஆழியான் * நமக்கருளியவருளொடும் பகலெல்லைகழிகின்றதால் *
தோழி! நாமிதற்கென்செய்தும? துணையில்லை, சுடர்படுமுதுநீரில *
ஆழஆழ்கின்றஆவியை அடுவதோர அந்திவந்தடைகின்றதே. (௫)

முரியும்வெண்திரைமுதுகயம்தீப்பட முழங்கழலெரியம்பின் *
வரிகொள்வெஞ்சிலைவளைவித்த மைந்தனுமவந்திலனென்செய்கேன்? *
எரியும்வெங்கதிர்துயின்றது பாவியேனிணைநெடுங்கண்துயிலா *
கரியநாழிகையூழியிற்பெரியன கழியுமாறுஅறியேனே. (௬)

கலங்கமாக்கடலகடைந்தடைத்து இலங்கையர்கோனதுவரையாகம் *
மலங்க, வெஞ்சமத்தடுசரமதுரந்த எம்மடிகளும்வாரானால் *
இலங்குவெங்கதிரிளமதியதனொடும் விடைமணியடும் * ஆயன்
விலங்கல்வேயினதோசையுமாய் இனிவிளைவதொன்றறியேனே. (௭)

முழுதிவ்வையகம்முறைகெடமறைதலும் முனிவனுமமுனிவெய்தி *
மழுவினால்மன்னராருயிர்வவ்விய மைந்தனும்வாரானால் *
ஒழுகுநுண்பனிக்கொடுங்கியபேடையை அடங்கவஞ்சிறைகோலி *
தழுவுநள்ளிருள்தனிமையிற்கடியது ஓர்கொடுவினையறியேனே. (௮)

கனஞ்செய்மாமதிட்கணபுரத்தவனொடும கனவினிலவன்தந்த *
மனஞ்செயின்பம்வந்துள்புகவெள்கி என்வளைநெகவிருந்தேனை *
சினஞ்செய்மால்விடைச்சிறுமணியோசை என்சிந்தையைச்சிந்துவிக்கும் *
அனந்தலன்றிலினரிகுரல் பாவியேனாவியையடுகின்றதே. (௯)

↓↓ வார்கொள்மென்முலைமடந்தையர் தடங்கடல்வண்ணனைத்தாள்நயந்து*
ஆர்வத்தாலவர்புலம்பியபுலம்பலை அறிந்துமுன்னுரைசெய்த *
கார்கொள்பைம்பொழில்மங்கையர்காவலன் கலிகன்றியொலிவல்லார்*
ஏர்கொள்வைகுந்தமாநகர்புக்கு இமையவரோடும்கூடுவரே. (௧௦)

**அடிவரவு:**—தந்தை மாரி ஆயன் கயம ஏழு முரியும் கலங்க முழுது கனஞ்செய வார்கொள் தொண்டீர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## சு – ஆந் திருமொழி - தொண்டீர்.

### திருக்கண்ணபுரம். (சு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (நாதநாமக்ரியைராகம்-நாகதாளம்.)

††தொண்டீர்! உய்யும்வகைகண்டேன் துளங்காவரக்கர் துளங்க*முன்
திண்தோள்நிமிரச்சிலைவளையச் சிறிதேமுனிந்ததிருமார்பன் *
வண்டார்கூந்தல்மலர்மங்கை வடிக்கண்மடந்தைமாநோக்கம்
கண்டான் * கண்டுகொண்டுகந்த கண்ணபுரம்நாம்தொழுதுமே. (க)

பொருந்தாவரக்கர்வெஞ்சமத்துப் பொன்றவன்றுபுள்ளூர்ந்து *
பெருந்தோள்மாலிதலைபுரளப் பேர்ந்தவரக்கர்தென்னிலங்கை *
இருந்தார்தம்மையுடன்கொண்டு அங்கெழிலாரபிலத்துப்புக்கொளிப்ப *
கருந்தாட்சிலைகைக்கொண்டானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (உ)

வல்லியிடையாள்பொருட்டாக மதிள்நீரிலங்கையார்கோவை *
அல்லல்செய்துவெஞ்சமத்துள் ஆற்றல்மிகுத்தவாற்றலான் *
வல்லாளரக்கர்குலப்பாவைவாட முனிதன்வேள்வியை *
கல்விச்சிலையாற்காத்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (ங)

மல்லைமுந்நீரதர்பட வரிவெஞ்சிலைகால்வளைவித்து *
கொல்லைவிலங்குபணிசெய்ய கொடியோனிலங்கைபுகலுற்று *
தொல்லைமரங்கள்புகப்பெய்து துவலைநிமிர்ந்துவானணவ *
கல்லால்கடலையடைத்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (ச)

ஆமையாகியரியாகி அன்னமாகி * அந்தணர்தம்
ஓமமாகியூழியாகி † உலகுசூழ்ந்தநெடும்புணரி *
சேமமதிள்சூழிலங்கைக்கோன் சிரமுங்கரமுந்துணித்து * முன்
காமற்பயந்தான்கருதுமூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (ரு)

வருந்தாதிருநீமடநெஞ்சே! நம்மேல்வினைகள்வாரா * முன்
திருந்தாவரக்கர்தென்னிலங்கை செந்தீயுண்ணச்சிவந்து, ஒருநாள் *
பெருந்தோள்வாணற்கருள்புரிந்து பின்னைமணாளனாகி * முன்
கருந்தாட்களிறொன்றொசித்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (சு)

இலையார்மலர்ப்பூம்பொய்கைவாய் முதலைதன்னாலடர்ப்புண்டு *
கொலையார்வேழம்நடுக்குற்றுக்குலைய அதனுக்கருள்புரிந்தான் *
அலைநீரிலங்கைத்தசக்கிரீவற்கு இளையோற்கரசையருளி * முன்
கலைமாச்சிலையாலெய்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (எ)

† 'உவரிசூழ்ந்த' என்பதும் பாடம்.

மாலாய்மனமே! அருந்துயரில் வருந்தாதிருநீ * வலிமிக்க
காலார்மருதும்காய்சினத்தகழுதும கதமாக்கழுதையும் *
மாலார்விடையும்மதகரியும் மல்லருயிரும்மடிவித்து *
காலால்சகடம்பாய்ந்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (அ)

குன்றால்மாரிபழுதாக்கிக் கொடியேரிடையாள்பொருட்டாக *
வன்தாள்விடையேழன்றடர்த்த வானோர்பெருமான்மாமாயன் *
சென்றான்தூதுபஞ்சவர்க்காய்த் திரிகாற்சகடம்சினமழித்து *
கன்றால்விளங்காயெறிந்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (கூ)

↓↓ கருமாமுகில்தோய்நெடுமாடக் கண்ணபுரத்தெம்மடிகளை *
திருமாமகளாலருள்மாரி செழுநீராலிவளநாடன் *
மருவார்புயற்கைக்கலிகன்றி மங்கைவேந்தனொலிவல்லார் *
இருமாநிலத்துக்கரசாகி இமையோரிறைஞ்சவாழ்வாரே. (கய)

அடிவரவு:—தொண்டு பொருந்தா வல்லி மல்லை ஆமை வருந்தாது இலை மால் குன்றால் கருமா வியம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

## எ - ஆம் திருமொழி - வியமுடை

திருக்கண்ணபுரம். (எ)

கலிவிருத்தம். (அடாநா [illegible] - ஆதி தாளம்)

↓↓ வியமுடைவிடையினம் உடைதரமடமகள் *
† குயமிடைதடவரை அகலமதுடையவர் *
‡ நயமுடைநடையனம் இளையவர்நடைபயில் *
கயமிடைகணபுரம் அடிகள்தமிடமே. (க)

இணைமலிமருதிறுத்து எருதிறஇகல்செய்து *
துணைமலிமுலையவள் மணமிகுகலவியுள் *
மணமலிவிழவினொடு அடியவரளவிய *
கணமலிகணபுரம் அடிகள்தமிடமே. (உ)

புயலுறுவரைமழை பொழிதர, மணிநிரை *
மயலுற, வரைகுடை எடுவியநெடியவர் *
முயல்துளர்மிளைமுயல்துள வளவிளைவயல் *
கயல்துளுகணபுரம் அடிகள்தமிடமே. (ங)

† 'குயமுடை' என்பது பாடாந்தரம்.
‡ 'நயமடநடை' என்பது அரும்பதத்தின் பாடம்.

ஏதலர்நகைசெய இளையவரளைவெணெய் *
போதுசெய்தமரிய புனிதர், நல்விரைமலர் *
கோதியமதுகரம் குலவியமலர்மகள் *
காதல்செய்கணபுரம் அடிகள்தமிடமே. (ச)

தொண்டருமமரரும் முனிவருந்தொழுதெழ *
அண்டமொடகலிடம் அளந்தவரமர்செய்து *
விண்டவர்பட மதிளிலங்கை முன்னெரியெழ *
கண்டவர்கணபுரம் அடிகள்தமிடமே. (ரு)

மழுவியல்படையுடையவனிடம், மழைமுகில் *
தழுவியவுருவினர் திருமகள்மருவிய *
கொழுவியசெழுமலர் முழுசியபறவைபண் *
எழுவியகணபுரம் அடிகள்தமிடமே. (சா)

பரிதியொடணிமதி பனிவரைதிசைநிலம் *
எரிதியொடெனவின இயல்வினர்செலவினர் *
சுருதியொடருமறை முறைசொலுமடியவர் *
கருதியகணபுரம் அடிகள்தமிடமே. (எ)

படிபுல்குமடியிணை பலர்தொழ, மலர்வைகு *
கொடிபுல்குதடவரை யகலமதுடையவர் *
முடிபுல்குநெடுவயல் படைசெல † அடிமலர் *
கடிபுல்குகணபுரம் அடிகள்தமிடமே (அ)

புலமனுமலர்மிசை மலர்மகள்புணரிய *
நிலமகளென இனமகளிர்களிவரொடும் *
வலமனுபடையுடை மணிவணர், நிதிகுவை *
கலமனுகணபுரம் அடிகள்தமிடமே. (கூ)

‡‡ மலிபுகழ்கணபுரமுடைய எம்மடிகளை *
வலிகெழுமதிளயல வயலணிமங்கையர் *
கலியனதமிழிவை விழுமியவிசையினொடு *
ஒலிசொலுமடியவர் உறுதுயரிலரே. (க0)

அடிவரவு:—வியம் இணை புயல் ஏதலர் தொண்டர் மழு பரிதியொடு படி புலம் மலிபுகழ் வானோ

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'வடிமலர்' என்றும் எடுக்கலாம.

## அ-ஆந் திருமொழி-வானோரளவும்.

திருக்கண்ணபுரம். (அ) தசாவதாரம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஸாவேரிராகம் - ரூபகதாளம்.)

↓↓ வானோரளவும்முதுமுந்நீர் வளர்ந்தகாலம் * வலியுருவின்
மீனாய்வந்துவியந்துய்யக்கொண்ட தண்தாமரைக்கண்ணன் *
ஆனாவுருவிலானாயன் அவனைஅம்மாவிளைவயலுள் *
கானார்புறவிற்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. (க)

மலங்குவிலங்குநெடுவெள்ளம்மறுக அங்கோர்வரைநட்டு *
இலங்குசோதியாரமுதம் எய்துமளவோராமையாய் *
விலங்கல்திரியத்தடங்கடலுள் சுமந்துகிடந்தவித்தகனை *
கலங்கல்முந்நீர்க்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. (உ)

பாராரளவும்முதுமுந்நீர் பரந்தகாலம் * வளைமருப்பில்
ஏராருருவத்தேனமாய் எடுத்தவாற்றலம்மானை *
கூராராரலிரைகருதிக் குருகுபாயக்கயலிரியும் *
காரார்புறவிற்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. (ங)

உளைந்தவரியும்மானிடமும் உடனாய்த்தோன்றவொன்றுவித்து *
விளைந்தசீற்றம்விண்வெதும்ப வேற்றோனகலம்வெஞ்சமத்து *
பிளந்துவளைந்தவுகிரானைப் பெருந்தண்செந்நெற்குலைதடிந்து *
களஞ்செய்புறவிற்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. (ச)

தொழுநீர்வடிவிற்குறளுருவாய் வந்துதோன்றி, மாவலிபால் *
முழுநீர்வையம்முன்கொண்ட மூவாவுருவினம்மானை *
உழுநீர்வயலுள்பொன்கிளைப்ப ஒருபால்முல்லைமுகையோடும் *
கழுநீர்மலரும்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. (ரு)

வடிவாய்மழுவேபடையாக வந்துதோன்றி, மூவெழுகால் *
படியாரரசுகளைகட்ட பாழியானையம்மானை *
குடியாவண்டுகொண்டுண்ணக் கோலநீலம்மட்டுகுக்கும் *
கடியார்புறவிற்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. (சு)

வையமெல்லாமுடன்வணங்க வணங்காமன்னனாய்த்தோன்றி *
வெய்யசீற்றக்கடியிலங்கை குடிகொண்டோடவெஞ்சமத்து *
செய்தவெம்போர்நம்பரனைச் செழுந்தண்கானலமணநாறும் *
கைதைவேலிக்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. (எ)

ஒற்றைக்குழையுமநாஞ்சிலும் ஒருபால்தோன்றத்தான்தோன்றி *
வெற்றித்தொழிலார்வேல்வேந்தர் விண்பாற்செல்ல, வெஞ்சமத்து *
செற்றகொற்றத்தொழிலானைச் செந்தீமூன்றுமில்லிருப்ப *
கற்றமறையோர்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. (அ)

துவரிக்கனிவாய்நிலமங்கை துயர்தீர்ந்துய்ய, பாரதத்துள் *
இவரித்தரசர்தடுமாற இருள்நாள்பிறந்தவம்மானை *
உவரியோதம்முத்துந்த ஒருபாலொருபாலொண்செந்நெல் *
கவரிவீசும்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. (கூ)

↓↓ மீனோடாமைகேழலரிகுறளாய் முன்னுமிராமனாய்த்
தானாய் * பின்னுமிராமனாய்த் தாமோதரனாய்க்கற்கியு
மானான்தன்னை * கண்ணபுரத்தடியன் கலியனொலிசெய்த *
தேனாரின்சொல்தமிழ்மாலை செப்பப்பாவம்நில்லாவே. (௰)

அடிவரவு:—வானோர் மலங்கு பார் உளைந்த தொழு வடி வையம் ஒற்றை துவரி மீன் கைம்மானம்

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



௰-ஆந் திருமொழி - கைம்மானம்.



திருக்கண்ணபுரம். (கூ)

தரவுகொச்சகக்கலிப்பா. (மோஹநராகம் - திரிபுடைதாளம்.)

↓↓ கைம்மானமதயானை இடர்தீர்த்தகருமுகிலை *
மைம்மானமணியை அணிகொள்மரதகத்தை *
எம்மானையெம்பிரானையீசனை என்மனத்துள்
அம்மானை * அடியேன் அடைந்துய்ந்துபோனேனே. (க)

தருமானமழைமுகிலைப் பிரியாதுதன்னடைந்தார் *
வருமானம்தவிர்க்கும் மணியை, அணியுருவில் *
திருமாலையம்மானை அமுதத்தைக் கடற்கிடந்த
பெருமானை * அடியேன் அடைந்துய்ந்துபிழைத்தேனே. (உ)

↓↓ விடையேழன்றடர்த்து வெகுண்டுவிலங்கலுற *
படையாலாழிதட்ட பரமன்பரஞ்சோதி *
மடையார்நீலம்மல்குமவயல்சூழ் கண்ணபுரமொன்
றுடையானுக்கு * அடியேன் ஒருவர்க்குஉரியேனோ? (௩)

↓↓ மிக்கானை மறையாய்விரிந்தவிளக்கை * என்னுள்
புக்கானைப் புகழ்சேர்பொலிகின்றபொன்மலையை *
தக்கானைக் கடிகைத்தடங்குன்றின்மிசையிருந்த *
அக்காரக்கனியை அடைந்துய்ந்துபோனேனே. (ச)

வந்தாய்என்மனத்தே வந்துநீபுகுந்தபின்னை *
எந்தாய்! போயறியாய் இதுவேயமையாதோ? *
கொந்தார்பைம்பொழில்சூழ் குடந்தைக்கிடந்துகந்த
மைந்தா! * உன்னையென்றும் மறவாமைப்பெற்றேனே. (ரு)

எஞ்சாவெந்நரகத்து அழுந்திநடுங்குகின்றேற்கு *
அஞ்சேலென்றடியேனை ஆட்கொள்ளவல்லானை *
நெஞ்சே! நீநினையாது இறைப்பொழுதுமிருத்திகண்டாய் *
மஞ்சார்மாளிகைசூழ் வயலாலிமைந்தனையே. (சா)

பெற்றார்பெற்றொழிந்தார் பின்னுமநின்றடியேனுக்கு *
உற்றானாய்வளர்த்து என்னுயிராகிநின்றானை *
முற்றாமாமதிகோள் விடுத்தானையெம்மானை *
எத்தால்யான்மறக்கேன்? இதுசொல்லென்னேழைநெஞ்சே! ()

கற்றார்பற்றறுக்கும் பிறவிப்பெருங்கடலே *
பற்றாவந்தடியேன் பிறந்தேன், பிறந்தபின்னை *
வற்றாநீர்வயல்சூழ் வயலாலியம்மானைப்
பெற்றேன் * பெற்றதுவும் பிறவாமைப்பெற்றேனே. (அ)

↓↓ கண்ணார்கண்ணபுரம் கடிகைகடிகமழும் *
தண்ணார்தாமரைசூழ் தலைச்சங்கமேல்திசையுள் *
விண்ணோர்நாண்மதியை விரிகின்றவெஞ்சுடரை *
கண்ணாரக்கண்டுகொண்டு களிக்கின்றதிங்கென்றுகொலோ? (கூ)

↓↓ சேருநீரவேலவலவன் கலிகன்றிமங்கையர்கோன் *
கருநீர்முகில்வண்ணன் கண்ணபுரத்தானை *
இருநீரின்தமிழ் இன்னிசைமாலைகள்கொண்டுதொண்டீர்! *
வருநீர்வையமுய்ய இவைபாடியாடுமினே. (கo)

அடிவரவு:—கைம்மானம் தரு விடை மிக்கானை வந்தாய எஞ்சா பெற்றார் கற்றார் கண்ணார் சேரு வண்டார்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௧௦ – ஆந் திருமொழி - வண்டார்.

### திருக்கண்ணபுரம். (௧௦)

தரவுகொச்சகக்கலிப்பா. (ஸௌராஷ்டராகம் - ரூபகதாளம்.)

↓↓ வண்டார்பூமாமலர்மங்கை மணநோக்க
முண்டானே ! * உன்னையுகந்துகந்து உன்தனக்கே
தொண்டானேற்கு * என்செய்கின்றாய் ? சொல்லு நால்வேதம்
கண்டானே ! * கண்ணபுரத்துறையம்மானே ! (௧)

பெருநீரும்விண்ணும் மலையுமுலகேழும் *
ஒருதாரா நின்னுளொடுக்கிய நின்னையல்லால் *
வருதேவர்மற்றுளரென்று என்மனத்துஇறையும்
கருதேன்நான் * கண்ணபுரத்துறையம்மானே ! (௨)

↓↓ மற்றுமோர்தெய்வமுளதென்று இருப்பாரோடு
உற்றிலேன் * உற்றதும் உன்னடியார்க்கடிமை *
மற்றெல்லாம்பேசிலும் நின்திருவெட்டெழுத்தும்
கற்று * நான் கண்ணபுரத்துறையம்மானே ! (௩)

பெண்ணானாள் பேரிளங்கொங்கையினாரழல்போல் *
உண்ணாநஞ்சுண்டுகந்தாயை உகந்தேன்நான் *
மண்ணாளா ! வாள்நெடுங்கண்ணி மதுமலராள்
கண்ணாளா ! * கண்ணபுரத்துறையம்மானே ! (௪)

பெற்றாரும்சுற்றமுமென்று இவைபேணேன்நான் *
மற்றாரும்பற்றிலேன் ஆதலால்நின்னடைந்தேன் *
உற்றானென்றுஉள்ளத்துவைத்து அருள்செய்கண்டாய் *
கற்றார்சேர் கண்ணபுரத்துறையம்மானே ! (௫)

ஏத்தியுன்சேவடி எண்ணியிருப்பாரை *
பார்த்திருந்தங்கு நமன்தமர்பற்றாது *
சோத்தம்நாமஞ்சுதுமென்று தொடாமைநீ
காத்திபோல் * கண்ணபுரத்துறையம்மானே ! (௬)

வெள்ளைநீர்வெள்ளத்து அணைந்தஅரவணைமேல் *
துள்ளுநீர்மெள்ளத் துயின்றபெருமானே ! *
வள்ளலே ! உன்தமர்க்கென்றும் நமன்தமர்
கள்ளர்போல் * கண்ணபுரத்துறையம்மானே ! (௭)

மாணாகி வையமளந்ததுவும் * வாளவுணன்
பூணாகம்கீண்டதுவும் ஈண்டுநினைந்திருந்தேன் *
பேணாதவல்வினையேன் இடரெத்தனையும்
காணேன்நான் * கண்ணபுரத்துறையம்மானே! (அ)

நாட்டினாயென்னை உனக்குமுன்தொண்டாக *
மாட்டினேனத்தனையே கொண்டுஎன்வல்வினையை *
பாட்டினாலுன்னை என்நெஞ்சத்திருந்தமை
காட்டினாய் * கண்ணபுரத்துறையம்மானே! (௯)

↓↓ கண்டசீர்க் கண்ணபுரத்துறையம்மானை *
கொண்டசீர்த்தொண்டன் கலியனொலிமாலை *
பண்டமாய்ப்பாடும் அடியவர்க்கெஞ்ஞான்றும் *
அண்டம்போய்ஆட்சி அவர்க்கதறிந்தோமே. (௰)

அடிவரவு:—வண்டார பெரு மற்று பெண் பெற்றா வத்தி வெள்ளை மாண் நாட்டினாய் கண்டசீர் வங்கம்

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



ஒன்பதாம்பத்து.

௧ - ஆந் திருமொழி - வங்கமாமுந்நீர்.



திருக்கண்ணங்குடி.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஆரபிராகம் - அடதாளம்.)

↓↓ வங்கமாமுந்நீர்வரிநிறப்பெரிய
வாளரவினணைமேவி *
சங்கமாரங்கைத்தடமலருந்திச்
சாமமாமேனியென்தலைவன் *
அங்கமாறைந்துவேள்விநால்வேதம்
அருங்கலைபயின்று * எரிமூன்றும்
செங்கையால்வளர்க்கும்துளக்கமில்மனத்தோர்
திருக்கண்ணங்குடியுள்நின்றானே. (௧)

கவளமாகதத்தகரியுய்யப் பொய்கைக்
கராங்கொளக்கலங்கி * உள்நினைந்து
துவளமேல்வந்துதோன்றி வன்முதலை
துணிபடச்சுடுபடைதுரந்தோன் *

குவளைநீள்முளரிகுமுதமொண்கழுநீர்
　　கொய்ம்மலர்நெய்தலொண்கழனி *
திவளும்மாளிகைசூழ்செழுமணிப்புரிசைத்
　　திருக்கண்ணங்குடியுள்நின்றானே. (உ)

வாதைவந்தடரவானமும்நிலனும்
　　மலைகளுமலைகடல்குளிப்ப *
மீதுகொண்டுகளும்மீனுருவாகி
　　விரிபுனல்வரியகட்டொளித்தோன் *
போதலர்புன்னைமல்லிகைமௌவல்
　　புதுவிரைமதுமலரணைந்து *
சீதவொண்தென்றல்திசைதொறும்கமழும்
　　திருக்கண்ணங்குடியுள்நின்றானே. (௩)

வென்றிசேர்திண்மைவிலங்கல்மாமேனி
　　வெள்ளெயிற்றொள்ளெரித்தறுகண் *
பன்றியாயன்றுபார்மகள்பயலை
　　தீர்த்தவன் பஞ்சவர்பாகன் *
ஒன்றலாவுருவத்துலப்பில்பல்காலத்து
　　உயர்கொடியொளிவளர்மதியம் *
சென்றுசேர்சென்னிச்சிகரநன்மாடத்
　　திருக்கண்ணங்குடியுள்நின்றானே. (௪)

மன்னவன்பெரியவேள்வியிற்குறளாய்
　　மூவடிநீரொடும்கொண்டு *
பின்னுமேழுலகுமீரடியாகப்
　　பெருந்திசையடங்கிடநிமிர்ந்தோன் *
அன்னமென்கமலத்தணிமலர்ப்பீடத்து
　　அலைபுனலிலைக்குடைநீழல் *
செந்நெலொண்கவரியசையவீற்றிருக்கும்
　　திருக்கண்ணங்குடியுள்நின்றானே. (௫)

மழுவினாலவனியரசைமூவெழுகால்
　　மணிமுடிபொடிபடுத்து * உதிரக்
குழுவுவார்புனலுள்குளித்து வெங்
　　கோபம்தவிர்ந்தவன், குலைமலிகதலி *

குழுவும்வார்கமுகும்குரவுநற்பலவும்
குளிர்தருசூதமாதவியும் *
செழுமையார்பொழில்கள் தழுவுநன்மாடத்
திருக்கண்ணங்குடியுள்நின்றானே. (சு)

வானுளாரவரைவலிமையால்நலியும்
மறிகடலிலங்கையார்கோனை *
பானுநேர்சரத்தால்பனங்கனிபோலப்
பருமுடியுதிரவில்வளைத்தோன் *
கானுலாமயிலின்கணங்கள்நின்றாடக்
கணமுகில்முரசம்நின்றதிர *
தேனுலாவரிவண்டின்னிசைமுரலும்
திருக்கண்ணங்குடியுள்நின்றானே. (எ)

அரவுநீள்கொடியோனவையுளாசனத்தை
அஞ்சிடாதேயிட * அதற்குப்
பெரியமாமேனியண்டமூடுருவப்
பெருந்திசையடங்கிடநிமிர்ந்தோன் *
வரையின்மாமணியும்மரகதத்திரளும்
வயிரமும்வெதிருதிர்முத்தும் *
திரைகொணர்ந்துந்திவயல்தொறும்குவிக்கும்
திருக்கண்ணங்குடியுள்நின்றானே. (அ)

பன்னியபாரம்பார்மகட்கொழியப்
பாரதமாபெரும்போரில் *
மன்னர்கள்மடியமணிநெடுந்திண்தேர்
மைத்துனற்குய்த்தமாமாயன் *
துன்னுமாதவியும்சுரபுன்னைப்பொழிலும்
சூழ்ந்தெழுசெண்பகமலர்வாய் *
தென்னவென்றளிகள்முரன்றிசைபாடும்
திருக்கண்ணங்குடியுள்நின்றானே. (கூ)

↓↓ கலையுலாவல்குற்காரிகைதிறத்துக்
கடற்பெரும்படையொடும்சென்று *
சிலையினாலிலங்கைதீயெழச்செற்ற
திருக்கண்ணங்குடியுள்நின்றானை *

மலைகுலாமாடமங்கையர்தலைவன்
 மானவேற்கலியன்வாயொலிகள் *
உலவுசொல்மாலையொன்பதோடொன்றும்
 வல்லவர்க்கில்லைநல்குரவே. (௧0)

அடிவரவு:—வங்க கவளம் வாதை வென்றி மன்னவன் மழுவினால் வானுளார் அரவு பன்னிய கலை பொன்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## உ - ஆந் திருமொழி - பொன்னிவர்மேனி.



திருநாகை.

எண்சீராசிரியவிருத்தம். (ராகம் - ஆதிதாளம்.)

[தலைவனது உருவெளிப்பாடுகண்ட தலைவி தோழிக்குக்கூறிய பாசுரம்.]

‡‡ பொன்னிவர்மேனிமரகதத்தின்
 பொங்கிளஞ்சோதியகலத்துஆரம்
மின் * இவர்வாயில்நல்வேதமோதும்
 வேதியர்வானவராவர்தோழீ ! *
என்னையும்நோக்கியென்னல்குலும்நோக்கி
 ஏந்திளங்கொங்கையும்நோக்குகின்றார் *
அன்னையென்னோக்குமென்றஞ்சுகின்றேன்
 அச்சோவொருவரழகியவா ! (௧)

தோடவிழ்நீலம்மணங்கொடுக்கும்
 சூழ்புனல்சூழ்குடந்தைக்கிடந்த *
சேடர்கொலென்றுதெரிக்கமாட்டேன்
 செஞ்சுடராழியும்சங்குமேந்தி *
பாடகமெல்லடியார்வணங்கப்
 பன்மணிமுத்தொடிலங்குசோதி *
ஆடகம்பூண்டொருநான்குதோளும்
 அச்சோவொருவரழகியவா ! (உ)

வேயிருஞ்சோலைவிலங்கல்சூழ்ந்த
 மெய்யமணாளர், இவ்வையமெல்லாம் *
தாயினநாயகராவர்தோழீ !
 தாமரைக்கண்களிருந்தவாறு *

சேயிருங்குன்றம்திகழ்ந்தொப்பச்
செவ்வியவாகிமலர்ந்தசோதி *
ஆயிரம்தோளொடிலங்குபூணும்
அச்சோவொருவரழகியவா! (௩)

வம்பவிழுந்துழாய்மாலைதோள்மேல்
கையனவாழியும்சங்குமேந்தி *
நம்பர்நம்மில்லம்புகுந்துநின்றார்
நாகரிகர்பெரிதும்இளையர் *
செம்பவளம்இவர்வாயின்வண்ணம்
தேவரிவரதுஉருவம்சொல்லில் *
அம்பவளத்திரளேயுமொப்பர்
அச்சோவொருவரழகியவா! (௪)

கோழியும்கூடலும்கோயில்கொண்ட
கோவலரேயொப்பர், குன்றமன்ன *
பாழியந்தோளுமோர்நான்குடையர்
பண்டிவர்தம்மையும்கண்டறியோம் *
வாழியரோஇவர்வண்ணமெண்ணில்
மாகடல்போன்றுளர், கையில்வெய்ய *
ஆழியொன்றேந்தியோர்சங்குபற்றி
அச்சோவொருவரழகியவா! (௫)

வெஞ்சினவேழம்மருப்பொசித்த
வேந்தர்கொல்? ஏந்திழையார்மனத்தை *
தஞ்சுடையாளர்கொல்? யானறியேன்
தாமரைக்கண்களிருந்தவாறு *
கஞ்சனைஅஞ்சமுன்கால்விசைத்த
காளையராவர், கண்டார்வணங்கும் *
அஞ்சனமாமலையேயுமொப்பர்
அச்சோவொருவரழகியவா! (௬)

பிணியவிழ்தாமரைமொட்டலர்த்தும்
பேரருளாளர்கொல்? யானறியேன் *
பணியுமென்நெஞ்சமிதென்கொல்? தோழீ
பண்டிவர்தம்மையும்கண்டறியோம் *

அணிகெழுதாமரையன்னகண்ணும்
அங்கையும்பங்கயம், மேனிவானத்து *
அணிகெழுமாமுகிலேயுமொப்பர்
அச்சோவொருவரழகியவா! (எ)

மஞ்சுயர்மாமதிதீண்டநீண்ட
மாலிருஞ்சோலைமணாளர்வந்து * என்
நெஞ்சுள்ளும்கண்ணுள்ளும்நின்றுநீங்கார்
நீர்மலையார்கொல்? நினைக்கமாட்டேன் *
மஞ்சுயர்பொன்மலைமேலெழுந்த
மாமுகில்போன்றுளர்வந்துகாணீர் *
அஞ்சிறைப்புள்ளுமொன்றேறிவந்தார்
அச்சோவொருவரழகியவா! (அ)

எண்திசையும்எறிநீர்க்கடலும்
ஏழுலகுமுடனேவிழுங்கி *
மண்டியோராலிலைப்பள்ளிகொள்ளும்
† மாயர்கொல்? மாயமறியமாட்டேன் *
கொண்டல்நன்மால்வரையேயுமொப்பர்
கொங்கலர்தாமரைக்கண்ணும்வாயும் *
அண்டத்தமரர்பணியநின்றார்
அச்சோவொருவரழகியவா! (கூ)

↓↓ அன்னமும்கேழலும்மீனுமாய
ஆதியைநாகையழகியாரை *
கன்னிநன்மாமதிள்மங்கைவேந்தன்
காமருசீர்க்கலிகன்றி * குன்றா
இன்னிசையாற்சொன்னசெஞ்சொல்மாலை
ஏழுமிரண்டுமோரொன்றும்வல்லார் *
மன்னவராயுலகாண்டு மீண்டும்
வானவராய்மகிழ்வெய்துவரே. (கo)

அடிவரவு:—பொன் தோடு வேய் வம்பு கோழி வெஞ்சினம் பிணி மஞ்சுயர் எண்திசை அன்னம் தன்னை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'ஆயர்கொல்' என்று கூறுவர்.

## ௩ - ஆந் திருமொழி - தன்னை.

திருப்புல்லாணி. (க)

கலிநிலைத்துறை. (சங்கராபரணராகம் - ரூபகதாளம்.)

[தலைவனைப்பிரிந்த தலைவி ஆற்றாமைமிகுதியால் தலைவனிடம் செல்லத் துணிந்து நெஞ்சையும் தோழியையும் அழைவேண்டிய பாசுரம்.]

†† தன்னைநைவிக்கிலேன் வல்வினையேன்தொழுதும்எழு *
பொன்னைநைவிக்கும் அப்பூஞ்செருந்தி ! மணநீழல்வாய் *
என்னைநைவித்து எழில்கொண்டகன்றபெருமானிடம் *
புன்னைமுத்தம்பொழில்சூழ்ந்து அழகாயபுல்லாணியே. (க)

உருகிநெஞ்சே ! நினைந்திங்கிருந்தென் ? தொழுதும்எழு *
முருகுவண்டுண்மலர்க்கைதையின் நீழலில்முன்னொருநாள் *
பெருகுகாதன்மை என்னுள்ளமெய்தபபிரிநதானிடம் *
பொருதுமுந்நீர்க்கரைக்கே மணியுந்துபுல்லாணியே. (உ)

ஏதுசெய்தால்மறக்கேன் ? மனமே! தொழுதும்எழு *
தாதுமல்குதடஞ்சூழ்பொழில் தாழ்வர்தொடர்ந்து * பின்
பேதைநின்னைப்பிரியேன் இனி என்று அகன்றானிடம் *
போதுநாளுங்கமழும் பொழில்சூழ்ந்தபுல்லாணியே. (௩)

கொங்குண்வண்டேகரியாகவந்தான் கொடியேற்கு * முன்
நங்களீசன் நமக்கேபணித்தமொழிசெய்திலன் *
மங்கைநல்லாய் ! தொழுதும்எழு போயவன்மன்னுமூர் *
பொங்குமுந்நீர்க்கரைக்கே மணியுந்துபுல்லாணியே. (௪)

உணரிலுள்ளம்சுடுமால் வினையேன்தொழுதும்எழு *
துணரிஞாழல்நறும்போது நஞ்சூழ்குழல்பெய்து * பின்
தணரிலாவித்தளருமென அன்புதந்தானிடம் *
புணரியோதம்பணிலம் மணியுநதுபுல்லாணியே. (ரு)

எள்கிநெஞ்சே ! நினைந்திங்கிருநதென் ? தொழுதும்எழு *
வள்ளல்மாயன்மணிவண்ணன்எம்மான் மருவுமிடம் *
கள்ளவிழும்மலர்க்காவியும் தூமடற்கைதையும் *
புள்ளுமள்ளற்பழனங்களும்சூழ்ந்த புல்லாணியே. (௬)

பரவிநெஞ்சே ! தொழுதும்எழு போயவன்பாலமாய் *
இரவும்நாளும் இனிக்கண்துயிலாதிருந்தென்பயன் ? *
விரவிமுத்தம் நெடுவெண்மணல்மேற்கொண்டு * வெண்திரை
புரவியென்னப்புதஞ்செய்து வந்துந்துபுல்லாணியே. (௭)

---

† 'மணிநீழல்' என்று சிலர் கூறுவர்.

அலமுமாழிப்படையும் உடையார் நமக்கன்பராய் *
சலமதாகித்தகவொன்றிலர் நாம்தொழுதும்எழு *
உலவுகால்நற்கழியோங்கு தண்பைம்பொழிலூடு * இசை
புலவுகானல் களிவண்டினம்பாடு புல்லாணியே. (அ)

ஓதிநாமங்குளித்துஉச்சிதன்னால் ஒளிமாமலர் *
பாதநாளும்பணிவோம் நமக்கேநலமாதலில் *
ஆதுதாரானெனிலுந்தரும் அன்றியும்அன்பராய் *
போதும்மாதே! தொழுதும் அவன்மன்னுபுல்லாணியே. (கூ)

↓↓ இலங்குமுத்தும்பவளக்கொழுந்தும் எழில்தாமரை *
புலங்கள்முற்றும்பொழில்சூழ்ந்து அழகாயபுல்லாணிமேல *
கலங்கலில்லாப்புகழான் கலியனொலி † மாலை *
வலங்கொளதொண்டர்க்கிடமாவது பாடில்வைகுந்தமே. (கய)

அடிவரவு:—தன்னை உருகி ஏது கொங்கு உணரில் எள்கி பாவி அலம் ஓதி இலங்கு காவார்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



ச - ஆம் திருமொழி - காவார்



திருப்புல்லாணி. (உ)

தரவுகொச்சகக்கலிப்பா (காம்போதிராகம் - ஆதிதாளம்.)

[பிரிவாற்றாத தலைவி பறவைகளோடு கடலொடும் பிறை தென்றல் முதலியவற்றோடும் வருந்திக்கூறிய பாசுரம்.]

↓↓ காவார்மடற்பெண்ணை அன்றிலரிகுரலும் *
ஏவாயினூடியங்கும் எஃகிற்கொடிதாலோ! *
பூவார்மணங்கமழும் புல்லாணிகைதொழுதேன் *
பாவாய்! இதுநமக்கு ஓர்பான்மையேயாகாதே. (க)

முன்னம்குறளுருவாய் மூவடிமண்கொண்டளந்த *
மன்னன்சரிதைக்கே மாலாகிப்பொன்பயந்தேன் *
பொன்னங்கழிக்கானல் புள்ளினங்காள்! புல்லாணி *
அன்னமாய்நூல்பயந்தாற்கு ஆங்கிதனைச்செப்புமினே. (உ)

வவ்வித்துழாயதன்மேல சென்றதனிநெஞ்சம *
செவ்வியறியாது நிற்குங்கொல்? நித்திலங்கள் *
பவ்வத்திரையுலவு புல்லாணிகைதொழுதேன் *
தெய்வச்சிலையாற்கு என்சிந்தைநோய்செப்புமினே. (ங)

† 'மாலைகள்' என்ற பாடம் செய்யுளோசைக்குச் சேரும்.

பரியவிரணியனதூகம் அணியுகிரால் *
அரியுருவாய்க்கீண்டான் அருள்தந்தவாநமக்கு *
பொருதிரைகள்போந்துலவு புல்லாணிகைதொழுதேன் *
அரிமலர்க்கண்ணீர்ததும்ப அந்துகிலும்நில்லாவே. (௪)

வில்லாலிலங்கைமலங்கச் சரந்துரந்த *
வல்லாளன்பின்போன நெஞ்சம்வருமளவும் *
எல்லாருமென்தன்னை ஏசிலும்பேசிடினும் *
புல்லாணியெம்பெருமான் பொய்கேட்டிருந்தேனே. (௫)

சுழன்றிலங்குவெங்கதிரோன் தேரோடும்போய்மறைந்தான் *
அழன்றுகொடிதாகி அஞ்சுடரில்தானடுமால் *
செழுந்தடம்பூஞ்சோலைசூழ் புல்லாணிகைதொழுதேன் *
இழந்திருந்தேனென்தன் எழில்நிறமும்சங்குமே. (௬)

கனையாரிடிகுரலின் கார்மணியின்நாவாடல் *
தினையேனும்நில்லாது தீயிற்கொடிதாமாலோ *
புனையார்மணிமாட புல்லாணிகைதொழுதேன் *
வினையேன்மேல்வேலையும் வெந்தழலேவீசுமே. (௭)

தூம்புடைக்கைவேழம் வெருவமருப்பொசித்த *
பாம்பினணையான் அருள்தந்தவாநமக்கு *
பூஞ்செருந்திபொன்சொரியும் புல்லாணிகைதொழுதேன் *
தேம்பலிளம்பிறையும் என்தனக்கோர்வெந்தழலே. (௮)

வேதமும்வேள்வியும் விண்ணும்இருசுடரும் *
ஆதியுமானான் அருள்தந்தவாநமக்கு *
போதலரும்புன்னைசூழ் புல்லாணிகைதொழுதேன் *
ஓதமும்நானும் உறங்காதிருந்தேனே. (௯)

‡‡ பொன்னலரும்புன்னைசூழ் புல்லாணியம்மானை *
மின்னிடையார்வேட்கைநோய்கூர இருந்ததனை *
கன்னவிலும்திண்தோள் கலியனொலிவல்லார் *
மன்னவராய் மண்ணாண்டு † வானாடுமுன்னுவரே. (௧௦)

அடிவரவு:—காவார் முன்னம் வவ்வ பரிய வில் சுழன்று கனை தூம்புடை வேதம் பொன்னலரும் தவளம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'வானாளும்' 'வானுள' என்பன பாடபேதங்கள்.

## ரு - ஆந் திருமொழி - தவளவிளம்பிறை.

திருக்குறுங்குடி. (௧)

[தலைவி தனது தலைமகனுள்ள திருக்குறுங்குடியில் கொண்டுவிடும்படி உற்றாரை வேண்டிக்கூறிய பாசுரம்]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (அநந்தபைரவிராகம் - அடதாளம்)

↓↓தவளவிளம்பிறைதுள்ளுமுந்நீர்த்தண்மலராதென்றலோடன்றியொன்றித்
துவள * என்னெஞ்சகம்சோரவீரும் சூழ்பனிநாள் துயிலாதிருப்பேன் *
இவளுமோர்பெண்கொடியென்றிரங்காதென்னலமைந்துமுன் கொண்டுபோன*
குவளைமலர்நிறவண்ணர்மன்னு குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். (௧)

தாதவிழ்மல்லிகைபுல்லிவந்த தண்மதியினிளவாடையின்னே *
வாதைதிரிதருமூழியுண்ண ஓரிரவுமுறங்கேன் * உறங்கும்
பேதையர்பேதைமையாலிருந்து பேசிலும்பேசுகபெய்வளையார் *
கோதைநறுமலர்மங்கைமார்வன்குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின் .

காலையும்மாலையொத்துண்டு கங்குலுநாழிகையூழியில்நீண்டுலாவும் *
போல்வதோர்தன்மைபுகுந்துநிற்கும் பொங்கழலேயொக்கும்வாடைசொல்லில்*
மாலவன்மாமணிவண்ணன்மாயம் மற்றுமுளஅவைவந்திடாமுன் *
கோலமயில்பயிலும்புறவின் குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். (௩)

கருமணிபூண்டுவெண்ணாகணைந்து காரிமிலேற்றணர்தாழ்ந்துலாவும் *
ஒருமணியோசையென்னுள்ளந்தள்ள ஓரிரவுமுறங்காதிருப்பேன் *
பெருமணிவானவருச்சிவைத்த பேரருளாளன்பெருமை † பேசி *
குருமணிநீர்கொழிக்கும்புறவின் குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின்.

திண்திமிலேற்றின்மணியும் ஆயன்தீங்குழலோசையும்,தென்றலோடு*
கொண்டதோர்மாலையும்அந்திஈன்ற கோலவிளம்பிறையோடுகூடி *
பண்டையவல்லவிவைநமக்குப் பாவியேனாவியைவாட்டஞ்செய்யும் *
கொண்டல்மணிநிறவண்ணர்மன்னு குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். ()

எல்லியும்நன்பகலுமிருந்தே ஏசிலுமேசுகவேந்திழையார் *
நல்லரவர்திறம்நாமறியோம் நாண்மடமச்சம்நமக்கிங்கில்லை *
வல்லனசொல்லிமகிழ்வரேலும் மாமணிவண்ணரைநாம்மறவோம் *
கொல்லைவளரிளமுல்லைபுல்கு குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின் .(௬)

செங்கண்நெடியகரியமேனித் தேவரொருவரிங்கேபுகுந்து * என்
அங்கமெலியவளைகழல ஆதுகொலோ ? என்றுசொன்னபின்னை *
ஐங்கணைவில்லிதன்னாண்மை என்னோடாடுமதனையறியமாட்டேன் *
கொங்கலர்தண்பணைசூழ்புறவின் குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். (௭)

† 'பேச' என்பது வ்யாக்யாநபாடம்.

கேவலமன்றுகடலின்ஓசை கேண்மின்களாயன்கையாம்பல்வந்து *என்
ஆவியளவுமணைந்துநிற்கும் அன்றியுமைந்துசரமணைதெரிந்திட்டு *
ஏவலங்காட்டியிவனொருவன் இப்படியேபுகுந்தெய்திடாமுன் *
கோவலர்கூத்தன்குறிப்பறிந்து குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். (அ)

சோத்தெனநின்றுதொழவிரங்கான் தொன்னலங்கொண்டெனக்குஇன்றுகாறு
போர்ப்பதோர்பொற்படந்தந்துபோனான் போயினவூரறியேன்*என்கொ [ம்*
மூத்திடுகின்றன மற்றவன்தன்மொய்யகலமணையாதுவாளா * [ங்கை *
கூத்தனிமையவர்கோன்விரும்பும் குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். (கூ

↓↓ செற்றவன்தென்னிலங்கைமலங்கத் தேவபிரான், திருமாமகளைப்
பெற்றும் * என்நெஞ்சகம்கோயில்கொண்ட பேரருளாளன், பெருமைபேசக்
கற்றவன் * காமருசீர்க்கலியன் கண்ணகத்தும்மனத்தும், அகலாக்
கொற்றவன்*முற்றுலகாளிநின்ற குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். (க0)

அடிவரவு:—தவளம் தாதவிழ் காலை கருமணி நின்றிமில் எல்லி செங்கண்
கேவலம் சோத்தென செற்றவன் அக்கு

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## சு - ஆந் திருமொழி - அக்கும்புலியினதளும்



### திருக்குறுங்குடி. (உ)

கலிநிலைத்துறை. (அ[illegible] - நபாதாளம்.)

↓↓ அக்கும்புலியினதளும் உடையாரவரொருவர் *
பக்கம்நிற்கநின்ற பண்பரூர்போலும் *
தக்கமரத்தின் தாழ்சினையேறி * தாய்வாயில்
கொக்கின்பிள்ளை வெள்ளிறவுண்ணும்குறுங்குடியே. (க)

துங்காரரவத்திரைவந்துலவத் தொடுகடலுள் *
பொங்காரரவில்துயிலும் புனிதரூர்போலும் *
செங்காலன்னம் திகழ்தண்பணையில்பெடையோடும் *
கொங்கார்கமலத்தலரில் சேருங்குறுங்குடியே. (உ)

வாழக்கண்டோம் வந்துகாண்மின்தொண்டீர்காள்! *
கேழற்செங்கண் மாமுகில்வண்ணர்மருவுமூர் *
ஏழைச்செங்கால் இன்துணைநாரைக்கிரைதேடி *
கூழைப்பார்வைக் கார்வயல்மேயுங்குறுங்குடியே. (ங)

சிரமுனைந்துமைந்தும் சிந்தச்சென்று * அரக்கன்
உரமுங்கரமுந்துணித்த † உரவோனூர்போலும் *
இரவும்பகலும் ஈன்தேன் ‡ முரலமன்றெல்லாம் *
குரவின்பூவேதான் மணநாறுங்குறுங்குடியே. (௪)

கவ்வைக்களிற்றுமன்னர்மாளக் கலிமான்தேர்
ஐவர்க்காய் * அன்றமரில் $ உய்த்தான் ஊர்போலும் *
மைவைத்திலங்குகண்ணார்தங்கள் மொழியொப்பான் *
கொவ்வைக்கனிவாய்க் கிள்ளைபேசுங்குறுங்குடியே. (௫)

தீநீர்வண்ண மாமலர்கொண்டு விரையேந்தி *
தூநீர்பரவித் தொழுமினெழுமின்தொண்டர்காள்! *
மாநீர்வண்ணர் மருவியுறையுமிடம் * வானில்
கூனீர்மதியை மாடந்தீண்டுங்குறுங்குடியே. (௬)

வல்லிச்சிறுநுண்ணிடையாரிடை நீர்வைக்கின்று *
அல்லற்சிந்தைதவிர அடைமின்அடியீர்காள்! *
சொல்லில்திருவேயனையார் கனிவாயெயிறொப்பான் *
கொல்லைமுல்லை மெல்லரும்பீனுங்குறுங்குடியே. (௭)

நாராரிண்டை நாண்மலர்கொண்டு நந்தமர்காள்! *
ஆராஅன்போடு எம்பெருமானூரடைமின்கள் *
தாராவாரும் வார்புனல்மேய்ந்துவயல்வாழும் *
கூர்வாய்நாரை பேடையொடாடுங்குறுங்குடியே. (௮)

நின்றவினையுந்துயருங்கெட மாமலரேந்தி *
சென்றுபணிமினெழுமின் தொழுமின்தொண்டர்காள்! *
என்றுமிரவும்பகலும் வரிவண்டிசைபாட *
குன்றின்முல்லை மன்றிடைநாறுங்குறுங்குடியே. (௯)

‡‡ சிலையாலிலங்கைசெற்றான் மற்றோர்சினவேழம் *
கொலையார்கொம்புகொண்டான்மேய குறுங்குடிமேல் *
கலையார்பனுவல்வல்லான் கலியனொலிமாலை *
நிலையார்பாடல்பாடப் பாவம்நில்லாவே. (௧௦)

அடிவரவு:—அக்கு துங்கார வாழ சிரமுன் கவ்வை தீநீர் வல்லி நாரார் நின்ற சிலையால் தந்தை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'ஒருவன்', ‡ 'முரலும்', $ 'உற்றான்' என்பன சிலர் பாடாந்தரங்கள்.

## எ - ஆந் திருமொழி - தந்தைதாய்.



### திருவல்லவாழ்.

அறுசீராசிரியவிருத்தம் (நந்யாசிராகம் நாகநாமம்)

↓↓ தந்தைதாய்மக்களே சுற்றமென்றுற்றவர்பற்றிநின்ற *
பந்தமார்வாழ்க்கையை நொந்துநீபழியெனக்கருதினாயேல் *
அந்தமாயாதியாய் ஆதிக்குமாதியாய்ஆயனாய *
மைந்தனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! (க)

மின்னுமாவல்லியும் வஞ்சியும்வென்றநுண்ணிடைநுடங்கும் *
அன்னமென்னடையினார்கலவியை அருவருத்தஞ்சினாயேல் *
துன்னுமாமணிமுடிப் பஞ்சவர்க்காகிமுன் தூதுசென்ற *
மன்னனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! (உ)

பூணுலாமென்முலைப்பாவைமார் பொய்யினைமெய்யிதென்று *
பேணுவார்பேசுமப்பேச்சை நீபிழையெனக்கருதினாயேல் *
நீணிலாவெண்குடைவாணனார் வேள்வியில்மண்ணிரந்த *
மாணியார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! (ங)

பண்ணுலாமென்மொழிப்பாவைமார் பணைமுலையணைதுமென்று *
எண்ணுவாரெண்ணமதொழித்து நீபிழைத்துய்யக்கருதினாயேல் * [நீர்
விண்ணுளார்விண்ணின்மீதியன்ற வேங்கடத்துளார்வளங்கொள்முந்
வண்ணனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! (ச)

மஞ்சுதோய்வெண்குடைமன்னராய் வாரணஞ்சூழவாழ்ந்தார் *
துஞ்சினாரென்பதோர்சொல்லை நீதுயரெனக்கருதினாயேல் *
நஞ்சுதோய்கொங்கைமேல் அங்கைவாய்வைத்து அவள்நாளையுண்ட *
† மைந்தனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! (ரு)

உருவினார்பிறவிசேர் ஊன்பொதிநரம்புதோற்குரம்பையுள்புக்கு *
அருவிநோய்செய்துநின்றைவர்தாம் வாழ்வதற்கஞ்சினாயேல் *
திருவினார்வேதநான்கு ஐந்துதீவேள்வியோடங்கமாறும் *
மருவினார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! (சு)

நோயெலாம்பெய்ததோராக்கையை மெய்யெனக்கொண்டு * வாளா
பேயர்தாம்பேசுமப்பேச்சை நீபிழையெனக்கருதினாயேல் *
தீயுலாவெங்கதிர்த்திங்களாய் மங்குல்வானாகிநின்ற *
மாயனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! (எ)

† 'மஞ்சனார்' என்பதும் பாடம்.

மஞ்சுசேர்வானெரி நீர்நிலம்காலிவைமயங்கிநின்ற *
அஞ்சுசேராக்கையை அரணமன்றென்றுயக்கருதினாயேல் *
சந்துசேர்மென்முலைப் பொன்மலர்ப்பாவையும்தாமும் * நாளும்
வந்துசேர்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! (அ)

வெள்ளியார்பிண்டியார் போதியாரென்றிவரோதுகின்ற *
கள்ளநூல்தன்னையும் கருமமன்றென்றுயக்கருதினாயேல் *
தெள்ளியார்கைதொழும்தேவனார் மாமுநீரமுதுதந்த *
வள்ளலார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! (கூ)

↓↓ மறைவலார்குறைவிலார் உறையுமூர் வல்லவாழடிகள்தம்மை *
சிறைகுலாவண்டறைசோலைசூழ் கோலநீளாலிநாடன் *
கறைபுலாவேல்வல்ல கலியன்வாயொலியிவைகற்றுவல்லார் *
இறைவராயிருநிலங்காவல்பூண்டு இன்பமநன்கெய்துவாரே. (க0)

அடிவரவு:— தங்கை மின் பூண் பண் மஞ்சு உருவின் நோய் மஞ்சுசேர்
வெள்ளியார் மறை முந்துற

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௯ - ஆந் திருமொழி - முந்துற.



### திருமாலிருஞ்சோலை. (க)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (சுருட்டிராகம் - ஆதிதாளம்.)

↓↓ முந்துறவுரைக்கேன் விரைக்குழல்மடவார
கலவியைவிடு தடுமாறல் *
அந்தரமேழுமலைகடலேழும
ஆய எம்மடிகள்தம்கோயில *
சந்தொடுமணியும் அணிமயில்தழையும
தழுவிவந்தருவிகள்நிரந்து *
வந்திழிசாரல்மாலிருஞ்சோலை
வணங்குதும்வாமடநெஞ்சே! (க)

இண்டையும்புனலும்கொண்டிடையின்றி
எழுமினோதொழுதுமென்று * இமையோர்
அண்டரும்பரவவரவணைத்துயின்ற
சுடர்முடிக்கடவுள்தம்கோயில் *

திண்டலர் நனிவேய்வளர்புறவில்
        விரைமலர்க்குறிஞ்சியின்நறுந்தேன் *
வண்டமர்சாரல்மாலிருஞ்சோலை
        வணங்குதும்வாமடநெஞ்சே! (௨)

பிணிவளராக்கைநீங்கநின்றேத்தப்
        பெருநிலமருளின்முன்னருளி *
அணிவளர்குறளாயகலிடமுழுதும்
        அளந்தவெம்மடிகள்தம்கோயில் *
கணிவளர்வேங்கைநெடுநிலமதனில்
        குறவர்தம்கவணிடைத்துரந்த *
மணிவளர்சாரல்மாலிருஞ்சோலை
        வணங்குதும்வாமடநெஞ்சே! (௩)

சூர்மையிலாயபேய்முலைசுவைத்துச
        சுடுசரமடுசிலைத்துரந்து *
நீர்மையிலாததாடகைமாள
        நினைந்தவர்மனங்கொண்டகோயில் *
கார்மலிவேங்கைகோங்கலர்புறவில்
        கடிமலர்க்குறிஞ்சியின்நறுந்தேன் *
வார்புனல்சூழ்தண்மாலிருஞ்சோலை
        வணங்குதும்வாமடநெஞ்சே! (௪)

வணங்கலிலரக்கன்செருக்களத்தவிய
        மணிமுடியொருபதும்புரள *
அணங்கெழுந்தவன்தன்கவந்தம்நின்றாட
        அமர்செய்தவடிகள்தம்கோயில் *
பிணங்கலிலநெடுவேய்நுதிமுகம்கிழிப்பப்
        பிரசம்வந்திழிதர * பெருந்தேன்
மணங்கமழ்சாரல்மாலிருஞ்சோலை
        வணங்குதும்வாமடநெஞ்சே! (௫)

விடங்கலந்தமர்ந்தவரவணைத்துயின்று
        விளங்கனிக்கிளங்கன்றுவிசிறி *
குடங்கலந்தாடிக்குரவைமுன்கோத்த
        கூத்தவெம்மடிகள்தம்கோயில் *

தடங்கடல்முகந்துவிசும்பிடைப்பிளிறத்
        தடவரைக்களிறென்றுமுனிந்து *
மடங்கல்நின்றதிரும்மாலிருஞ்சோலை
        வணங்குதும்வாமடநெஞ்சே !                    (சு)

தேனுகனுவிபோயுகவுங்கு ஓர்
        செழுந்திரள்பனங்கனியுதிர *
தானுகந்தெறிந்ததடங்கடல்வண்ணர்
        எண்ணிமுனிடங்கொண்டகோயில் *
வானகச்சோலைமரதகச்சாயல்
        மாமணிக்கல்லதர் † நிரைந்து *
மானுகர்சாரல்மாலிருஞ்சோலை
        வணங்குதும்வாமடநெஞ்சே !                    (எ)

புதமிகுவிசும்பிற்புணரிசென்றணவப்
        பொருகடலரவணைத்துயின்று *
பதமிகுபரியின்மிகுசினம்தவிர்த்த
        பனிமுகில்வண்ணர்தம்கோயில் *
கதமிகுசினத்தகடதடக்களிற்றின்
        கவுள்வழிக் களிவண்டுபருக *
மதமிகுசாரல்மாலிருஞ்சோலை
        வணங்குதும்வாமடநெஞ்சே !                    (அ)

புந்தியில்சமணர்புத்தரென்றிவர்கள
        ஒத்தனபேசவுமுகந்திட்டு *
எந்தைபெம்மானுரிமையவர்தலைவர்
        எண்ணிமுனிடங்கொண்டகோயில *
சந்தனப்பொழிலின்தாழ்சினைநீழல்
        தாழ்வரைமகளிர்கள்நாளும் *
மந்திரத்திறைஞ்சும்மாலிருஞ்சோலை
        வணங்குதும்வாமடநெஞ்சே !                    (கூ)

‡‡ வண்டமர்சாரல்மாலிருஞ்சோலை
        மாமணிவண்ணரைவணங்கும் *
தொண்டரைப்பரவுஞ்சுடரொளிநெடுவேல்
        சூழ்வயலாலிநன்னாடன் *

---

† 'நிழைந்து' என்னும் பாடம் வ்யாக்யானத்தோடு நன்குபொருந்தும் ; 'நிரந்து' என்பதும் பாடம்.

கண்டல்கல்வேலிமங்கையர் தலைவன்
கலியன்வாயொலிசெய்தபனுவல் *
கொண்டிவைபாடும்தவமுடையார்கள்
ஆள்வரிக்குரைகடலுலகே. (கO)

அடிவரவு:—முந்துற இண்டை பிணி சூர்மையில் வணங்கலில் விடம் தேனு-
கன் புதமிகு புந்தி வண்டமர் மூவர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



கூ - ஆந் திருமொழி - மூவரில்.



திருமாலிருஞ்சோலை. (உ)

கலிநிலைத்துறை. (காமாஸ்ரமம்-நடபாகதாளம்.)

[பிரிவாற்றது தலைவனை நாடிச்சென்ற தலைவியின் நிலையைக்குறித்துத் தாய
இரங்கிக் கூறியபாசுரம்.]

↓↓ மூவரில்முன்முதலவன் முழங்கார்கடலுள்கிடந்து *
பூவலருந்திதன்னுள் புவனம்படைத்துண்டுமிழ்ந்த *
தேவர்கள்நாயகனைத் திருமாலிருஞ்சோலைநின்ற *
கோவலர்கோவிந்தனைக் கொடியேரிடைகூடுங்கொலோ? (க)

↓↓ புனைவளர்பூம்பொழிலார் பொன்னிசூழரங்கநகருள்
முனைவனை * மூவுலகும்படைத்த முதல்மூர்த்திதன்னை *
சினைவளர்பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்றான் *
கனைகழல்காணுங்கொலோ? கயற்கண்ணியெம்காரிகையே. (உ)

உண்டுலகேழினையும் ஒருபாலகனாலிலைமேல் *
கண்துயில்கொண்டுகந்த கருமாணிக்கமாமலையை *
திண்திறல்மாகரிசேர் திருமாலிருஞ்சோலைநின்ற *
அண்டர்தம்கோவினை இன்றுஅணுகுங்கொல்? என்னாயிழையே. (ங)

சிங்கமதாயவுணன் திறலாகம்முன்கீண்டுகந்த *
பங்கயமாமலர்க்கண் பரனையெம்பரஞ்சுடரை *
திங்கள்நன்மாமுகில்சேர் திருமாலிருஞ்சோலைநின்ற *
நங்கள்பிரானை இன்றுநணுகுங்கொல்? என்நன்னுதலே. (ச)

தானவன்வேள்விதன்னில் தனியேகுறளாய்நிமிர்ந்து *
† வானமும்மண்ணகமும் அளந்ததிரிவிக்கிரமன் *
தேனமர்பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்ற *
வானவர்கோனை இன்றுவணங்கித்தொழவல்லள்கொலோ? (ரு)

† 'வானகமும்' என்று சிலர்; இது, ஓசைக்குச்சேராது.

↓↓ நேசமிலாதவர்க்கும் நினையாதவர்க்கும்அரியான் *
வாசமலர்ப்பொழில்சூழ் வடமாமதுரைப்பிறந்தான் *
தேசமெல்லாம்வணங்கும் திருமாலிருஞ்சோலைநின்ற *
கேசவநம்பிதன்னைக் கெண்டையொண்கண்ணிகாணுங்கொலோ ? (சு)

புள்ளினைவாய்பிளந்து பொருமாகரிகொம்பொசித்து *
கள்ளச்சகடுதைத்த கருமாணிக்கமாமலையை *
தெள்ளருவிகொழிக்கும் திருமாலிருஞ்சோலைநின்ற *
வள்ளலை, வாணுதலாள் வணங்கித்தொழவல்லள்கொலோ ? (எ)

↓↓ பார்த்தனுக்கன்றருளிப பாரதத்தொருதேர்முன்னின்று *
காத்தவன்தன்னை விண்ணோர்கருமாணிக்கமாமலையை *
தீர்த்தனைப்பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்ற *
மூர்த்தியைக்கைதொழவும் முடியுங்கொல ? என்மொய்குழற்கே. (அ)

↓↓ வலம்புரியாழியனை வரையார்திரள்தோளன்தன்னை *
புலம்புரிநூலவனைப் பொழில்வேங்கடவேதியனை *
சிலம்பியலாறுடைய திருமாலிருஞ்சோலைநின்ற *
நலந்திகழ்நாரணனை நணுகுங்கொல் ? என்நன்னுதலே. (கூ)

↓↓ தேடற்கரியவனைத் திருமாலிருஞ்சோலைநின்ற *
ஆடற்பறவையனை அணியாயிழைகாணுமென்று *
மாடக்கொடிமதிள்சூழ் மங்கையார்கலிகன்றிசொன்ன *
பாடற்பனுவலபத்தும் பயில்வார்க்கில்லைபாவங்களே. (கo)

அடிவரவு:—மூவரில் புனை உண்டு சிங்கமது தானவன் நேசம் புள்ளினை பார்த்தனுக்கு வலயபுரி தேடற்கு எங்கள்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## கo – ஆந் திருமொழி - எங்கள்.



### திருக்கோட்டியூர்.

ஆசிரியத்துறை. (யமுநாகல்யாணிராகம் - அடதாளம்.)

↓↓ எங்களெம்மிறையெம்பிரான் இமையோர்க்குநாயகன்*ஏத்தடியவர்
தங்கள்தம்மனத்துப் பிரியாதருள்புரிவான் *
பொங்குதண்ணருவிபுதம்செய்யப் பொன்களேசிதறும், இலங்கொளி *
செங்கமலமலரும் திருக்கோட்டியூரானே. (க)

எவ்வநோய்தவிர்ப்பான் எமக்கிறைஇன்னகைத்துவர்வாய் * நிலமகள்
செவ்விதோயவல்லான் திருமாமகட்கினியான் *
மௌவல்மாலைவண்டாடும் மல்லிகைமாலையோடுமணைந்து * மாருதம்
தெய்வநாறவரும் திருக்கோட்டியூரானே (௨)

வெள்ளியான்கரியான் மணிநிறவண்ணன்விண்ணவர்தமக்கிறை*எமக்
கொள்ளியானுயர்ந்தான் உலகேழுமுண்டுமிழ்ந்தான் *
துள்ளுநீர்மொண்டுகொண்டு சாமரைக்கற்றைசந்தனமுந்திவந்தசை *
தெள்ளுநீர்ப்புறவில் திருக்கோட்டியூரானே. (௩)

ஏறுமேறிஇலங்குமொண்மழுப்பற்றும்ஈசற்கிசைந்து * உடம்பிலோர்
கூறுதான்கொடுத்தான் குலமாமகட்கினியான் *
நாறுசண்பகமல்லிகைமலர்புல்கி இன்னிளவண்டு * நல்நறும்
தேறல்வாய்மடுக்கும் திருக்கோட்டியூரானே. (௪)

வங்கமாகடல்வண்ணன் மாமணிவண்ணன்விண்ணவர்கோன் * மது
தொங்கல்நீண்முடியான் நெடியான்படிகடந்தான் * [மலர்த்
மங்குல்தோய்மணிமாடவெண்கொடி மாகமீதுயர்ந்தேறி * வானுயர்
திங்கள்தானணவும் திருக்கோட்டியூரானே. (௫)

காவலனிலங்கைக்கிறைகலங்கச் சரம்செலவுய்த்து * மற்றவன்
ஏவலம்தவிர்த்தான் என்னையாளுடையெம்பிரான் *
நாவலம்புவிமன்னர்வந்துவணங்க மாலுறைகின்றதிங்கென *
தேவர்வந்திறைஞ்சும் திருக்கோட்டியூரானே. (௬)

கன்றுகொண்டுவிளங்கனியெறிந்து ஆநிரைக்கழிவென்று * மாமழை
நின்றுகாத்துகந்தான் நிலமாமகட்கினியான் *
குன்றின்முல்லையின்வாசமும் குளிர்மல்லிகைமணமுமளைந்து * இளந்
தென்றல்வந்துலவும் திருக்கோட்டியூரானே. (௭)

பூங்குருந்தொசித்தானைகாய்ந்து அரிமாச்செகுத்து * அடியேனையாளு
ஈங்கென்னுள்புகுந்தான் இமையோர்கள்தம்பெருமான் * [கந்து
தூங்குதண்பலவின்கனி தொகுவாழையின்கனியொடுமாங்கனி *
தேங்குதண்புனல்சூழ் திருக்கோட்டியூரானே. (௮)

கோவையின்தமிழ்பாடுவார் குடமாடுவார், தடமாமலர்மிசை *
மேவுநான்முகனில் விளங்குபுரிநூலர் *
மேவுநான்மறைவாணர் ஐவகைவேள்வியாறங்கம்வல்லவர்தொழும் *
தேவதேவபிரான் திருக்கோட்டியூரானே. (௯)

⸸⸸ ஆலுமாவலவன்கலிகன்றி மங்கையர்தலைவன் * அணிபொழில்
சேல்கள்பாய்கழனித் திருக்கோட்டியூரானை *
நீலமாமுகில்வண்ணனைநெடுமாலை இன்தமிழால்நினைந்த * இந்
நாலுமாறும்வல்லார்க்கு இடமாகும்வானுலகே. (கo)

அடிவரவு:—எங்கள் எவ்வம் வெள்ளியான் ஏறு வங்கம் காவலன் கன்று பூம்கோவை ஆலும் ஒருநல்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## பத்தாம்பத்து.

## க - ஆந் திருமொழி - ஒருநல்சுற்றம்.



பலதிவ்யதேசங்கள்.

கலிவிருத்தம். (தர்ப்பாரராகம் - அடதாளம்.)

⸸⸸ ஒருநல்சுற்றம் எனக்குயிரொண்பொருள் *
வருநல்தொல்கதி ஆகியமைந்தனை *
நெருநல்கண்டது நீர்மலை, இன்றுபோய் *
கருநெல்சூழ் கண்ணமங்கையுள் காண்டுமே. (க)

⸸⸸ பொன்னைமாமணியை அணியார்ந்ததோர்
மின்னை * வேங்கடத்துச்சியில் கண்டுபோய் *
என்னையாளுடையீசனை எம்பிரான்
தன்னை * யாம்சென்றுகாண்டும் தண்காவிலே. (உ)

வேலையாலிலைப் பள்ளிவிரும்பிய *
பாலையாரமுதத்தினைப் பைந்துழாய் *
மாலையாலியில் கண்டுமகிழ்ந்துபோய் *
ஞாலமுன்னியைக்காண்டும் நாங்கூரிலே. (ங)

துளக்கமில்சுடரை * அவுணனுடல்
பிளக்குமைந்தனைப் பேரில்வணங்கிப்போய் *
அளப்பிலாரமுதை அமரர்க்கருள்
விளக்கினை * சென்று வெள்ளறைக்காண்டுமே. (ச)

சுடலையில் சுடுநீறணமர்ந்தது * ஓர்
நடலைதீர்த்தவனை நறையூர்க்கண்டு * என்
உடலையுள்புகுந்து உள்ளமுருக்கியுண் *
விடலையைச்சென்றுகாண்டும் மெய்யத்துள்ளே. (ரு)

வானை ஆரமுதந்தந்தவள்ளலை *
தேனைநீள்வயல் சேறையிற்கண்டுபோய் *
ஆனைவாட்டியருளும் அமரர்தம்
கோனை * யாம்குடந்தைச்சென்றுகாண்டுமே. (சு)

கூந்தலார்மகிழ் கோவலனாய் * வெண்ணெய்
மாந்தழுந்தையில் கண்டுமகிழ்ந்துபோய் *
பாந்தட்பாழியில் பள்ளிவிரும்பிய *
வேந்தனைச்சென்றுகாண்டும் வெஃகாவுளே. (எ)

↓↓ பத்தராவியைப் பான்மதியை * அணித்
தொத்தை மாலிருஞ்சோலைத்தொழுதுபோய் *
முத்தினைமணியை மணிமாணிக்க
வித்தினை * சென்று விண்ணகர்க்காண்டுமே. (அ)

கம்பமாகளிறு அஞ்சிக்கலங்க * ஓர்
கொம்புகொண்ட குரைகழற்கூத்தனை *
கொம்புலாம்பொழில் கோட்டியூர்க்கண்டுபோய் *
நம்பனைச்சென்றுகாண்டும் நாவாயுளே. (கூ)

↓↓ பெற்றம்[†] மாளியைப் பேரில்மணாளனை *
கற்றநூல் கலிகன்றியுரைசெய்த *
சொல்திறமிவை சொல்லவல்லதொண்டர்கட்கு *
அற்றமில்லை அண்டமவர்க்காட்சியே. (க0)

அடிவரவு:—ஒரு பொன்னை வேலை ஆனைக்கு மை சுடலையில் வான் கூந்தல் பத்தர் கம்பம் பெற்றம் இரக்கம

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## உ - ஆந் திருமொழி - இரக்கமின்றி.

இராமாவதாரத்தில் ஈடுபாடு. (க)

[தோல்வியுற்ற அரக்கர் அபயம்வேண்டிக் கூத்தாடுதல்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பியாகடைராகம் - அடதாளம்.)

↓↓ இரக்கமின்றியெங்கோன்செய்ததீமை
இம்மையேயெமக்கெய்திற்றுக்காணீர் *
பரக்கயாமின்றுரைத்தென் ? இராவணன்
பட்டனன் இனியாவர்க்குரைக்கோம் ? *

† 'மாளிகை' என்பது வ்யாக்யாநபாடம்.

குரக்குநாயகர்காள் ! இளங்கோவே !
கோலவல்விலிராமபிரானே ! *
அரக்கராடழைப்பாரில்லை நாங்கள்
அஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (க)

பத்துநீண்முடியுமவற்றிரட்டிப்
பாழித்தோளும்படைத்தவன்செல்வம் *
சித்தம்மங்கையர்பாலவைத்துக்கெட்டான்
செய்வதொன்றறியாவடியோங்கள் *
ஒத்ததோளிரண்டுமொருமுடியும்
ஒருவர்தந்திறத்தோமன்றிவாழ்ந்தோம *
அத்த ! எம்பெருமான் ! எம்மைக்கொல்லேல்
அஞ்சினோம்தடம்பொங்கத்தமபொங்கோ. (உ)

தண்டகாரணியம்புகுந்து அன்று
தையலைத்தகவிலியெங்கோமான் *
கொண்டுபோந்துகெட்டானெமக்கிங்கோர்
குற்றமில்லை சொல்லலைகுலவேந்தே ! *
பெண்டிராற்கெடுமிக்குடிதன்னை
பேசுகின்றதென் ? தாசரதீ ! * உன்
அண்டவாணருகப்பதேசெய்தாய்
அஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (ங)

எஞ்சலில்இலங்கைக்கிறை எங்கோன்றன்னை
முன்பணிந்து * எங்கள்கண்முகப்பே
நஞ்சுதானரக்கர்குடிக்கென்று
நங்கையைஅவன்தம்பியேசொன்னான் *
விஞ்சைவானவர்வேண்டிற்றேபட்டோம்
வேரிவார்பொழில்மாமயிலன்ன *
அஞ்சலோதியைக்கொண்டுநடமின்
அஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (ச)

செம்பொன்நீள்முடியெங்களிராவணன்
சீதையென்பதோர்தெய்வம்கொணர்ந்து *
வம்புலாங்கடிகாவிற்சிறையா
வைத்ததே குற்றமாயிற்றுக்காணீர் *

கும்பனோடுநிகும்பனும்பட்டான்
கூற்றம்மானிடமாய்வந்துதோன்றி *
அம்பினாலெம்மைக்கொன்றிடுகின்றது
அஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (௫)

ஓதமாகடலைக்கடந்தேறி
உயர்கொள்மாக்கடிகாவையிறுத்து *
காதல்மக்களும்சுற்றமும்கொன்று
கடியிலங்கைமலங்கவெரித்து *
தூதுவந்தகுரங்குக்கே உங்கள்
தோன்றல்தேவியைவிட்டுக்கொடாதே *
ஆதர்நின்றுபடுகின்றதந்தோ!
அஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (௬)

தாழமின்றிமுந்நீரையஞ்ஞான்று
தகைந்ததேகண்டு, வஞ்சிநுண்மருங்குல் *
மாழைமான்மடநோக்கியைவிட்டு
வாழகில்லாமதியில்மனத்தானை *
ஏழையையிலங்கைக்கிறைதன்னை
எங்களையொழியக்கொலையவனை *
சூழுமாநினை, மாமணிவண்ணா! *
சொல்லினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (௭)

மனங்கொண்டேறும்மண்டோதரிமுதலா
அங்கயற்கண்ணினார்களிருப்ப *
தனங்கொள்மென்முலைநோக்கமொழிந்து
தஞ்சமேசிலதாபதரென்று *
புனங்கொள்மென்மயிலைச்சிறைவைத்த
புன்மையாளன்நெஞ்சிற்புகவெய்த *
அனங்கனன்னதிண்தோளெம்மிராமற்கு
அஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (௮)

புரங்கள்மூன்றமோர்மாத்திரைப்போதில்
பொங்கெரிக்கிரைகண்டவனம்பின் *
சரங்களேகொடிதாயடுகின்ற
சாம்பவான்உடன்நிற்கத்தொழுதோம் *

இரங்குநீயெமக்கெந்தைபிரானே !
இலங்குவெங் † கதிரோன்சிறுவா ! *
குரங்குகட்கரசே ! எம்மைக்கொல்லேல்
கூறினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (௯)

↓↓ அங்குஅவ்வானவர்க்காகுலம்தீர
அணியிலங்கையழித்தவன்தன்னை *
பொங்குமாவலவன்கலிகன்றி
புகன்றபொங்கத்தங்கொண்டு * இவ்வுலகில்
எங்கும்பாடிநின்றாடுமின்தொண்டீர் !
இம்மையேயிடரில்லை * இறந்தால்
தங்குமூரண்டமேகண்டுகொண்மின்
சாற்றினோம்தடம்பொங்கத்தமபொங்கோ. (க0)

அடிவரவு.—இரக்கம் பத்து தண்டக எஞ்சல் செம்பொன் ஓதம் தாழும் மனம் புரங்கள் அங்கு ஏத்து.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



௩ - ஆந் திருமொழி - ஏத்துகின்றோம்.



(இராமாவதாரத்தில் ஈடுபாடு: இதுவுமது.) (உ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (கல்யாணிராகம் - திரிபுடை தாளம்.)

↓↓ ஏத்துகின்றோம்நாத்தழும்ப இராமன்திருநாமம் *
சோத்தநம்பீ ! சுக்கிரீவா ! உம்மைத்தொழுகின்றோம் *
வார்த்தைபேசீரெம்மை உங்கள்வானரம்கொல்லாமே *
கூத்தர்போலஆடுகின்றோம் குழமணிதூரமே. (க)

எம்பிரானே ! என்னையாள்வாய் ! என்றென்றலற்றாதே *
அம்பின்வாய்ப்பட்டாற்றகில்லாது இந்திரசித்தழிந்தான் *
நம்பிஅநுமா ! சுக்கிரீவா ! அங்கதனே ! நளனே ! *
கும்பகர்ணன்பட்டுப்போனான் குழமணிதூரமே. (உ)

ஞாலமாளுமுங்கள்கோமான் எங்களிராவணற்கு *
காலனாகிவந்தவா கண்டஞ்சிக் கருமுகில்போல் *
நீலன்வாழ்கசுடேணன்வாழ்க அங்கதன்வாழ்கவென்று *
கோலமாகஆடுகின்றோம் குழமணிதூரமே. (௩)

† 'கதிரோன்தன்சிறுவா' என்னும் பாடம் சந்தத்திற்குப் பொருந்தும்.

மணங்கள்நாறும்வார்குழலார் மாதர்களாதரத்தை *
புணர்ந்தசிந்தைப்புன்மையாளன் பொன்ற, வரிசிலையால் *
கணங்களுண்ணவாளியாண்ட காவலனுக்கிளையோன் *
குணங்கள்பாடிஆடுகின்றோம் குழமணிதூரமே. (௪)

வென்றிதந்தோம்மானம்வேண்டோம் தானமெமக்காக *
இன்றுதம்பிநெங்களவாணாள் எம்பெருமான்தமர்காள் ! *
நின்றுகாணீர்கண்களார நீரெம்மைக்கொல்லாதே *
குன்றுபோலஆடுகின்றோம் குழமணிதூரமே. (௫)

கல்லின்முந்நீர்மாற்றிவந்து காவல்கடந்து * இலங்கை
அல்லல்செய்தானுங்கள்கோமான் எமமையமர்க்களத்து *
வெல்லகில்லாதஞ்சினோஞ்சாண் வெங்கதிரோன்சிறுவா ! *
கொல்லவேண்டா ஆடுகின்றோம் குழமணிதூரமே. (௬)

மாற்றமாவதித்தனையே வம்மின்அரக்கருள்ளீர் ! *
சீற்றமநும்மேல்தீரவேண்டின் சேவகம்பேசாதே *
ஆற்றல்சான்றதொல்பிறப்பில் அநுமனைவாழ்கவென்று *
கூற்றமன்னார்காணஆடீர் குழமணிதூரமே. (௭)

கவளயானைபாய்புரவி தேரோடரக்கரெல்லாம்
துவள * வென்றவென்றியாளன்தன் தமர்கொல்லாமே *
தவளமாடநீடயோத்திக் காவலன்தன்சிறுவன் *
குவளைவண்ணன்காணஆடீர் குழமணிதூரமே. (௮)

ஏடொத்தேந்தும்நீளிலைவேல் எங்களிராவணனார்
ஓடிப்போனார் * நாங்களெய்த்தோம் உய்வதோர்காரணத்தால் *
சூடிப்போந்தோம்உங்கள்கோமானை தொடரேன்மின் *
கூடிக்கூடிஆடுகின்றோம் குழமணிதூரமே. (௯)

‡‡ வென்றதொல்சீர்த்தென்னிலங்கை வெஞ்சமத்து * அன்றரக்
குன்றமன்னாராடியுய்ந்த குழமணிதூரத்தை * [கர்
கன்றிநெய்நீர்நின்றவேற்கைக் கலியனொலிமாலை *
ஒன்றுமொன்றுமைந்துமூன்றும் பாடிநின்றாடுமினே. (௰)

அடிவரவு:—ஏத்துகின்றோம் எம்பிரானே ஞாலம் மணங்கள் வென்றி கல் - லின் மாற்றம் கவள ஏடு வென்ற சந்தம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ச - ஆந் திருமொழி - சந்தமலர்.

(கிருஷ்ணவதாரத்தில் ஈடுபாடு.) (க)

[கண்ணனை முலையுண்ண அழைத்தல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (புந்நாகவராளிராகம் - ரூபகதாளம்.)

↓↓ சந்தமலர்க்குழல்தாழத் தானுகந்தோடித்தனியே
வந்து * என்முலைத்தடந்தன்னைவாங்கி நின்வாயில்மடுத்து *
நந்தன்பெறப்பெற்றநம்பீ! நானுகந்துண்ணுமமுதே! *
எந்தைபெருமானே! உண்ணாய் என்னம்மம்சேமமுண்ணாயே. (க)

வங்கமறிகடல்வண்ணா! மாமுகிலேயொக்கும்நம்பீ! *
செங்கண்நெடியதிருவே! செங்கமலமபுரைவாயா! *
கொங்கைசுரந்திடவுன்னைக் கூவியுங்காணாதிருந்தேன் *
எங்கிருந்தாயர்களோடும் என்விளையாடுகின்றாயே? (உ)

திருவிற்பொலிந்தவெழிலார் ஆயர்தம்பிள்ளைகளோடு *
தெருவில்திளைக்கின்றநம்பீ! செய்கின்றதீமைகள்கண்டிட்டு *
உருகியென்கொங்கையின்தீம்பால் ஓட்டந்துபாய்ந்திடுகின்ற *
மருவிக்குடங்காலிருந்து வாய்முலையுண்ணநீவாராய். (ங)

மக்கள்பெறுதவம்போலும் வையத்துவாழும்மடவார் *
மக்கள்பிறர்கண்ணுக்கொக்கும் முதல்வா! மதக்களிறன்னாய்! *
செக்கரிளம்பிறைதன்னைவாங்கி நின்கையில்தருவன் *
ஒக்கலைமேலிருந்தம்மமுகந்து இனிதுண்ணநீவாராய். (ச)

மைத்தகருங்குஞ்சிமைந்தா! மாமருதூடுநடந்தாய்! *
வித்தகனே! விரையாதே வெண்ணெய்விழுங்கும்விகிர்தா! *
இத்தனைபோதன்றியென்தன் கொங்கைசுரந்திருக்கில்லா *
உத்தமனே! அம்மமுண்ணாய் உலகளந்தாய்! அம்மமுண்ணாய். (ரு)

பிள்ளைகள்செய்வனசெய்யாய் பேசிற்பெரிதும்வலியை *
கள்ளம்மனத்திலுடையை காணவேதீமைகள்செய்தி *
உள்ளமுருகியென்கொங்கை ஓட்டந்துபாய்ந்திடுகின்ற *
பள்ளிகுறிப்புச்செய்யாதே பாலமுதுண்ணநீவாராய். (சு)

தன்மகனாகவன்பேய்ச்சி தான்முலையுண்ணக்கொடுக்க *
வன்மகனாயவளாவிவாங்கி முலையுண்டநம்பீ! *
நன்மகளாய்மகளோடு நானிலமங்கைமணாளா! *
என்மகனே! அம்மமுண்ணாய் என்னம்மம்சேமமுண்ணாயே. (எ)

உந்தமடிகள்முனிவர் உன்னைநானென்கையிற்கோலால் *
கொந்திடமோதவும்கில்லேன் உங்கள்தமாநிரையெல்லாம் *
வந்துபுகுதரும்போது வானிடைத்தெய்வங்கள்காண *
அந்தியம்போதங்குநில்லேல் ஆழியங்கையனே! வாராய். (அ)

பெற்றத்தலைவனெங்கோமான் பேரருளாளன்மதலாய்! *
சுற்றக்குழாத்திளங்கோவே! தோன்றியதொல்புகழாளா! *
கற்றினந்தோறும்மறித்துக் கானம்திரிந்தகளிறே! *
எற்றுக்கென்னம்மமுண்ணுதே எம்பெருமான்! இருந்தாயே? (கூ)

⇂⇂ இம்மையிடர்கெடவேண்டி ஏந்தெழில்தோட்கலிகன்றி *
செம்மைப்பனுவல்நூல்கொண்டு செங்கணெடியவன்தன்னை *
அம்மமுண்ணென்றுரைக்கின்ற பாடலிவையைந்துமைந்தும் *
மெய்ம்மைமனத்துவைத்தேத்த விண்ணவராகலுமாமே. (க0)

அடிவரவு:—சந்தம் வங்கம் திருவில் மக்கள் மைத்த பிள்ளைகள் தன்மகன் உந்தம் பெற்றம் இம்மை பூங்கோதை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆந் திருமொழி - பூங்கோதை.



(கிருஷ்ணாவதாரத்தில் ஈடுபாடு.) (௨)

[கண்ணனைக் கைகொட்டிவிளையாடும்படி கூறுதல். சப்பாணிப்பருவம்.]

கலித்தாழிசை. (யமுநாகல்யாணிராகம் - ஆதிதாளம்.)

⇂⇂ பூங்கோதையாய்ச்சி கடைவெண்ணெய்புக்குண்ண *
ஆங்கவளார்த்துப்புடைக்கப் புடையுண்டு *
ஏங்கியிருந்து சிணுங்கிவிளையாடும் *
ஓங்கோதவண்ணனே! சப்பாணி ஒளிமணிவண்ணனே! சப்பாணி. (க)

தாயர்மனங்கள்தடிப்ப * தயிர்நெய்யுண்
டேயெம்பிராக்கள்! * இருநிலத்தெங்கள்தம்
ஆயரழக! † * அடிகள் அரவிந்த
வாயவனே! கொட்டாய்சப்பாணி ‡ மால்வண்ணனே! கொட்டாய்சப் [பாணி. (௨)

† 'அடிகளரவிந்தமாயவனே' என்பது வ்யாக்யாநபாடம்.
‡ 'மாலவனே' என்பதும் பாடம்.

தாமோருருட்டித் தயிர்நெய்விழுங்கிட்டு *
தாமோதவழ்வரென்று ஆய்ச்சியர்தாம்பினால் *
† தாமோதரக்கையால் ஆர்க்கத்தழும்பிருந்த *
தாமோதரா! கொட்டாய்சப்பாணி தாமரைக்கண்ணனே! சப்பாணி.
பெற்றார்தளைகழலப் பேர்ந்தங்கயலிடத்து *
உற்றாரொருவருமின்றி உலகினில் *
மற்றாருமஞ்சப்போய் வஞ்சப்பெண்நஞ்சுண்ட *
கற்றாயனே! கொட்டாய்சப்பாணி காரவண்ணனே! கொட்டாய்சப்பாணி (ச)
சோத்தெனநின்னைத் தொழுவன்வரந்தர *
பேய்ச்சிமுலையுண்டபிள்ளாய்! * பெரியன
ஆய்ச்சியர் அப்பம்தருவர் * அவர்க்காகச்
சாற்றியோராயிரமசப்பாணி தடங்கைகளாற்கொட்டாய்சப்பாணி. (ரு)
சேவலமன்று உன்வயிறு * வயிற்றுக்கு
‡ நான்வலவப்பம்தருவன் * கருவிளைப்
பூவலர்நீள்முடி நந்தன்தன்போரேறே! *
கோவலனே! கொட்டாய்சப்பாணி குடமாடீ! கொட்டாய்சப்பாணி.
புள்ளினைவாய்பிளந்து பூங்குருந்தம்சாய்த்து *
துள்ளிவிளையாடித் தூங்குறிவெண்ணெயை *
அள்ளியகையால் அடியேன்முலைநெருடும *
பிள்ளைப்பிரான்! கொட்டாய்சப்பாணி பேய்முலையுண்டானே! சப்பாணி. (௭)
யாயும்பிறரும் அறியாதயாமத்து *
மாயவலவைப்பெண் வந்துமுலைதர *
பேயென்றுஅவளைப் பிடித்துஉயிரையுண்ட *
வாயவனே! கொட்டாய்சப்பாணி மால்வண்ணனே! கொட்டாய்சப்பாணி. (அ)
கள்ளக்குழவியாய்க் காலாற்சகடத்தை *
தள்ளியுதைத்திட்டுத் தாயாய்வருவாளை *
மெள்ளத்தொடர்ந்து பிடித்தாருயிருண்ட *
வள்ளலே! கொட்டாய்சப்பாணி மாலவண்ணனே! கொட்டாய் சப்பாணி. (கூ)
‡‡ காரார்புயற்கைக் கலிகன்றிமங்கையர்கோன் *
போராளன்நெஞ்சில் பிரியாதிடங்கொண்ட
சீராளா! * செந்தாமரைக்கண்ணா! தண்துழாய்த்
தாராளா! * கொட்டாய்சப்பாணி தடமார்வா! கொட்டாய்சப்பாணி. (கo)

**அடிவரவு:**—பூங்கோதை தாயர் தாமோர் பெற்றார் சோத்தென சேவலம் புள்ளினை யாயும் கள்ளம் காரார் வங்கானும்.

**திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.**

---

† 'தாமோதிரக்கையால்' என்பதும், ‡ 'நானவலப்பம்' என்பதும் பாடபேதம்.

## கூ - ஆந் திருமொழி - எங்கானும்.

(ஸ்ரீக்ருஷ்ணவதாரத்தில் ஈடுபாடு.) (ந)

[மற்றையவதாரங்களின் மேன்மையோடு க்ருஷ்ணவதாரத்தின் ஸௌலப்யத்தை அனுபவித்தல்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம். (ஸாவேரிராகம் - அடதாளம்.)

↓↓ எங்கானுமீதொப்பதோர் மாயமுண்டே?
நரநாரணனாயுலகத்தறநூல் *
சிங்காமைவிரித்தவனெம்பெருமான்
அதுவன்றியும்செஞ்சுடரும்நிலனும் *
பொங்கார்கடலும்பொருப்புமநெருப்பும்நெருக்கிப்
புகப் பொன்மிடறத்தனைபோது *
அங்காந்தவன்காண்மின் இன்று ஆய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (க)

குன்றொன்றுமத்தாவரவமளவிக்
குரைமாகடலைக்கடைந்திட்டு * ஒருகால்
நின்றுண்டைகொண்டோட்டிவன்கூன்நிமிர
நினைந்தபெருமான், அதுவன்றியுமுன் *
நன்றுண்டதொல்சீர்மகரக்கடலேழ்
மலையேழுலகேழொழியாமைநம்பி *
அன்றுண்டவனகாண்மின் இன்றுஆய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (உ)

உளைந்திட்டெழுந்தமதுகைடவர்கள
உலப்பில்வலியாரவர்பால் * வயிரம்
விளைந்திட்டதென்றெண்ணிவிண்ணோர்பரவ
அவர்நாளொழித்தபெருமான்,முனநாள் *
வளைந்திட்டவில்லாளிவல்வாளெயிற்று
மலைபோலவுணனுடல் வள்ளுகிரால *
அளைந்திட்டவன்காண்மின் இன்றுஆய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (ந)

தளர்ந்திட்டிமையோர்சரண்தாவெனத
தான்சரணாய், முரணாயவனை * உகிரால்
பிளந்திட்டமரர்க்கருள்செய்துகந்த
பெருமான் திருமால், விரிநீருலகை *

வளர்ந்திட்டதொல்சீர்விறல்மாவலியை
மண்கொள்ளவஞ்சித்தொருமாண்குறளாய் *
அளந்திட்டவன்காண்மின் இன்று ஆய்ச்சியரால
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (௪)

நீண்டான்குறளாய்நெடுவானளவும்
அடியார்படுமாழ்துயராயவெல்லாம் *
தீண்டாமைநினைந்திமையோரளவும்
செலவைத்தபிரான், அதுவன்றியும்முன் *
வேண்டாமைநமன்தமரென்தமரை
வினவப்பெறுவாரலரென்று * உலகேழ்
ஆண்டானவன்காண்மின் இன்று ஆய்ச்சியரால
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (௫)

பழித்திட்டவின்பப்பயன்பற்றறுத்துப்
பணிந்தேத்தவல்லார் துயராயவெல்லாம் *
ஒழித்திட்டவரைத்தனக்காக்கவல்ல
பெருமான் திருமால், அதுவன்றியும்முன் *
தெழித்திட்டெழுந்தேயெதிர்நின்றமன்னன்
சினத்தோளவையாயிரமும் மழுவால் *
அழித்திட்டவன்காண்மின் இன்று ஆய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (௬)

படைத்திட்டதிவ்வையமுய்யமுனநாள
பணிந்தேத்தவல்லார் துயராயவெல்லாம் *
துடைத்திட்டவரைத்தனக்காக்கவென்னத்
தெளியாவரக்கர்திறலம்பாயவிய *
மிடைத்திட்டெழுந்தகுரங்கைப்படையா
விலங்கல்புகப்பாய்ச்சிவிம்ம * கடலை
அடைத்திட்டவன்காண்மின் இன்று ஆய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (௭)

நெறித்திட்டமென்கூழைநல்நேரிழையோடு
உடனாயவில்லென்னவல்லேயதனை *
இறுத்திட்டவளின்பமன்போடணைந்திட்டு
இளங்கொற்றவனாய், துளங்காதமுந்நீர் *

பறித்திட்டிலங்கைமலங்கவரக்கன்
செழுநீள்முடிதோளொடுதாள் துணிய *
அறுத்திட்டவன்காண்மின் இன்றுஆய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (அ)

சுரிந்திட்டசெங்கேழுளைப்பொங்கரிமாத்
தொலையப்பிரியாதுசென்றெய்தி * எய்தாது
இரிந்திட்டிடங்கொண்டடங்காததன்வாய்
இருகூறுசெய்தபெருமான், முனநாள் *
வரிந்திட்டவில்லால்மரமேழுமெய்து
மலைபோலுருவத்தொரிராக்கதிமூக்கு *
அரிந்திட்டவன்காணமின் இன்றுஆய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (கூ)

↓↓ நின்றார்முகப்புச்சிறிதும்நினையான்
வயிற்றைநிறைப்பானுறிப்பால்தயிர்நெய் *
அன்றாய்ச்சியர்வெண்ணெய்விழுங்கி உரலோடு
ஆப்புண்டிருந்தபெருமானடிமேல் *
நன்றாயதொல்சீர்வயலமங்கையர்கோன்
கலியனொலிசெய்தமிழ்மாலைவல்லார் *
என்றுமெய்தார்இடர் இன்பமெய்தி
இமையோர்க்குமப்பாற்செலவெய்துவாரே. (கo)

அடிவரவு:—எங்கானும் குன்று உளைந்து தளர்ந்து நீண்டான் பழித்திட்ட படை நெறி சுரி நின்றார் மானம்

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



எ - ஆந் திருமொழி - மானமுடைத்து.



(க்ருஷ்ணாவதாரத்தில் ஈடுபாடு.) (ஈ)

[கண்ணன்செய்தியைக்குறித்துஆய்ச்சியரும்யசோதையும் முறையிடுதல்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (கேதாரகௌளராகம் - அடதாளம்.)

↓↓ மானமுடைத்துங்களாயர்குலம் அதனால்பிறர்மக்கள்தம்மை *
ஊனமுடையனசெய்யப்பெறாயென்று இரப்பனுரப்பகில்லேன் *
நானுமுரைத்திலேன்நந்தன்பணித்திலன நங்கைகாள்!நானென்செய்கேன்? *
தானுமோர்கன்னியுங்கீழையகத்துத் தயிர்கடைகின்றான்போலும். (க)

காலையெழுந்துகடைந்தவிம்மோர்விற்கப்போகின்றேன் கண்டேடே
மாலைநறுங்குஞ்சிநந்தன்மகனல்லால் மற்றுவந்தாருமில்லை *
மேலையகத்துநங்காய்! வந்துகாண்மின்கள் வெண்ணெயேயன்று * இருந்த
பாலும்பதின்குடங்கண்டிலேன் பாவியேனென்செய்கேன்? என்செய்கேனோ?

தெள்ளியவாய்ச்சிறியான்நங்கைகாள்! உறிமேலைத்தடாநிறைந்த *
வெள்ளிமலையிருந்தாலொத்தவெண்ணெயை வாரிவிழுங்கியிட்டு
கள்வனுறங்குகின்றான்வந்துகாண்மின்கள் கையெல்லாம்நெய் *வயிறு
பிள்ளைபரமன்று, இவ்வேழுலகுங்கொள்ளும் பேதையேனென்செய்கேனோ?

மைந்நம்புவேற்கணல்லாள் முன்னம்பெற்றவளைவண்ணநன்மாமேனி*
தன்னம்பிநம்பியுமிங்குவளர்ந்தது அவனிவைசெய்தறியான் *
பொய்ந்நம்பிபுள்ளுவன்கள்வம்பொதியறைபோகின்றவாதவழ்ந்திட்டு*
இந்நம்பிநம்பியாஆய்ச்சியாக்குய்வில்லை என்செய்கேன்? என்செய்கேனோ?

தந்தைபுகுந்திலன்நானிங்கிருந்திலேன் தோழிமாராருமில்லை *
சந்தமலர்க்குழலாள் தனியேவிளையாடுமிடங்குறுகி *
பந்துபறித்துத்துகில்பற்றிக்கீறிப் படிறன்படிறுசெய்யும் *
நந்தன்மதலைக்கிங்கென்கடவோம்? நங்காய்! என்செய்கேன்? என்செய்கேனோ?

மண்மகள்கேள்வன்மலர்மங்கைநாயகன் நந்தன்பெற்றமதலை *
அண்ணலிலைக்குழலூதிநஞ்சேரிக்கே † அல்லில்தான்வந்தபின்னை *
கண்மலர்சோர்ந்துமுலைவந்துவிம்மிக் கமலச்செவ்வாய்வெளுப்ப *
என்மகள்வண்ணமிருக்கின்றவாநங்காய்! என்செய்கேன்? என்செய்கேனோ?

ஆயிரங்கண்ணுடையிந்திரனுருக்கென்று ஆயர்விழவெடுப்ப *
பாசனநல்லனபண்டிகளால புகப்பெய்தவதனையெல்லாம் *
போயிருந்தங்கொருபூதவடிவுகொண்டு உன்மகனின்றுநங்காய்! *
மாயனதனையெல்லாம் முற்றவாரிவளைத்துண்டிருந்தான்போலும். (எ)

தோய்த்ததயிரும்நறுநெய்யும்பாலும் ஓரோர்குடம்துற்றிடுமென்று *
ஆய்ச்சியர்கூடியழைக்கவும் நானிதற்கெள்கியிவனைநங்காய்! *
சோத்தம்பிரான்! இவைசெய்யப்பெறுயென்று இரப்பனுரப்பகில்லேன்*
பேய்ச்சிமுலையுண்டபின்னை இப்பிள்ளையைப்பேசுவதஞ்சுவனே. (அ)

ஈடும்வலியுமுடைய இந்நம்பிபிறந்த வெழுதிங்களில் *
ஏடலர்கண்ணியினனைவளர்த்தி யமுனைநீராடப்போனேன் *
சேடன்திருமறுமார்பன்கிடந்து திருவடியால் * மலைபோல்
ஓடுஞ்சகடத்தைச்சாடியபின்னை உரப்புவதஞ்சுவனே. (க)

† ‘அல்லுத்தான்’ என்பதும் பாடம்.

அஞ்சுவன்சொல்லியழைத்திடநங்கைகாள் ! ஆயிரநாழிநெய்யை *
பஞ்சியமெல்லடிப்பிள்ளைகளுண்கின்ற பாகந்தான்வையார்களே *
கஞ்சன்கடியன்கறவெட்டுநாளில் என்கைவலத்தாதுமில்லை *
நெஞ்சத்திருப்பனசெய்துவைத்தாய்நம்பீ ! என்செய்கேன்? என்செய்கேனோ?

† அங்ஙனந்தீமைகள்செய்வர்களோ ? நம்பீ ! ஆயர்மடமக்களை *
பங்கயநீர்குடைந்தாடுகின்றார்கள் பின்னேசென்றொளித்திருந்து *
அங்கவர்பூந்துகில்வாரிக்கொண்டிட்டு அரவேரிடையாரிரப்ப *
மங்கைநல்லீர் ! வந்துகொண்மினென்று மரமேறியிருந்தாய்போலும்.

அச்சந்தினைத்தனையில்லையிப்பிள்ளைக்கு ஆண்மையுஞ்சேவகமும் *
உச்சியில்முத்திவளர்த்தெடுத்தேனுக்கு உரைத்திலன்தானின்றுபோய் *
பச்சிலைப்பூங்கடம்பேறி விசைகொண்டுபாய்ந்துபுக்கு * ஆயிரவாய்
நச்சழற்பொய்கையில்நாகத்தினோடு பிணங்கிநீவந்தாய்போலும். (கஉ)

தம்பரமல்லனவாண்மைகளைத் தனியேநின்றுதாம்செய்வரோ ? *
எம்பெருமான்! உன்னைப்பெற்றவயிறுடையேன் இனியானென்செய்கேன்? *
அம்பரமேழுமதிருமிடிகுரல் அங்கனற்செங்கணுடை *
வம்பவிழ்கானத்துமால்விடையோடு பிணங்கிநீவந்தாய்போலும். (கங)

⸸⸸ அன்னநடைமடவாய்ச்சிவயிறடித்தஞ்ச அருவரைபோல் *
மன்னுகருங்களிற்றாருயிர்வவ்விய மைந்தனை, மாகடல்சூழ் *
கன்னிநன்மாமதிள்மங்கையர்காவலன் காமருசீர்க்கலிகன்றி *
இன்னிசைமாலைகளீரேழும்வல்லவர்க்கு ஏதுமிடரில்லையே. (கச)

அடிவரவு:—மானம் காலை தெள்ளியவை தந்தை மணமகள் ஆயிரம தோய்த்த ஈடும் அஞ்சுவன் அங்ஙனம் அச்சம் தம்பரம் அன்னம் காதில்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## அ - ஆந் திருமொழி - காதிற்கடிப்பு.



(கிருஷ்ணாவதாரத்தில் ஈடுபாடு.) (ரு)

[ஆய்ச்சியொருத்தி கண்ணனோடு ஊடுதல்.]

கலிவிருத்தம். (உசேனிராகம் - ரூபகதாளம்.)

⸸⸸ காதிற்கடிப்பிட்டுக் கலிங்கமுடுத்து *
தாதுநல்லதண்ணந்துழாய்கொடணிந்து *
போதுமறுத்துப் புறமேவந்துநின்றீர் *
ஏதுக்கிதுவென் ? இதுவென் ? இதுவென்னோ ? (க)

---

† 'அங்ஙனும்' எனவும் ஓதுவர்.

துவராடையுடுத்து ஒருசெண்டுசிலுப்பி *
கவராகமுடித்துக் கலிக்கச்சுக்கட்டி *
சுவரார்கதவின்புறமே வந்துநின்றீர் *
இவரார்? இதுவென்? இதுவென்? இதுவென்னோ? (உ)

கருளக்கொடியொன்றுடையீர்! தனிப்பாகீர்! *
உருளச்சகடமது † உறக்கில்நிமிர்த்தீர்! *
மருளைக்கொடுபாடிவந்து இல்லம்புகுந்தீர் *
இருளத்திதுவென்? இதுவென்? இதுவென்னோ? (ஙூ)

நாமம்பலவுமுடை நாரணநம்பீ! *
தாமத்துளபம் மிகநாறிடுகின்றீர் *
காமனெனப்பாடிவந்து இல்லம்புகுந்தீர் *
யாமத்திதுவென்? இதுவென்? இதுவென்னோ? (ச)

சுற்றுங்குழல்தாழச் சுரிகையணைத்து *
மற்றும்பல மாமணிபொன்கொடணிந்து *
முற்றம்புகுந்து முறுவல்செய்துநின்றீர் *
எற்றுக்கிதுவென்? இதுவென்? இதுவென்னோ? (ரு)

ஆனாயரும் ஆநிரையும்அங்கொழிய *
கூனாயதோர் கொற்றவில்லொன்றுகையேந்தி *
போனாரிருந்தாரையும் பார்த்துப்புகுந்தீர் *
ஏனோர்கள்முன்னென்? இதுவென்? இதுவென்னோ? (சு)

மல்லேபொருததிரள்தோள் மணவாளீர்! *
அல்லேயறிந்தோம் நும்மனத்தின்கருத்தை *
சொல்லாதொழியீர் சொன்னபோதினால்வாரீர் *
எல்லே! இதுவென்? இதுவென்? இதுவென்னோ? (எ)

புக்காடரவம் பிடித்தாட்டும்புனிதீர்! *
இக்காலங்கள் யாமுமக்கொன்றுமல்லோம் *
தக்கார்பலர் தேவிமார்சாலவுடையீர் *
எக்கே! இதுவென்? இதுவென்? இதுவென்னோ? (அ)

ஆடியசைந்து ஆய்மடவாரொடுநீபோய் *
கூடிக்குரவைபிணை கோமளப்பிள்ளாய்! *
தேடித்திருமாமகள் மண்மகள்நிற்ப *
ஏடி! இதுவென்? இதுவென்? இதுவென்னோ? (கூ)

† 'உறுக்கி' என்றும் பாடம்.

↓↓ அல்லிக்கமலக்கண்ணனை அங்கோராய்ச்சி *
எல்லிப்பொழுதூடிய வூடல்திறத்தை *
கல்லின்மலிதோள் கலியன்சொன்னமாலை *
சொல்லித்துதிப்பாரவர் துக்கமிலரே. (கo)

அடிவரவு:—காதில் தவர் கருளக்கொடி நாமம் சுற்றும் ஆனையர் மல்லே புக்கு அல்லி புள்ளுரு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## கூ - ஆந் திருமொழி - புள்ளுருவாகி.



(க்ருஷ்ணாவதாரத்தில் ஈடுபாடு.) (சூ) (பழமொழி.)

[தலைவியினாற்றாமைக்குத் தாய் இரங்கித் தலைவனைவேண்டும் பாசுரம்.]

எழுசீராசிரியவிருத்தம். (செஞ்சுருட்டிராகம் - திரிபுடைதாளம்.)

↓↓ புள்ளுருவாகிநள்ளிருள்வந்த பூதனைமாள * இலங்கை
ஒள்ளெரிமண்டியுண்ணப்பணித்த வூக்கமதனைநினைந்தோ ? *
கள்ளவிழ்கோதைகாதலும் எங்கள்காரிகைமாதர்கருத்தும் *
பிள்ளைதன்கையிற்கிண்ணமேயொக்கப் பேசுவதெந்தைபிரானே ! (க)

மன்றில்மலிந்துகூத்துவந்தாடி மால்விடையேழுமடர்த்து * ஆயர்
அன்றுநடுங்கவானிரைகாத்த ஆண்மைகொலோஅறியேன்நான் ? *
நின்றபிரானே ! நீள்கடல்வண்ணா ! நீயிவள்தன்னைநின்கோயில் *
முன்றிலெழுந்தமுருங்கையில்தேனா முன்கைவளைகவர்ந்தாயே. (உ)

ஆர்மலியாழிசங்கொடுபற்றி ஆற்றலையாற்றல்மிகுத்து *
கார்முகில்வண்ணா ! கஞ்சனைமுன்னம் கடந்தநின்கடுந்திறல்தானோ? *
ஏரிளமாதைநித்திலத்தொத்தை நெடுங்கடலமுதனையாளை *
ஆரெழில்வண்ணா ! அங்கையில்வட்டாம் இவளெனக்கருதுகின்றாயே.

மல்கியதோளும்மானுரியதளும் உடையவர்தமக்கும்ஓர்பாகம் *
நல்கியநலமோ? நரகனைத்தொலைத்த கரதலத்தமைதியின்கருத்தோ ? *
அல்லியங்கோதையணிநிறங்கொண்டுவந்து முன்னேநின்றுபோகாய்*
சொல்லியென்? நம்பி! இவளைநீ உங்கள்தொண்டர்கைத்தண்டென்றவாறே.

செருவழியாதமன்னர்கள்மாளத் தேர்வலங்கொண்டவர்செல்லும் *
அருவழிவானமதர்படக்கண்ட ஆண்மைகொலோஅறியேன்நான்? *
திருமொழியெங்கள்தேமலர்க்கோதை சீர்மையைநினைந்திலையந்தோ!*
பெருவழிநாவற்கனியினுமெளியள் இவளெனப்பேசுகின்றாயே. (ரு)

அரக்கியராகம்புல்லெனவில்லால் அணிமதிளிலங்கையார்கோனை *
செருக்கழித்தமரர்பணியமுன்னின்ற சேவகமோ? செய்ததின்று *
முருக்கிதழ்வாய்ச்சிமுன்கைவெண்சங்கங்கொண்டு முன்னேநின்றுபோகாய் *
எருக்கிலைக்காகவெறிமழுவோச்சல் என்செய்வது? எந்தைபிரானே! ()

ஆழியந்திண்டேரரசர்வந்திறைஞ்ச அலைகடலுலகமுன்னாண்ட *
பாழியந்தோளோராயிரம்வீழப் படைமழுப்பற்றியவலியோ? *
மாழைமென்னோக்கிமணிநிறங்கொண்டுவந்துமுன்னேநின்றுபோகாய்*
கோழிவெண்முட்டைக்கென்செய்வது? எந்தாய்!குறுந்தடிநெடுங்கடல்வண்ணா!

பொருந்தலன்ஆகம் [illegible] நற வள்ளுகிராற்பிளந்து * அன்று
பெருந்தகைக்கிரங்கிவாலியைமுனிந்த பெருமைகொலோ?செய்ததின்று*
பெருந்தடங்கண்ணிசுரும்புறுகோதைபெருமையைநினைநதிலைபேசில்*
கருங்கடல்வண்ணா! கவுள்கொண்டநீராம் இவளெனக்கருதுகின்றாயே.

நீரழல்வானாய்நெடுநிலங்காலாய் நின்றநின்நீர்மையைநினைந்தோ ? *
சீர்கெழுகோதையென்னலதிலளென்று அன்னதோர்தேற்றன்மைதானோ? *
பார்கெழுபவ்வத்தாரமுதனைய பாவையைப்பாவஞ்செய்தேனுக்கு *
ஆரழலோம்புமந்தணன்தோட்டமாக நின்மனத்துவைத்தாயே. (கூ)

↓↓ வேட்டதைக்கருதாதடியிணைவணங்கி மெய்ம்மைநின்றெம்பெருமானை *
வாள்திறல்தானைமங்கையர்தலைவன் மானவேற்கலியன்வாயொலிகள்*
தோட்டலர்பைந்தார்ச்சுடர்முடியானைபபழமொழியாற்பணிந்துரைத்த*
பாட்டிவைபாடப்பத்திமைபெருகிச் சித்தமுந்திருவொடுமிருமே. (கo)

அடிவரவு:—புள் மன்றில் ஆர் மல்கிய செரு அரக்கியர் ஆழி பொருந்தலன் நீர் வேட்டத்தை திருததாய்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## கo - ஆந் திருமொழி - திருத்தாய்.



தலைமகனைப்பிரிந்த தலைமகள் ஆற்றாது கூறிய பாசுரம்.

வெண்டுறை. (பாசுரங்கள் - அதிகாவம்.)

↓↓ திருத்தாய் செம்போத்தே! *
திருமாமகள்தன் கணவன் *
மருத்தார்தொல்புகழ் மாதவனை
திருத்தாய் செம்போத்தே! [வர*

கரையாய் காக்கைப்பிள்ளாய்! *
கருமாமுகில்போல் நிறத்தன் *
உரையார்தொல்புகழுத்தமனைவர*
கரையாய் காக்கைப்பிள்ளாய்! (உ)

கூவாய் பூங்குயிலே! *
குளிர்மாரி தடுத்துகந்த * [வர *
மாவாய்கீண்ட மணிவண்ணனை-
கூவாய் பூங்குயிலே! (ங)

கொட்டாய் பல்லிக்குட்டி! *
குடமாடி உலகளந்த *
மட்டார்பூங்குழல் மாதவனைவர*
கொட்டாய் பல்லிக்குட்டி! (ச)

↓↓ சொல்லாய் பைங்கிளியே! *
சுடராழி வலனுயர்த்த * [வர *
மல்லார்தோள் வடவேங்கடவனை
சொல்லாய் பைங்கிளியே! (ரு)

கோழி கூவென்னுமால் *
தோழி! நானென்செய்கேன்? *
ஆழிவண்ணர் வரும்பொழுதாயி
கோழி கூவென்னுமால். [ற்று*

காமற்கு என்கடவேன்? *
கருமாமுகில்வண்ணற்கல்லால் *
பூமேலங்கணை கோத்துப்புகுர்
காமற்கு என்கடவேன்? [தெய்ய*

இங்கே போதுங்கொலோ? *
இனவேல நெடுங்கண்களிப்ப *
கொங்கார்சோலைக் குடந்தைக்கிடந்த
இங்கேபோதுங்கொலோ?[மால் *

இன்னாரென்றறியேன் *
அன்னே! ஆழியொடும் * [கனை*
பொன்னார்சார்ங்க முடையவடி
இன்னாரென்றறியேன். (கூ)

↓↓ தொண்டீர்! பாடுமினோ *
சுரும்பார்பொழில்மங்கையர்கோன்*
ஒண்தார்வேல்கலியனொலிமாலைகள்*
தொண்டீர்! பாடுமினோ. (க0)

அடிவரவு:—திருத்தாய் கரையாய் கூவாய் கொட்டாய் சொல்லாய் கோழி காமற்கு இங்கே இன்னார் தொண்டீர் குன்றமொன்று.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## பதினோராம்பத்து.

### க - ஆம் திருமொழி - குன்றமொன்று.



[பிரிவாற்றாத தலைவி இரங்கிக்கூறும் பாசுரம்.]

கலிவிருத்தம் (காண்டாரகம் - ஆதிதாளம்.)

↓↓ குன்றமொன்றெடுத்தேந்தி * மாமழை
அன்றுகாத்தவம்மான் * அரக்கரை
வென்றவில்லியார் வீரமேகொலோ? *
தென்றல்வந்து தீவீசுமென்செய்கேன்? (க)

காரும்வார்பனிக் கடலும், அன்னவன் *
தாருமார்வமும் கண்டதண்டமோ? *
சோருமாமுகில் துளியினூடுவந்து *
ஈரவாடைதான் ஈருமென்னையே. (உ)

சங்குமாமையும் தளருமேனிமேல் *
திங்கள்வெங்கதிர் சீறுமென்செய்கேன் ?
பொங்குவெண்திரைப் புணரிவண்ணனார் *
கொங்கலர்ந்ததார் கூவுமென்னையே. (ரு)

அங்கோராய்க்குலத்துள் வளர்ந்துசென்று *
அங்கோர் தாயுருவாகிவந்தவள் *
கொங்கைநஞ்சுண்ட கோயின்மைகொலோ ?
திங்கள்வெங்கதிர் சீறுகின்றதே. (௬)

அங்கோராளரியாய் அவுணனை *
பங்கமா இருகூறுசெய்தவன் *
மங்குல்மாமதி வாங்கவேகொலோ ? *
பொங்குமாகடல் புலம்புகின்றதே. (௭)

சென்றுவார்சிலைவளைத்து இலங்கையை *
வென்றவில்லியார் வீரமேகொலோ ?
முன்றிற்பெண்ணைமேல் முளரிக்கூட்டகத்து *
அன்றிலின்குரல் அடருமென்னையே. (௮)

பூவைவண்ணனார் புள்ளின்மேல்வர *
மேவிநின்றுநான் கண்டதண்டமோ ? *
வீவிலங்கனை வில்லியம்புகோத்து *
ஆவியே இலக்காகவெய்வதே ! (௯)

மால்இனந்துழாய் வருமென்னெஞ்சகம் *
மாலின்அந்துழாய் வந்தென்னுள்புக *
கோலவாடையும் கொண்டுவந்தது * ஓர்
ஆலிவந்ததால் அரிதுகாவலே ! (௧௦)

கெண்டையொண்கணும் துயிலும் * என்னிறம்
பண்டுபண்டுபோலொக்கும் * மிக்கசீர்த்
தொண்டரிட்ட பூந்துளவின்வாசமே *
வண்டுகொண்டுவந்து ஊதுமாகிலே. (௧௧)

↓↓ அன்றுபாரதத்து ஐவர்தூதனாய் *
சென்றமாயனைச் செங்கண்மாலினை *
மன்றிலார்புகழ் மங்கைவாட்கலி
கன்றி * சொல்வல்லார்க்கு அல்லலில்லையே. (௧௦)

அடிவரவு:—குன்றம் காரும் சங்கு அங்கோராய் அங்கோராளரி சென்று பூவை மாலினம் கெண்டை அன்று குன்றமெடுத்து.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

## உ - ஆம் திருமொழி - குன்றமெடுத்து.

[தலைவி பிரிவாற்றது வருந்திக் கூறும் பாசுரம்.]

கலிநிலைத்துறை. (கௌளிபந்துராகம் - ஆதிதாளம்.)

↓↓ குன்றமெடுத்துமழைதடுத்து இளையாரொடும் *
மன்றிற்குரவைபிணைந்தமால் என்னைமால்செய்தான் *
முன்றில்தனிநின்றபெண்ணைமேல கிடந்தீர்கின்ற *
அன்றிலின்கூட்டைப் பிரிக்ககிற்பவரார்கொலோ? (க)

பூங்குருந்தொசித்துஆனைகாய்ந்து அரிமாச்செகுத்து *
ஆங்குவேழத்தின்கொம்புகொண்டு வன்பேய்முலை
வாங்கியுண்ட * அவ்வாயன்நிற்க இவ்வாயன்வாய் *
ஏங்குவேய்ங்குழல் என்னோடாடுமிளமையே. (உ)

மல்லொடுகஞ்சனும் துஞ்சவென்றமணிவண்ணன் *
அல்லிமலர்த்தண் துழாய் நினைந்திருந்தேனையே *
எல்லியில்மாருதம் வந்தடும், அதுவன்றியும் *
கொல்லைவல்லேற்றின்மணியும் கோயின்மைசெய்யுமே. (ங)

பொருந்துமாமரம் ஏழும்எய்தபுனிதனார் *
திருந்துசேவடி என்மனத்துநினைதொறும் *
கருந்தண்மாகடல் கங்குலார்க்கும், அதுவன்றியும் *
வருந்தவாடைவரும் இதற்கினியென்செய்கேன்? (ச)

அன்னைமுனிவதும் அன்றிலின்குரலீர்வதும் *
மன்னுமறிகடலார்ப்பதும் வளைசோர்வதும் *
பொன்னங்கலையல்குல் அன்னமென்னடைப்பூங்குழல் *
பின்னைமணாளர் திறத்தமாயினபின்னையே. (ரு)

ஆழியுஞ்சங்குமுடைய நங்களடிகள்தாம் *
பாழிமையானகனவில் நம்மைப்பகர்வித்தார் *
தோழியும்நானுமொழிய வையம்துயின்றது *
கோழியுங்கூகின்றதில்லைக் கூரிருளாயிற்றே! (சு)

காமன்தனக்குமுறையல்லேன் கடல்வண்ணனார் *
மாமணவாளர் எனக்குத்தானும்மகன்சொல்லில் *
யாமங்கள்தோறெரிவீசும் என்னிளங்கொங்கைகள் *
மாமணிவண்ணர் திறத்தவாய்வளர்கின்றவே. (எ)

மஞ்சுறுமாலிருஞ்சோலை நின்றமணாளனார் *
நெஞ்சம்நிறைகொண்டுபோயினார் நினைகின்றிலர் *
வெஞ்சுடர்போய்விடியாமல் எவ்விடம்புக்கதோ? *
நஞ்சுடலந்துயின்றால் நமக்கினிநல்லதே. (அ)

காமன்கணைக்கோரிலக்கமாய் நலத்தின்மிகு *
பூமருகோல நம்பெண்மைசிந்தித்திராதுபோய் *
தூமலர்நீர்கொடு தோழி! நாம்தொழுதேத்தினால் *
கார்முகில்வண்ணரைக் கண்களாற்காணலாங்கொலோ? (௯)

↓↓ வென்றிவிடையுடன் ஏழடர்த்தவடிகளை *
மன்றில்மலிபுகழ் மங்கைமன்கலிகன்றிசொல் *
ஒன்றுநின்றவொன்பதும் உரைப்பவர்தங்கள்மேல் *
என்றும்நில்லாவினை ஒன்றுஞ்சொல்லிலுலகிலே. (க0)

அடிவரவு:—குன்றம் பூ மல்லொடு பொருந்து அன்னை ஆழி காமன்தனக்கு மஞ்சுறு காமன்கணைக்கு வென்றி மன்னிலங்கு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



௩ - ஆந் † திருமொழி - மன்னிலங்கு.



[தலைவி இரங்கிக்கூறிய பாசுரம்; அறத்தொடுநிற்றல்.]

தரவுகொச்சகக்கலிப்பா. (ஸ்ரீராகம் - ரூபகதாளம்.)

↓↓ மன்னிலங்குபாரதத்துத் தேரூர்ந்து * மாவலியைப்
பொன்னிலங்குதிண்விலங்கில்வைத்து, பொருகடல்சூழ் *
தென்னிலங்கையீடழித்த தேவர்க்குஇதுகாணீர் *
என்னிலங்குசங்கோடு எழில்தோற்றிருந்தேனே. (க)

இருந்தானென்னுள்ளத்து இறைவன் * கறைசேர்
பருந்தாட்களிற்றுக்கு அருள்செய்த * செங்கண்
பெருந்தோள்நெடுமாலைப் பேர்பாடியாட *
வருந்தாதென்கொங்கை ஒளிமன்னும்அன்னே! (உ)

அன்னே! இவரையறிவன் * மறைநான்கும்
முன்னேயுரைத்த முனிவரிவர்வந்து *
பொன்னேய்வளைகவர்ந்து போகார்மனம்புகுந்து *
என்னே? இவரெண்ணுமெண்ணம்அறியோமே. (௩)

† இத்திருமொழி அந்தாதித்தொடைகொண்டு வந்தது.

அறியோமேயென்று உரைக்கலாமே? எமக்கு *
வெறியார்பொழில்சூழ் வியன்குடந்தைமேவி *
சிறியானோர்பிள்ளையாய் மெள்ளநடந்திட்டு *
உறியார்நறுவெண்ணெய் உண்டுகந்தார்தம்மையே. (௪)

தம்மையேநாளும் வணங்கித்தொழுவார்க்கு *
தம்மையேயொக்க அருள்செய்வராதலால் *
தம்மையேநாளும் வணங்கித்தொழுதிறைஞ்சி *
தம்மையேபற்றா மனத்துஎன்றும்வைத்தோமே. (௫)

வைத்தாரடியார் மனத்தினில்வைத்து * இன்பம்
உற்றார்ஒளிவிசும்பில் ஓரடிவைத்து * ஓரடிக்கும்
எய்த்தாதுமண்ணென்று இமையோர் † தொழுதிறைஞ்சி *
கைத்தாமரைகுவிக்கும் கண்ணனென்கண்ணனையே. (௬)

கண்ணன்மனத்துள்ளேநிற்கவும் * கைவளைகள்
என்னோகழன்ற? இவையென்னமாயங்கள்? *
பெண்ணானோம் பெண்மையோம்நிற்க * அவன்மேய
அண்ணல்மலையும் அரங்கமும்பாடோமே. (௭)

பாடோமே? எந்தைபெருமானை * பாடிநின்று
ஆடோமே? ஆயிரம்பேரானை * பேர்நினைந்து
சூடோமே? சூடுந்துழாயலங்கல்சூடி * நாம்
கூடோமே? கூடக்குறிப்பாகில் நன்னெஞ்சே! (௮)

நன்னெஞ்சே! நம்பெருமான் நாளும்இனிதமரும் *
அன்னஞ்சேர்கானல் அணியாலிகைதொழுது *
முன்னஞ்சேர்வல்வினைகள்போக முகில்வண்ணன் *
பொன்னஞ்சேர்சேவடிமேல் போதணியப்பெற்றோமே. (௯)

பெற்றாரார் ஆயிரம்பேரானை * பேர்பாடப்
பெற்றான் கலியனொலிசெய்தமிழ்மாலை *
கற்றீர்காள்! முற்றுலகாள்வர் * இவைகேட்க
லுற்றார்க்கு உறுதுயரில்லையுலகத்தே. (௧௦)

அடிவரவு:—மன்னிலங்கு இருந்தான் அன்னே அறியோம் தம்மை வைத்தார் கண்ணன் பாடோமே நன்னெஞ்சே பெற்றாரார் திலை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'தொழுதேத்தி' என்றும் பாடம்.

## ச - ஆந் திருமொழி - நிலையிடம்.

[அவதாரங்களின் மகிமை.]

எண்சீராசிரியவிருத்தம். (அடாணாராகம் - திரிபுடைதாளம்.)

‡‡ நிலையிடமெங்குமின்றி, நெடுவெள்ளம்உம்பர்
வளநாடுமூட, இமையோர் *
தலையிடமற்றெமக்கொர்சரணில்லையென்ன
அரணாவனென்னுமருளால் *
அலைகடல்நீர்குழம்பவகடாடவோடி
அகல்வானுரிஞ்ச * முதுகில்
மலைகளைமீதுகொண்டுவருமீனைமாலை
மறவாதிறைஞ்சுஎன்மனனே! (க)

செருமிகுவாளெயிற்றஅரவொன்றுசுற்றித்
திசைமண்ணும்விண்ணுமுடனே *
வெருவரவெள்ளைவெள்ளமுழுதுங்குழம்ப
இமையோர்கள்நின்றுகடைய *
பருவரையொன்றுநின்றுமுதுகிற்பரந்து
சுழலக்கிடந்துதுயிலும் *
அருவரையன்னதன்மையடலாமையான
திருமால்நமக்கொரரணே. (உ)

தீதறுதிங்கள்பொங்குசுடரும்பரும்பர்
உலகேழினோடுமுடனே *
மாதிரமண்சுமந்தவடகுன்றும் நின்ற
மலையாறுமேழுகடலும் *
பாதமர்சூழ்குளம்பினகமண்டலத்தின்
ஒருபால்ஒடுங்க, வளர்சேர் *
ஆதிமுனேனமாகியரணாயமூர்த்தி
யது நம்மையாளுமரசே. (௩)

தளையவிழ்கோதைமாலையிருபால்தயங்க
எரிகான்றிரண்டுதறுகண் *
அளவெழவெம்மைமிக்கஅரியாகி
அன்றுபரியோன்சினங்களவிழ *

வளையுகிராளிமொய்ம்பின்மறவோனதாகம்
மதியாதுசென்றுஒருகிரால் *
பிளவெழவிட்டகுட்டமது, வையமூடு
பெருநீரின்மும்மைபெரிதே. (௪)

வெந்திறல்வாணன்வேள்வியிடமெய்தி
அங்கொர்குறளாகிமெய்ம்மையுணர *
செங்தொழில்வேதநாவின்முனியாகி
வையமடிமூன்றிரந்துபெறினும் *
மந்தரமீதுபோகிமதிநின்றிறைஞ்ச
மலரோன்வணங்க, வளர்சேர் *
அந்தரமேழினூடுசெலவுய்த்தபாத
மது நம்மையாளுமரசே. (௫)

இருநிலமன்னர்தம்மையிருநாலுமெட்டும்
ஒருநாலுமொன்றுமுடனே *
செருநுதலூடுபோகியவராவிமங்க
மழுவாளில்வென்றதிறலோன் *
பெருநிலமங்கைமன்னர்மலர்மங்கைநாதர்
புலமங்கைகேள்வர்புகழ்சேர் *
பெருநிலமுண்டுமிழ்ந்தபெருவாயராகி
அவர்நம்மையாள்வர்பெரிதே. (௬)

இலைமலிபள்ளியெய்தியிதுமாயமென்ன
இனமாயமான்பின், எழில்சேர் *
அலைமலிவேற்கணாளையகல்விப்பதற்கு
ஒருருவாயமானையமையா *
கொலைமலியெய்துவித்தகொடியோனிலங்கை
பொடியாக, வென்றியமருள் *
சிலைமலிசெஞ்சரங்கள்செலவுய்த்த நங்கள்
திருமால்நமக்கொரரணே. (௭)

முன்னுலகங்களேழுமிருள்மண்டியுண்ண
முதலோடுவீடுமறியாது *
என்னிது ? வந்ததென்ன இமையோர்திசைப்ப
எழில்வேதமின்றிமறைய *

† பின்னும்வானவர்க்கும்முனிவர்க்கும்நல்கி
இருள்தீர்ந்திவ்வையம்மகிழ *
அன்னமதாயிருந்தங்கறநூலுரைத்த
அதுநம்மையாளுமரசே. (௯)

துணைநிலைமற்றெமக்கொருளதென்றிராது
தொழுமின்கள்தொண்டர்! தொலைய *
உணமுலைமுன்கொடுத்தவுரவோளதாவி
உகவுண்டுவெண்ணெய்மருவி *
பணைமுலையாயர்மாதருரலோடுகட்ட
அதனோடுமோடி, அடல்சேர் *
இணைமருதிற்றுவீழநடைகற்றதெற்றல்
வினைபற்றறுக்கும்விதியே. (க)

↓↓ கொலைகெழுசெம்முகத்தகளிறொன்றுகொன்று
கொடியோனிலங்கைபொடியா *
சிலைகெழுசெஞ்சரங்கள்செலவுய்த்த நங்கள்
திருமாலை, வேலைபுடைசூழ் *
கலிகெழுமாடவீதிவயல்மங்கைமன்னு
கலிகன்றிசொன்னபனுவல் *
ஒலிகெழுபாடல்பாடியுழல்கின்றதொண்டரவர்
ஆள்வரும்பருலகே. (க0)

அடிவரவு:—நிலை செரு தீதறு தளை வெந்திறல் இருநிலம் இலைமலி முன் துணை கொலை மான்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆந் திருமொழி - மானமரும்.

[இரண்டுதோழியர் எம்பெருமானது ஸௌலப்யத்தையும் பாத்வத்தையும் எதிரேதிராகக் கூறுதல்.]

தாவுகோச்சகக்கலிப்பா. (கண்ணராகம் - ஆதிதாளம்.)

↓↓ மானமருமென்னோக்கி வைதேவியின் துணையா *
கானமரும்கல்லதர்போய்க் காடுறைந்தான்காணேடீ! *
கானமரும்கல்லதர்போய்க் காடுறைந்தபொன்னடிக்கள் *
வானவர்தம் சென்னிமலர்கண்டாய்சாழலே! (க)

† 'பின்னுய', 'பின்னையும்' என்பன பாடபேதங்கள்.

தந்தைதனைகழலத் தோன்றிப்போய் * ஆய்ப்பாடி
நந்தன்குலமதலையாய் வளர்ந்தான்காணேடீ! *
நந்தன்குலமதலையாய்வளர்ந்தான் நான்முகற்குத்
தந்தைகாண் * எந்தைபெருமான்காண் சாழலே! (௨)

ஆழ்கடல்சூழ்வையகத்தார் ஏசப்போய் * ஆய்ப்பாடித்
தாழ்குழலார்வைத்த தயிருண்டான்காணேடீ! *
தாழ்குழலார்வைத்த தயிருண்டபொன்வயிறு * இவ்
வேழுலகுமுண்டும் இடமுடைத்தால்சாழலே! (௩)

அறியாதார்க்கு ஆனாயனாகிப்போய் * ஆய்ப்பாடி
உறியார்நறுவெண்ணெய் உண்டுகந்தான்காணேடீ! *
உறியார்நறுவெண்ணெய் உண்டுகந்தபொன்வயிற்றுக்கு *
எறிநீருலகனைத்தும் எய்தாதால்சாழலே! (௪)

வண்ணக்கருங்குழல் ஆய்ச்சியால்மொத்துண்டு *
கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டான்காணேடீ! *
கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டானாகிலும் *
எண்ணற்கரியன் இமையோர்க்கும்சாழலே! (௫)

கன்றப்பறைகறங்கக் கண்டவர்தம்கண்களிப்ப *
மன்றில்மரக்கால்கூத்து ஆடினான்காணேடீ! *
மன்றில்மரக்கால்கூத்து ஆடினானாகிலும் *
என்றுமரியன் இமையோர்க்கும்சாழலே! (௬)

கோதைவேல்ஐவர்க்காய் மண்ணகலம்கூறிடுவான் *
தூதனாய், மன்னவனால் சொல்லுண்டான்காணேடீ! *
தூதனாய், மன்னவனால் சொல்லுண்டானாகிலும் *
ஓதநீர்வையகம் முன்னுண்டுமிழ்ந்தான்சாழலே! (௭)

பார்மன்னர்மங்கப் படைதொட்டுவெஞ்சமத்து *
தேர்மன்னர்க்காய் அன்றுதேரூர்ந்தான்காணேடீ! *
தேர்மன்னர்க்காய் அன்றுதேரூர்ந்தானாகிலும் *
தார்மன்னர்தங்கள் தலைமேலான்சாழலே! (௮)

கண்டாரிரங்கக் கழியக்குறளுருவாய் *
வண்தாரான்வேள்வியில் மண்ணிரந்தான்காணேடீ! *
வண்தாரான்வேள்வியில் மண்ணிரந்தானாகிலும் *
விண்டேழுலகுக்கும் மிக்கான்காண்சாழலே! (௯)

↓↓ கள்ளத்தால்மாவலியை மூவடிமண்கொண்டளந்தான் *
வெள்ளத்தான்வேங்கடத்தான் என்பரால்காணேடீ! *
வெள்ளத்தான்வேங்கடத்தானேலும் * கலிகன்றி
உள்ளத்தினுள்ளே உளன்கண்டாய்சாழலே! (க௦)

அடிவரவு:—மானமரும் தந்தை ஆழ்கடல் அறியாதார்க்கு வண்ணக் கன்ற
கோதை பார்மன்னர் கண்டார் கள்ளத்தால் மைந்நின்ற.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## க - ஆந் திருமொழி - மைந்நின்ற.



[ப்ரளயாபத்தில் பாதுகாத்த எம்பெருமானையே ஆச்ரயிக்கும்படி
உலகத்தார்க்கு உபதேசித்தல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (நீலாம்புரிராகம் - அடதாளம்.)

↓↓ மைந்நின்றகருங்கடல்வாயுலகின்றி வானவரும்யாமுமெல்லாம் *
நெய்ந்நின்றசக்கரத்தன் திருவயிற்றில் நெடுங்காலம்கிடந்ததோரீர் *
எந்நன்றிசெய்தாரா ஏதிலோர்தெய்வத்தையேத்துகின்றீர் ? *
செய்ந்நன்றிகுன்றேன்மின் தொண்டர்காள்! அண்டனையேயேத்தீர்களே. (க)

நில்லாதபெருவெள்ளம் நெடுவிசும்பின்மீதோடிநிமிர்ந்தகாலம் *
மல்லாண்டதடக்கையால் பகிரண்டமகப்படுத்தகாலத்து * அன்று
எல்லாருமறியாரோ? எம்பெருமானுண்டுமிழ்ந்தஎச்சில்தேவர் *
அல்லாதார்தாமுளரே ? அவனருளேயுலகாவதறியீர்களே ? (உ)

நெற்றிமேற்கண்ணானும் நிறைமொழிவாய்நான்முகனும் * நீண்டநால்வாய்
ஒற்றைக்கைவெண்பகட்டிலொருவனையும் உள்ளிட்டவமரரோடும் *
வெற்றிப்போர்க்கடலரையன்விழுங்காமல் தான்விழுங்கியுய்யக்கொண்ட *
கொற்றப்போராழியான் குணம்பரவாச்சிறுதொண்டர்கொடியவாறே! (௩)

பனிப்பரவைத்திரைததும்பப் பாரெல்லாம்நெடுங்கடலேயானகாலம்*
இனிக்களைகணிவர்க்கில்லையென்று உலகமேழினையுமூழில்வாங்கி *
முனித்தலைவன்,முழங்கொளிசேர்திருவயிற்றில்வைத்தும்மையுய்யக்கொண்ட*
கனிக்களவத்திருவுருவத்தொருவனையே கழல்தொழுமாகல்லீர்களே.

பாராரும்காணாமே பரவைமாநெடுங்கடலேயானகாலம் *
ஆராலுமவனுடையதிருவயிற்றில் நெடுங்காலம்கிடந்தது * உள்ளத்
தோராதவுணர்விலீர் ! உணருதிரேல், உலகளந்தவும்பர்கோமான் *
பேராளன்பேரான பேர்களாயிரங்களுமேபேசீர்களே. (௫)

பேயிருக்குநெடுவெள்ளம் பெருவிசும்பின்மீதோடிப்பெருகுகாலம் *
தாயிருக்கும்வண்ணமே உம்மைத்தன்வயிற்றிருத்தியுய்யக்கொண்டான் *
போயிருக்க, மற்றிங்கோர்புதுத்தெய்வம் கொண்டாடும்தொண்டீர்! * பெற்
தாயிருக்கமணைவெந்நீராட்டுதிரோ? மாட்டாததகவற்றீரே. (

மண்ணும்விண்ணும் வானவரும்தானவரும்மற்றுமெல்லாம் *
உண்ணுதபெருவெள்ளம் உண்ணுமல்தான்விழுங்கியுய்யக்கொண்ட
கண்ணாளன்கண்ணமங்கைநகராளன் கழல்சூடி * அவனையுள்ளத்து
எண்ணுதமானிடத்தை எண்ணுதபோதெல்லாமினியவாறே. (

மறங்கிளர்ந்துகருங்கடல்நீர் உரந்துரந்துபரந்தேறியண்டத்தப்பால் *
புறங்கிளர்ந்தகாலத்துப் பொன்னுலகமேழினையுமூழில்வாங்கி *
அறங்கிளர்ந்ததிருவயிற்றின் அகம்படியில்வைத்தும்மையுய்யக்கொண்ட *
நிறங்கிளர்ந்தகருஞ்சோதிநெடுந்தகையை நினையாதார்நீசர்தாமே. (

அண்டத்தின்முகடழுந்த அலைமுந்நீர்த்திரைததும்பஆ! ஆ! வென்று
தொண்டர்க்குமமரர்க்கும் முனிவர்க்கும்தானருளி * உலகமேழும்
உண்டொத்ததிருவயிற்றின் அகம்படியில்வைத்தும்மையுய்யக்கொண்ட *
கொண்டற்கைமணிவண்ணன் தண்குடந்தைநகர்பாடியாடீர்களே. (

↓↓தேவரையுமசுரரையும் திசைகளையும்கடல்களையும்மற்றும்முற்றும்
யாவரையுமொழியாமே எம்பெருமானுண்டுமிழ்ந்ததறிந்துசொன்ன
காவளரும்பொழில்மங்கைக் கலிகன்றியொலிமாலைகற்றுவல்லார் *
பூவளரும்திருமகளாலருள்பெற்றுப் பொன்னுலகிற்பொலிவர்தாமே.

அடிவரவு:—மை நில்லாத நெற்றி பனி பாராரும பேய் மண் மறம் அண்ட
த்தின் தேவரை நீள்நாகம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## எ - ஆந் திருமொழி - நீள்நாகம்.



['எம்பெருமான்திறத்தில் உதவாத அவயவங்கள் பயனற்றன' என்றல்.]

தரவுகொச்சகக்கலிப்பா. (வராளிராகம் - ரூபகதாளம்.)

↓↓ நீள்நாகம்சுற்றி நெடுவரைநட்டு * ஆழ்கடலைப்
பேணான்கடைந்து அமுதம்கொண்டுகந்தபெம்மானை *
பூணாரமார்வனைப் புள்ளூரும்பொன்மலையை *
காணாதார்கண் என்றும் கண்ணல்லகண்டாமே. (

நீள்வான்குறளுருவாய் நின்றிரந்துமாவலிமண் *
தாளாலளவிட்ட தக்கணைக்குமிக்கானை *
தோளாதமாமணியைத் தொண்டர்க்கினியானை *
கேளாச்செவிகள் செவியல்லகேட்டாமே. (உ)

தூயானைத் தூயமறையானை * தென்னாலி
மேயானை மேவாளுயிருண்டுஅமுதுண்ட
வாயானை * மாலைவணங்கி அவன்பெருமை
பேசாதார் * பேச்சுஎன்றும் பேச்சல்லகேட்டாமே. (ங)

கூடாவிரணியனைக் கூருகிரால்மார்விடந்த *
ஓடாவடலரியை உம்பரார்கோமானை *
தோடார்நறுந்துழாய் மார்வனை, ஆர்வத்தால் *
பாடாதார்பாட்டுஎன்றும் பாட்டல்லகேட்டாமே. (௪)

மையார்கடலும் மணிவரையும்மாமுகிலும் *
கொய்யார்குவளையும் காயாவும்போன்றுஇருண்ட
மெய்யானை * மெய்யமலையானைச் சங்கேந்தும்
கையானை * கைதொழாக்கையல்ல கண்டாமே. (௫)

கள்ளார்துழாயும் கணவலரும்கூவிளையும் *
முள்ளார்முளரியும் ஆம்பலும்முன்கண்டக்கால் *
புள்ளாரயோரேனமாய்ப் புக்கிடந்தான்பொன்னடிக்கென்று *
உள்ளாதாருள்ளத்தை உள்ளமாக்கொள்ளோமே. (௬)

கனையார்கடலும் கருவிளையும்காயாவும்
அனையானை * அன்பினொலார்வத்தால் * என்றும
சுனையார் மலரிட்டுத் தொண்டராய்நின்று
நினையாதார் * நெஞ்சுஎன்றும் நெஞ்சல்லகண்டாமே. (எ)

வெறியார்கருங்கூந்தல் ஆய்ச்சியர்வைத்த *
உறியார்நறுவெண்ணெய் தானுகந்துஉண்ட
சிறியானை * செங்கணெடியானைச் சிந்தித்
தறியாதார் * என்றும் அறியாதார்கண்டாமே. (அ)

↓↓ தேனொடுவண்டாலும் திருமாலிருஞ்சோலை *
தானிடமாக்கொண்டான் தடமலர்க்கண்ணிக்காய் *
ஆன்விடையேழன்றடர்த்தாற்கு ஆளானாரல்லாதார் *
மானிடவரல்லரென்று என்மனத்தேவைத்தேனே. (௯)

↓↓ மெய்ந்நின்றபாவ மகல * திருமாலைக்
கைந்நின்றவாழியான் சூழும்கழல்சூடி *
கைந்நின்றவேற்கைக் கலியனொலிமாலை *
ஐயொன்றுமைந்தும் இவைபாடியாடுமினே. (௧௦)

அடிவரவு:—நீள்நாகம் நீள்வான் தூயான் கூடா மையார் கள்ளார் கனை வெறி தேனொடு மெய் மாற்றம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



அ - ஆம் திருமொழி - மாற்றமுள.



['தேஹஸம்பந்தத்தை அறுத்துத் தந்தருளவேண்டும்' என்று எம்பெருமானைப் பிரார்த்தித்தல்.]

கலிவிருத்தம். (ப.நசீராகம் - அடதாளம்.)

↓↓ மாற்றமுள ஆகிலும்சொல்லுவன் * மக்கள்
தோற்றக்குழி தோற்றுவிப்பாய்கொல்? என்றுஇன்னம் †
ஆற்றங்கரைவாழ்மரம்போல அஞ்சுகின்றேன் *
நாற்றச்சுவை ஊறொலியாகியநம்பீ! (௧)

சீற்றமுள ஆகிலும்செப்புவன் * மக்கள்
தோற்றக்குழி தோற்றுவிப்பாய்கொலென்றஞ்சி *
காற்றத்திடைப்பட்ட கலவர்மனம்போல் *
ஆற்றதுளங்காநிற்பன் ஆழிவலவா! (௨)

தூங்கார்பிறவிக்கள் இன்னம்புகப்பெய்து *
வாங்காயென்றுசிந்தித்து நானதற்கஞ்சி *
பாம்போடொருகூரையிலே பயின்றாற்போல் *
தாங்காதுள்ளம்தள்ளும் என்தாமரைக்கண்ணா! (௩)

உருவார்பிறவிக்கள் இன்னம்புகப்பெய்து *
திரிவாயென்றுசிந்தித்தி என்றதற்கஞ்சி *
இருபாடெரிகொள்ளியினுள் எறும்பேபோல் *
உருகாநிற்கும் என்னுள்ளம்ஊழிமுதல்வா! (௪)

கொள்ளக்குறையாத இடும்பைக்குழியில் *
தள்ளிப்புகப்பெய்திகொல் ? என்றுஅதற்குஅஞ்சி *
வெள்ளத்திடைப்பட்ட நரியினம்போலே *
உள்ளம்துளங்காநிற்பன் ஊழிமுதல்வா! (௫)

படைநின்ற பைந்தாமரையோடு * அணிநீலம்
மடைநின்றலரும் வயலாலிமணாளா! *
இடையனெறிந்தமரமே ஒத்திராமே *
அடையஅருளாய் எனக்குஉன்தனருளே. (சு)

↓↓ வேம்பின்புழு வேம்பன்றியுண்ணாது * அடியேன்
நான்பின்னும் உன்சேவடியன்றிநயவேன் *
தேம்பலிளந்திங்கள் சிறைவிடுத்து * ஐவாய்ப
பாம்பினணைப் பள்ளிகொண்டாய்பரஞ்சோதீ! (எ)

↓↓ அணியார்பொழில்சூழ் அரங்கநகரப்பா! *
துணியேனினி நின்னருளல்லதெனக்கு *
மணியே! மணிமாணிக்கமே! மதுசூதா! *
பணியாய்எனக்குஉய்யும்வகை பரஞ்சோதீ! (அ)

↓↓ நந்தாநரகத்து அழுந்தாவகை * நாளும்
எந்தாய்! தொண்டரானவர்க்கு இன்னருள்செய்வாய்! *
சந்தோகா! தலைவனே! தாமரைக்கண்ணா! *
அந்தோ! அடியேற்கு அருளாய்உன்னருளே. (கூ)

↓↓ குன்றமெடுத்து ஆநிரைகாத்தவன்தன்னை *
† மன்றில்புகழ் மங்கைமன்கலிகன்றிசொல *
ஒன்றுநின்றவொன்பதும் வல்லவர்தம்மேல் *
என்றும்வினையாயின சாரகில்லாவே. (கo)

அடிவரவு:—மாற்றப் சீற்றம் தூங்கா உருவார் கொள்ள படை வேம்பின் அணியார நந்தா குன்றம் நிதியினை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

பெரியதிருமொழி ஸம்பூர்ணம்.



---

† 'மன்றில்மலிபுகழ்' என்றும் பாடம் வழங்குகின்றது.

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# திருக்குறுந்தாண்டகம்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தோடிராகம் - ரூபகதாளம்.)

↓↓ நிதியினைப்பவளத்தூணை நெறிமையால்நினையவல்லார் *
கதியினைக்கஞ்சன்மாளக் கண்டுமுன் அண்டமாளும் *
மதியினைமாலைவாழ்த்தி வணங்கியென்மனத்துவந்த *
விதியினைக்கண்டுகொண்ட தொண்டனேன்விடுகிலேனே. (௧)

காற்றினைப்புனலைத்தீயைக் கடிமதிளிலங்கைசெற்ற
ஏற்றினை * இமயம்மேய எழில்மணித்திரளை * இன்ப
வாற்றினையமுதந்தன்னை அவுணனாருயிரையுண்ட
கூற்றினை * குணங்கொண்டுஉள்ளம்! கூறுநீகூறுமாறே. (௨)

பாயிரும்பரவைதன்னுள் பருவரைதிரித்து * வானோர்க்
காயிருந்தமுதங்கொண்ட அப்பனையெம்பிரானை *
வேயிருஞ்சோலைசூழ்ந்து விரிகதிரிரியநின்ற *
மாயிருஞ்சோலைமேய மைந்தனைவணங்கினேனே. (௩)

கேட்கயானுற்றதுண்டு கேழலாயுலகங்கொண்ட *
பூக்கெழுவண்ணனாரைப் போதரக்கனவிற்கண்டு *
வாக்கினால்கருமந்தன்னால் மனத்தினால்சிரத்தைதன்னால் *
வேட்கைமீதூரவாங்கி விழுங்கினேற்குஇனியவாறே. (௪)

இரும்பனன்றுண்டநீர்போல் எம்பெருமானுக்கு * என்தன்
அரும்பெறலன்புபுக்கிட்டு அடிமைபூண்டுய்ந்துபோனேன் *
வரும்புயல்வண்ணனாரை மருவியென்மனத்துவைத்து *
கரும்பினின்சாறுபோலப் பருகினேற்குஇனியவாறே. (௫)

மூவரில்முதல்வனாய ஒருவனை, உலகங்கொண்ட *
கோவினைக்குடந்தைமேய குருமணித்திரளை * இன்பப்
பாவினைப்பச்சைத்தேனைப் பைம்பொன்னையமரர்சென்னிப்
பூவினை * புகழுந்தொண்டர் என்சொல்லிப்புகழ்வர்தாமே? (௬)

இம்மையைமறுமைதன்னை எமக்குவீடாகிநின்ற *
மெய்ம்மையைவிரிந்தசோலை வியன்திருவரங்கம்மேய *
செம்மையைக்கருமைதன்னைத் திருமலையொருமையானை *
தன்மையைநினைவார் என்தன் தலைமிசைமன்னுவாரே. (எ)

வானிடைப்புயலைமாலை வரையிடைப்பிரசமீன்ற *
தேனிடைக்கரும்பின்சாற்றைத் திருவினைமருவிவாழார் *
மானிடப்பிறவியந்தோ! மதிக்கிலர்கொள்க * தந்தம்
ஊனிடைக்குரம்பைவாழ்க்கைக்கு உறுதியேவேண்டினாரே. (அ)

உள்ளமோவொன்றில்நில்லாது ஓசையிலெரிநின்றுண்ணும் *
கொள்ளிமேலெறும்புபோலக் குழையுமாலென்தனுள்ளம் *
தெள்ளியீர்! தேவர்க்கெல்லாம் தேவராயுலகங்கொண்ட *
ஒள்ளியீர்! உம்மையல்லால் எழுமையும்துணையிலோமே. (கூ)

சித்தமும்செவ்வைநில்லாது என்செய்கேன்தீவினையேன்? *
பத்திமைக்கன்புடையேனாவதே? பணியாயெந்தாய்! *
முத்தொளிமரகதமே! முழங்கொளிமுகில்வண்ணா! * என்
அத்த! நின்னடிமையல்லால் யாதுமொன்றறிகிலேனே. (க0)

தொண்டெல்லாம்பரவிநின்னைத் தொழுதடிபணியுமாறு
கண்டு * தான்கவலைதீர்ப்பான் ஆவதே? பணியாயெந்தாய்! *
அண்டமாயெண்திசைக்கும் ஆதியாய்! நீதியான *
பண்டமாம்பரமசோதி! நின்னையேபரவுவேனே. (கக)

ஆவியையரங்கமாலை அழுக்குடம்பெச்சில்வாயால *
தூய்மையில்தொண்டனேன்நான் சொல்லினேன்தொல்லைநாமம் *
பாவியேன்பிழைத்தவாறென்று அஞ்சினேற்கு அஞ்சலென்று *
காவிபோல்வண்ணர்வந்து என்கண்ணுளேதோன்றினாரே. (கஉ)

இரும்பனன்றுண்டநீரும் போதரும்கொள்க * என்தன்
அரும்பிணிபாவமெல்லாம் அகன்றனஎன்னைவிட்டு *
சுரும்பமர்சோலைசூழ்ந்த அரங்கமாகோயில்கொண்ட *
கரும்பினைக்கண்டுகொண்டு என்கண்ணிணைகளிக்குமாறே! (கரு)

காவியைவென்றகண்ணார் கலவியேகருதி * நாளும்
பாவியேனாகவெண்ணி அதனுள்ளேபழுத்தொழிந்தேன் *
தூவிசேரன்னம்மன்னும் சூழ்புனற்குடந்தையானை *
பாவியேன்பாவியாது பாவியேனாயினேனே. (கச)

நம்மாழ்வார் அருளிச்செய்த

யஜுர்வேதஸாரமான

# † திருவாசிரியம்.



## தனியன்.

(அருளாளப்பெருமாளெம்பெருமானார் அருளிச்செய்தது.)

கலிவிருத்தம்.

காசினியோர்தாம்வாழக் கலியுகத்தேவந்துதித்து *
ஆசிரியப்பாவதனால் அருமறைநூல்விரித்தானை *
தேசிகனைப்பராங்குசனைத் திகழ்வகுளத்தாரானை *
மாசடையாமனத்துவைத்து மறவாமல்வாழ்த்துதுமே.



ஆசிரியப்பா. (தேசியராகம் - ஆதிதாளம்.)

‡‡ செக்கர்மாமுகிலுடுத்துமிக்கசெஞ்சுடர்ப்
பரிதிசூடி * அஞ்சுடர்மதியம்பூண்டு *
பலசுடர்புனைந்தபவளச்செவ்வாய் *
திகழ்பசுஞ்சோதிமரதகக்குன்றம் *
கடலோன்கைம்மிசைக்கண்வளர்வதுபோல் *
பீதகவாடைமுடிபூண்முதலா *
‡ மேதகுபல்கலனணிந்து * சோதி
வாயவுங்கண்ணவுஞ்சிவப்ப * மீதிட்டுப்
பச்சைமேனிமிகப்பகைப்ப *
நச்சுவினைக்கவர்தலையரவினமளியேறி *
எறிகடல்நடுவுளறிதுயிலமர்ந்து *
சிவனயனிந்திரனிவர்முதலனைத்தோர் *
தெய்வக்குழாங்கள்கைதொழக்கிடந்த *
தாமரையுந்தித்தனிப்பெருநாயக! *
மூவுலகளந்தசேவடியோயே! (க)

உலகுபடைத்துண்டவெந்தை * அறைகழல்
சுடர்ப்பூந்தாமரைசூடுதற்கு * அவாவுஆ
ருயிருருகியுக்க * நேரியகாத
லன்பிலின்பீன்தேறல் * அமுத

---

† இத்திருவாசிரியம் அந்தாதித்தொடையாய்வந்தது.

‡ 'மெய்தகு' என்றும் பாடம்.

வெள்ளத்தானும்சிறப்புவிட்டு * ஒருபொருட்கு
அசைவோரசைக * திருவொடுமருவிய
இயற்கை * மாயாப்பெருவிறலுலகம்
மூன்றினொடுநல்வீடுபெறினும் *
கொள்வதெண்ணுமோதெள்ளியோர்குறிப்பே? (உ)

குறிப்பில்கொண்டுநெறிப்பட * உலகம்
மூன்றுடன்வணங்குதோன்றுபுகழ், ஆணை *
மெய்பெறநடாயதெய்வம்மூவரில்
முதல்வனாகி * சுடர்விளங்ககலத்து *
வரைபுரைதிரை † பொரபெருவரை ‡ வெருவர *
உருமுரலொலிமலிநளிர்கடல்படவர
வரசுடல்தடவரைசுழற்றிய * தனிமாத்
தெய்வத்தடியவர்க்குஇனிநாமாளாகவே
இசையுங்கொல்? * ஊழிதோறூழியோவாதே. (௩)

ஊழிதோறூழியோவாது * வாழிய
வென்றுயாம்தொழஇசையுங்கொல்? *
யாவகையுலகமும்யாவருமில்லா *
மேல்வரும்பெரும்பாழ்க்காலத்து * இரும்பொருட்
கெல்லாம்அரும்பெறல்தனிவித்து * ஒருதா
னாகித்தெய்வநான்முகக்கொழுமுளை
யீன்று * முக்கணீசனொடுதேவுபலநுதலி *
மூவுலகம்விளைத்தஉந்தி *
மாயக்கடவுள்மாமுதலடியே. (௪)

மாமுதலடிப்போதொன்றுகவிழ்த்தலர்த்தி *
மண்முழுதுமகப்படுத்து * ஒண்சுடரடிப்போது
ஒன்றுவிண்செலீஇ * நான்முகப்புத்தேள்
நாடுவியந்துவப்ப * வானவர்முறைமுறை
வழிபடநெறீஇ * தாமரைக்காடு
மலர்க்கண்ணொடுகனிவாயுடையது
மாய் * இருநாயிறுஆயிரம்மலர்ந்தன்ன *
கற்பகக்காவுபற்பலவன்ன *
முடிதோளாயிரந்தழைத்த *
நெடியோய்க் $ கல்லது அடியதோவுலகே? (௫)

---

† 'பொரு' என்று வழங்குவர். ‡ 'வெருவுற' என்றும் பாடம்.
$ 'அல்லதுமடியதோ' என்பதும் பாடம்

ஓஓ ! உலகினதியல்வே ! * ஈன்றோளிருக்க
மணைநீராட்டி * படைத்திடந்துண்டுமிழ்ந்
தளந்து * தேர்ந்துலகளிக்கும்முதற்பெருங்
கடவுள்நிற்ப * புடைப்பலதானறி
தெய்வம்பேணுதல் * தனாது
புல்லறிவாண்மைபொருந்தக்காட்டி *
கொல்வனமுதலா அல்லனமுயலும் *
இனையசெய்கைஇன்புதுன்பளி *
தொல்மாமாயப்பிறவியுள்நீங்கா *
பல்மாமாயத்தழுந்துமாநளிர்ந்தே. (௬)

↓↓ நளிர்மதிச்சடையனும்நான்முகக்கடவுளும் *
தளிரொளியிமையவர்தலைவனும்முதலா *
யாவகையுலகமும்யாவருமகப்பட *
நிலம்நீர்தீகால்சுடரிருவிசும்பும் *
மலர்சுடர்பிறவும்சிறிதுடன்மயங்க *
ஒருபொருள்புறப்பாடின்றிமுழுவதும்
அகப்படக்கரந்து * ஓராலிலைச்சேர்ந்தஎம்
பெருமாமாயனையல்லது *
ஒருமாதெய்வம்மற்றுடையமோயாமே ? (௭)

அடிவரவு :—செக்கர் உலகு குறிப்பு ஊழி மாமுதல் ஓஓஉலகு நளிர் முயற்றி.

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.



நம்மாழ்வார் அருளிச்செய்த

அதர்வணவேதஸாரமான

# பெரியதிருவந்தாதி.



## தனியன்.

(எம்பெருமானார் அருளிச்செய்தது.)

நேரிசைவெண்பா.

முந்துற்றநெஞ்சே ! முயற்றிதரித்துரைத்து *
வந்தித்து † வாயாரவாழ்த்தியே *—சந்த
முருகூருஞ்சோலைசூழ் மொய்பூம்பொருநல் *
குருகூரன்மாறன்பேர்கூறு.



(செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.)

↓↓ முயற்றிசுமந்தெழுந்து முந்துற்றநெஞ்சே ! *
இயற்றுவாயெம்மொடுநீகூடி *—நயப்புடைய
நாவீன்தொடைக்கிளவியுள் பொதிவோம் * நற்பூவைப்
பூவீன்றவண்ணன்புகழ். (க)

புகழ்வோம்பழிப்போம் புகழோம்பழியோம் *
இகழ்வோம்மதிப்போம் மதியோம்—இகழோம் * மற்று
எங்கள்மால் ! செங்கண்மால் ! சீறல்நீ தீவினையோம் *
எங்கள்மால்கண்டாய்இவை. (உ)

இவையன்றேநல்ல இவையன்றேதீய *
இவையென்றிவையறிவனேலும் * —இவையெல்லாம்
என்னாலடைப்புநீக்கொண்ணாது இறையவனே ! *
என்னாற்செயற்பாலதென் ? (௩)

என்னின்மிகுபுகழார்யாவரே ? * பின்னையும்மற்
றெண்ணில் மிகுபுகழேன்யானல்லால் *—என்ன
கருஞ்சோதிக் கண்ணன், கடல்புரையும் * சீலப்
பெருஞ்சோதிக்குளென்னெஞ்சாள்பெற்று. (௪)

† 'வாயாரவாழ்த்தி' என்ற பாடம் வெண்டளைக்குச் சேராது.

பெற்றதாய்நீயே பிறப்பித்ததந்தைநீ *
மற்றையாராவாரும்நீபேசில் * —எற்றேயோ !
மாய ! மாமாயவளை மாயமுலைவாய்வைத்த *
நீயம்மா ! காட்டும்நெறி. (ரு)

நெறிகாட்டி நீக்குதியோ ? * நின்பால்கருமா
முறிமேனிகாட்டுதியோ ? * மேல்நாள்—அறியோமை
என்செய்வானெண்ணினாய் ? கண்ணனே ! * ஈதுரையாய்
என்செய்தாலென்படோம்யாம் ? (௬)

யாமேயருவினையோம்சேயோம் * என்னெஞ்சினார்
தாமே அணுக்கராய்ச்சார்ந்தொழிந்தார் * —பூமேய
செம்மாதை நின்மார்வில்சேர்வித்து * பாரிடந்த
அம்மா ! நின்பாதத்தருகு. (௭)

அருகும்சுவடும் தெரிவுணரோம் * அன்பே
பெருகும்மிக இதுவென் ? பேசீர் * —பருகலாம்
பண்புடையீர் ! பாரளந்தீர் ! பாவியேம்கண்காணபரிய *
நுண்புடையீர் ! நும்மைநுமக்கு. (அ)

நுமக்கடியோமென்றென்று நொந்துரைத்தென் ? * மாலார்
தமக்கு அவர்தாம்சார்வரியரானால் * —எமக்கினி
யாதானும் ஆகிடுகாண்நெஞ்சே ! * அவர்திறத்தே
யாதானும்சிந்தித்திரு. (௯)

இருநால்வர் ஈரைந்தின்மேலொருவர் * எட்டோ
டொருநால்வர் ஓரிருவரல்லால் * —திருமாற்கு
யாமார் ? வணக்கமார் ? ஏபாவம்நன்னெஞ்சே ! *
நாமாமிகவுடையோம்நாழ். (௧௦)

நாழாலமர்முயன்ற வல்லரக்கனின்னுயிரை *
வாழாவகைவலிதல்நின்வலியே * —ஆழாத
பாரும்நீவானும்நீ காலும்நீதீயும்நீ *
நீரும்நீயாய்நின்றநீ. (௧௧)

நீயன்றேயாழ்துயரில் வீழ்விப்பான்நின்றுழன்றாய் ? *
போயொன்றுசொல்லியென் ? போநெஞ்சே ! * —நீயென்றும்
காழ்த்துபதேசந்தரினும் கைக்கொள்ளாய் * கண்ணன்தாள்
வாழ்த்துவதேகண்டாய்வழக்கு. (௧௨)

வழக்கொடுமாறுகொளன்று, அடியார்வேண்ட *
இழக்கவும்காண்டுமிறைவ !— இழப்புண்டே ? *
எம்மாட்கொண்டாகிலும் யான்வேண்ட, என்கண்கள் *
தம்மால்காட்டுன்மேனிச்சாய். (கங)

சாயால்கரியானை உள்ளறியாராய்நெஞ்சே ! *
பேயார்முலைகொடுத்தார்பேயராய் *—நீயார்? போய்த்
தேம்பூண்சுவைத்து ஊனறிந்தறிந்தும் * தீவினையாம்
பாம்பார்வாய்க்கைநீட்டல்பார்த்தி. (கச)

பார்த்தோரெதிரிதா நெஞ்சே ! * படுதுயரம்
பேர்த்தோதப் பீடழிவாம்பேச்சில்லை *—ஆர்த்துஓதம்
தம்மேனி தாள்தடவத்தாம்கிடந்து * தம்முடைய
செம்மேனிக்கண்வளர்வார்சீர். (கரு)

சீரால்பிறந்து சிறப்பால்வளராது *
பேர்வாமனுகாக்கால் பேராளா ! *—மார்பாரப்
புல்கிநீயுண்டுமிழ்ந்த பூமிநீரேற்பரிதே? *
சொல்லுநீயாமறியச்சூழ்ந்து. (கசு)

சூழ்ந்தடியார்வேண்டினக்கால் தோன்றுதுவிட்டாலும் *
வாழ்ந்திடுவர்பின்னும்தம்வாய்திறவார் *—சூழ்ந்தெங்கும்
வாள்வரைகள்போலரக்கன் வன்தலைகள்தாமிடிய *
தாள்வரைவில்லேந்தினார்தாம். (கள)

தாம்பாலாப்புண்டாலும் அத்தழும்புதானிளக *
பாம்பாலாப்புண்டுபாடுற்றாலும் *—சோம்பாதுஇப்
பல்லுருவையெல்லாம் படர்வித்தவித்தா ! * உன்
தொல்லுருவையாரறிவார் ? சொல்லு. (கஅ)

சொல்லிற்குறையில்லை சூதறியாநெஞ்சமே ! *
எல்லிப்பகலென்னாதுஎப்போதும் *—தொல்லைக்கண்
மாத்தானைக்கெல்லாம் ஓரைவரையேமாறாக *
காத்தானைக்காண்டும்நீகாண். (கக)

காணப்புகிலறிவு கைக்கொண்டநல்நெஞ்சம் *
நாணப்படுமன்றே? நாம்பேசில் *—மாணி
யுருவாகிக்கொண்டு உலகம்நீரேற்றசீரான் *
திருவாகம்தீண்டிற்றுச்சென்று. (உ0)

சென்றங்குவெந்நரகில் சேராமல்காப்பதற்கு *
இன்றிங்கென்னெஞ்சாலிடுக்குண்ட *—அன்றங்குப்
பாருருவும் பார்வளைத்தநீருருவும்கண்புதைய *
காருருவன்தான்நிமிர்த்தகால். (உக)

காலேபொதத்திரிந்து கத்துவரா † மிந்நாள் *
மாலார்குடிபுகுந்தாரென்மனத்தே * —மேலால்
தருக்குமிடம்பாட்டினொடும் வல்வினையார்தாம் * வீற்
றிருக்குமிடம்காணாதிளைத்து. (உஉ)

இளைப்பாயிளையாப்பாய் நெஞ்சமே! சொன்னேன் *
இளைக்கநமன்தமர்கள் பற்றி—இளைப்பெய்த *
நாய்தந்துமோதாமல் நல்குவான்நல்காப்பான் *
தாய்தந்தையெவ்வுயிர்க்குந்தான். (உங)

தானேதனித்தோன்றல தன்னளப்பொன்றில்லாதான் *
தானேபிறர்கட்கும்தற்றோன்றல் *—தானே
இளைக்கில்பார்கீழ்மேலாம் மீண்டமைப்பானானால் *
அளக்கிற்பார்பாரின்மேலார்? (உச)

ஆரானுமாதானுஞ்செய்ய * அகலிடத்தை
ஆராய்ந்து அதுதிருத்தலாவதே? *—சீரார்
மனத்தலை வன்துன்பத்தைமாற்றினேன் * வானோ
ரினத்தலைவன்கண்ணனால்யான். (உரு)

யானும்என்னெஞ்சும் இசைந்தொழிந்தோம் * வல்வினையைக்
கானும்மலையும் புகக்கடிவான் *—தானோர்
இருளன்னமாமேனி எம்மிறையார்தந்த *
அருளென்னுந்தண்டாலடித்து. (உசு)

அடியால்படிகடந்தமுத்தோ? * அதன்றேல்
முடியால் விசும்பளந்தமுத்தோ? *—நெடியாய்!
செறிகழல்கள்தாள்நிமிர்த்துச் சென்றுலகமெல்லாம் *
அறிகிலமால்நீயளந்தவன்று. (உஎ)

அன்றேநம்கண்காணும் ஆழியான்காருருவம் *
இன்றேநாம்காணாதிருப்பதுவும் *—என்றேனும்
கட்கண்ணால் காணாதஅவ்வுருவை * நெஞ்சென்னும்
உட்கண்ணேல்காணுமுணர்ந்து. (உஅ)

† 'இனநாள்' என்பதும் பாடம்.

உணரவொருவர்க்கு எளியனே ? செவ்வே *
இணருந்துழாயலங்கலெந்தை *—உணரத்
தனக்கெளியரெவ்வளவர் அவ்வளவன் ஆனால் *
எனக்கெளியனெம்பெருமானிங்கு. (உ௯)

இங்கில்லை பண்டுபோல்வீற்றிருத்தல் * என்னுடைய
செங்கண்மால் சீர்க்கும்சிறிதுள்ளம் *—அங்கே
மடியடக்கிநிற்பதனில் வல்வினையார்தாம் * மீண்டு
அடியெடுப்பதன்றோவழகு ? (௩0)

அழகுமறிவோமாய் † வல்வினையைத்தீர்ப்பான் *
நிழலுமடிதாறுமானோம் *—சுழலக்
குடங்கள் தலைமீதெடுத்துக்கொண்டாடி * அன்றுஅத்
தடங்கடலைமேயார்தமக்கு. (௩க)

தமக்கடிமைவேண்டுவார் தாமோதரனார்
தமக்கு * அடிமைசெய்யென்றால் செய்யாது *—‡ எமக்கென்று
தாம்செய்யுந்தீவினைக்கே தாழ்வுறுவர்நெஞ்சினார் *
யாம்செய்வதிவ்விடத்திங்குயாது ? (௩உ)

யாதானுமொன்றறியில் தன்னுகக்கிலென்கொலோ ? *
யாதானும்நேர்ந்தனுகாவாறுதான் * —யாதானும்
தேறுமாசெய்யா அசுரர்களை * நேமியால்
பாறுபாறாக்கினான்பால். (௩௩)

பாலாழி நீகிடக்கும்பண்பை * யாம்கேட்டேயும்
காலாழும்நெஞ்சழியும் கண்சுழலும் *—நீலாழிச்
சோதியாய் ! ஆதியாய் ! தொல்வினையெம்பால்கடியும் *
நீதியாய் ! நிற்சார்ந்துநின்று (௩௪)

நின்றுமிருந்தும் கிடந்துந்திரிதந்தும் *
ஒன்றுமோஆற்றான் என்னெஞ்சகலான் * —அன்றங்கை
வன்புடையால்பொன்பெயரோன் வாய்தகர்த்துமார்விடந்தான் *
அன்புடையனன்றேயவன் ? (௩௫)

அவனுமிவனுமுவனும் * மற்றும்உம்ப
ரவனும் அவனென்றிராதே *—அவனும்
அவனேயெனத்தெளிந்து கண்ணனுக்கேதீர்ந்தால் *
அவனேஎவனேலுமாம். (௩௬)

† 'வல்வினையும்' என்பதும் பாடம். ‡ 'எமக்கென்றும்' என்று ஓதுவர்.

ஆமாறறிவுடையராவது அரிதன்றே? *
நாமேயதுவுடையோம் நன்னெஞ்சே! *—பூமேய்
மதுகரமே தண்துழாய்மாலாரை * வாழ்த்தாம்
அதுகரமேயன்பாலமை. (௩௭)

அமைக்கும்பொழுதுண்டே? ஆராயில்நெஞ்சே! *
இமைக்கும்பொழுதும் இடைச்சி—குமைத்திறங்கள் *
ஏசியேயாயினும் ஈன்துழாய்மாயனையே *
பேசியேபோக்காய்பிழை. (௩௮)

பிழைக்கமுயன்றோமோ? நெஞ்சமே! பேசாய் *
தழைக்குந்துழாய்மார்வன்தன்னை *—அழைத்துஒருகால்
போயுபகாரம் பொலியக்கொள்ளாது * அவன்புகழே
வாயுபகாரங்கொண்டவாய்ப்பு. (௩௯)

வாய்ப்போஇதுவொப்ப மற்றில்லைவாநெஞ்சே! *
† போய்ப்போஒய்வெந்நரகில்பூவியேல் *—தீப்பால
பேய்த்தாய் உயிர்கலாய்ப்பாலுண்டு * அவளுயிரை
மாய்த்தானை வாழ்த்தேவலி. (௪0)

வலியமெனநினைந்து வந்தெதிர்ந்தமல்லர் *
வலியமுடியிடியவாங்கி *—வலியநின்
பொன்னாழிக்கையால் புடைத்திடுதிகீளாதே *
பல்நாளும்நிற்குமிப்பார். (௪௧)

பாருண்டான்பாருமிழ்ந்தான் பாரிடந்தான்பாரளந்தான் *
பாரிடமுன்படைத்தானென்பரால் *—பாரிட
மாவானும் தானானல்ஆரிடமே? * மற்றொருவர்க்கு
ஆவான்புகாவாலவை. (௪௨)

அவயமெனநினைந்து வந்தசுரர்பாலே *
நவையைநளிர்விப்பான்தன்னை *—கவையில்
மனத்துயரவைத்திருந்து வாழ்த்தாதார்க்குண்டோ? *
மனத்துயரைமாய்க்கும்வகை. (௪௩)

வகைசேர்ந்தநல்நெஞ்சும் நாவுடையவாயும் *
மிகவாய்ந்துவீழாவெனிலும் *—மிகவாய்ந்து
மாலைத்தாம் வாழ்த்தாதிருப்பர்இதுவன்றே? *
மேலைத்தாம்செய்யும்வினை. (௪௪)

† ‘போய்ப்போய்’ எனவும் ஓதுவரேனும் அது வெண்டளைக்குச் சேராது.

வினையார்தரமுயலும் வெம்மையையஞ்சி *
தினையாஞ்சிறிதளவுஞ்செல்ல—நினையாது *
வாசகத்தாலேத்தினேன் வானோர்தொழுதிறைஞ்சும் *
நாயகத்தான்பொன்னடிக்கள்நான். (சரு)

நான்கூறும் கூற்றாவது இத்தனையே * நாள்நாளும்
தேங்கோத நீருருவன்செங்கண்மால் *—நீங்காத
மாகதியாம்வெந்நரகில் சேராமல்காப்பதற்கு *
நீகதியாநெஞ்சே! நினை. (சகா)

நினைத்திறைஞ்சிமானிடவர் ஒன்றிரப்பரென்றே *
நினைத்திடவும்வேண்டாநீநேரே *—நினைத்திறைஞ்ச
எவ்வளவர்எவ்விடத்தோர்மாலே! * அதுதானும்
எவ்வளவுமுண்டோ? எமக்கு. (சஎ)

எமக்குயாம்விண்ணாட்டுக்கு உச்சமதாம்வீட்டை *
அமைத்திருந்தோம் அஃதன்றேயாமாறு? *—அமைப்பொலிந்த
மென்தோளிகாரணமா வெங்கோட்டேறேழுடனே *
கொன்றானையேமனத்துக்கொண்டு. (சஅ)

கொண்டல்தான்மால்வரைதான் மாகடல்தான்கூரிருள்தான் *
வண்டறுப்பூவைதான் மற்றுத்தான் *—கண்டநாள்
காருருவம் காண்தோறும்நெஞ்சோடும் * கண்ணனார்
பேருருவென்றெம்மைப்பிரிந்து. (சக)

பிரிந்தொன்றநோக்காது தம்முடையபின்னே *
திரிந்துழலுஞ்சிந்தனையார்தம்மை *—புரிந்தொருகால்
ஆவா! எனவிரங்கார் அந்தோ! வலிதேகொல்? *
மாவாய்பிளந்தார்மனம். (ருO)

மனமாளுமோரைவர் வன்குறும்பர்தம்மை *
சினமாள்வித்துஓரிடத்தேசேர்த்து *—புனமேய
தண்துழாயானடியைத்தான் காணுமஃதன்றே? *
வண்டுழாஞ்சீரார்க்குமாண்பு. (ருக)

மாண்பாவித்துஅந்நான்றுமண்ணிரந்தான் * மாயவள்நஞ்சு
ஊண்பாவித்துண்டானது ஒருருவம் *—காண்பான்நங்
கண்ணவா மற்றொன்றுகாணுறா * சீர்பரவாது
உண்ணவாய்தானுறுமோவொன்று? (ருஉ)

ஒன்றுண்டுசெங்கண்மால் ! யானுரைப்பது * உன்னடியார்க்கு
என்செய்வனென்றேயிருத்திநீ *—நின்புகழில்
வைகும் தம்சிந்தையிலும்மற்றினிதோ ? * நீயவர்க்கு
வைகுந்தமென்றருளும்வான். (ருங)

வானோ ? மறிகடலோ ? மாருதமோ ? தீயகமோ ? *
கானோ ? ஒருங்கிற்றும்கண்டிலமால் *—ஆனீன்ற
கன்றுயரத்தாமெறிந்து காயுதிர்த்தார்தாள்பணிந்தோம் *
வன்துயரையாவா ! மருங்கு. (ருச)

மருங்கோதம்மோதும் மணிநாகணையார் *
மருங்கேவரவரியரேலும் *—ஒருங்கே
எமக்கவரைக்காணலாம் எப்பொழுதுமுள்ளால் *
மனக்கவலைதீர்ப்பார்வரவு. (ருரு)

வரவாறொன்றில்லையால் வாழ்வினிதால் * எல்லே !
ஒருவாறு ஒருவன்புகாவாறு *—உருமாறும்
ஆயவர்தாம்சேயவர்தாம் அன்றுலகந்தாயவர்தாம் *
மாயவர்தாம்காட்டும்வழி. (ருசு)

வழித்தங்குவல்வினையை மாற்றானோ ? நெஞ்சே ! *
தழீஇக்கொண்டு போரவுணன்தன்னை *—சுழித்தெங்கும்
தாழ்விடங்கள்பற்றிப் புலால்வெள்ளந்தானுகள *
வாழ்வடங்கமார்விடந்தமால். (ருஎ)

மாலே ! படிச்சோதிமாற்றேல் * இனியுனது
பாலேபோல் சீரிற்பழுத்தொழிந்தேன் *—மேலால்
பிறப்பின்மைபெற்று அடிக்கீழ்க்குற்றேவலன்று *
மறப்பின்மை யான்வேண்டும்மாடு. (ருஅ)

மாடே வரப்பெறுவராமென்றே * வல்வினையார்
காடானுமாதானும் கைக்கொள்ளார் *—ஊடேபோய்ப்
பேரோதம்சிந்து திரைக்கண்வளரும் * பேராளன்
பேரோதச்சிந்திக்கப்பேர்ந்து. (ருகூ)

பேர்ந்தொன்றுநோக்காது பின்னிற்பாய்நில்லாப்பாய் *
ஈன்துழாய்மாயனையே என்னெஞ்சே ! *—பேர்ந்தெங்கும்
தொல்லைமாவெந்நரகில் சேராமல்காப்பதற்கு *
இல்லைகாண் மற்றோரிறை. (சுo)

இறைமுறையான்சேவடிமேல் மண்ணளந்தவந்நாள் *
மறைமுறையால் வானாடர்கூடி *—முறைமுறையின்
தாதிலகு பூத்தெளித்தாலொவ்வாதே? * தாழ்விசும்பின்
மீதிலகித்தான்கிடக்கும்மீன். (சுக)

மீனென்னுங்கம்பில் வெறியென்னும்வெள்ளிவேய் *
வானென்னும் கேடிலாவான்குடைக்கு *—தானோர்
மணிக்காம்புபோல் நிமிர்ந்துமண்ணளந்தான் * நங்கள்
பிணிக்காம்பெருமருந்துபின். (சுஉ)

பின்துரக்கும்காற் † றிழந்த சூற்கொண்டல்பேர்ந்தும்போய்—*
வன்திரைக்கண் வந்தணைந்தவாய்மைத்தே *—அன்று
திருச்செய்யநேமியான் தீயரக்கிமூக்கும் *
‡ பருச்செவியுமீர்ந்தபரன். (சுங)

பரனாமவனாதல் பாவிப்பராகில் *
உரனாலொருமூன்றுபோதும் *—மரமேழன்று
எய்தானைப் புள்ளின்வாய்கீண்டானையே * அமரர்
கைதான்தொழாவேகலந்து. (சுச)

கலந்துநலியும் கடுந்துயரைநெஞ்சே! *
மலங்கவடித்துமடிப்பான் *—விலங்கல்போல்
தொல்மாலைக்கேசவனை நாரணனைமாதவனை *
சொல்மாலையெப்பொழுதும்சூட்டு. (சுரு)

சூட்டாயநேமியான் தொல்லரக்கனின்னுயிரை *
மாட்டேதுயரிழைத்தமாயவனை *—ஈட்ட
வெறிகொண்ட தண்துழாய்வேதியனை * நெஞ்சே!
அறிகண்டாய்சொன்னேனது. (சுசா)

அதுவோநன்றென்று அங்கமருலகோவேண்டில் *
அதுவோபொருளில்லையன்றே? *—அதுவொழிந்து
மண்ணின்றாள்வேனெனிலும் கூடும்மடநெஞ்சே! *
கண்ணன்தாள்வாழ்த்துவதேகல். (சுஎ)

கல்லும்கனைகடலும் வைகுந்தவானாடும் *
புல்லென்றொழிந்தனகொல்? ஏபாவம்! *—வெல்ல
நெடியான்நிறங்கரியான் உள்புகுந்துநீங்கான் *
அடியேனதுள்ளத்தகம். (சுஅ)

---

† 'இழிந்த' என்பதும் பாடம். ‡ 'பரிச்செவியும்' என்பதும் பாடம்.

அகஞ்சிவந்தகண்ணினராய் வல்வினையராவார் *
முகஞ்சிதைவராமன்றே? முக்கி *—மிகுந்திருமால்
சீர்க்கடலையுள்பொதிந்த சிந்தனையேன்தன்னை *
ஆர்க்குஅடலாம்செவ்வேயடர்த்து? (௬௯)

அடர்பொன்முடியானை ஆயிரம்பேரானை *
சுடர்கொள்சுடராழியானை *—இடர்கடியும்
மாதாபிதுவாக வைத்தேனெனதுள்ளே *
யாதாகில்யாதேயினி? (௭௦)

இனிநின்றுநின்பெருமை யானுரைப்பதென்னே? *
தனிநின்றசார்விலாமூர்த்தி! *—பனிநீர்
அகத்துலவு செஞ்சடையானாகத்தான் * நான்கு
முகத்தான்நின்றுந்திமுதல். (௭௧)

முதலாந்திருவுருவம் மூன்றென்பர் * ஒன்றே
முதலாகும் மூன்றுக்குமென்பர் *—முதல்வா!
நிகரிலகுகாருருவா! நின்னகத்ததன்றே? *
புகரிலகுதாமரையின்பூ. (௭௨)

பூவையும்காயாவும் நீலமும்பூக்கின்ற *
காவிமலரென்றும் காண்தோறும் *—பாவியேன்
மெல்லாவி மெய்மிகவேபூரிக்கும் * அவ்வவை
யெல்லாம்பிரானுருவேயென்று. (௭௩)

என்றுமொருநாள் ஒழியாமையானிரந்தால் *
ஒன்றும்இரங்காருருக்காட்டார் *—குன்று
குடையாக ஆகாத்தகோவலனார் * நெஞ்சே!
புடைதான்பெரிதேபுவி. (௭௪)

புவியுமிருவிசும்பும் நின்னகத்த * நீயென்
செவியின்வழிபுகுந்து என்னுள்ளாய் *—அவிவின்றி
யான்பெரியன்நீபெரியை என்பதனையாரறிவார்? *
ஊன்பருகுநேமியாய்! உள்ளு. (௭௫)

உள்ளிலுமுள்ளந்தடிக்கும் வினைப்படலம் *
விள்ள, விழித்துன்னைமெய்யுற்றால் *—உள்ள
உலகளவும் யானும்உளனாவனென்கொலோ? *
உலகளந்தமூர்த்தி! உரை. (௭௬)

உரைக்கிலோர்சுற்றத்தார் உற்றுரென்றூரே? *
இரைக்குங்கடல்கிடந்தவெந்தாய்! *—உரைப்பெல்லாம்
நின்னன்றி மற்றிலேன்கண்டாய் * எனதுயிர்க்குஓர்
சொல்நன்றியாகுந்துணை. (எஎ)

துணைநாள்பெருங்கிளையும் தொல்குலமும் * சுற்றத்
திணைநாளும் இன்புடைத்தாமேலும் *—கணைநாணில்
ஓவாத்தொழிற்சார்ங்கன் தொல்சீரைநல்நெஞ்சே! *
ஓவாதவூணாகவுண். (எஅ)

உள்நாட்டுத்தேசன்றே! ஊழ்வினையையஞ்சுமே? *
விண்ணாட்டையொன்றாகமெச்சுமே? *—மண்ணாட்டில்
ஆராகி எவ்விழிவிற்றானாலும் * ஆழியங்கைப்
பேராயற்காளாம்பிறப்பு. (எகூ)

பிறப்பிறப்புமூப்புப் பிணிதுறந்து * பின்னும்
இறக்கவுமின்புடைத்தாமேலும் *—மறப்பெல்லாம்
ஏதமே என்றல்லால்எண்ணுவனே? * மண்ணளந்தான்
பாதமேயேத்தாப்பகல். (அ0)

பகலிராவென்பதுவும் பாவியாது * எம்மை
இகல்செய்து இருபொழுதுமாள்வர் *—தகவாத்
தொழும்பரிவர்சீர்க்கும் துணையிலரென்றோரார் *
செழும்பரவைமேயார்தெரிந்து. (அக)

தெரிந்துணர்வொன்றின்மையால் தீவினையேன் * வாளா
இருந்தொழிந்தேன் கீழ்நாள்களெல்லாம் *—கரந்துருவின்
அம்மானை அந்நான்றுபின்தொடர்ந்த * ஆழியங்கை
அம்மானையேத்தாதயர்த்து. (அஉ)

அயர்ப்பாயயராப்பாய் நெஞ்சமே! சொன்னேன் *
உயப்போம்நெறியிதுவேகண்டாய் *—செயற்பால
வல்லவேசெய்கிறுதி நெஞ்சமே! அஞ்சினேன் *
மல்லர்நாள்வவ்வினனைவாழ்த்து. (அங)

வாழ்த்தியவனடியைப் பூப்புனைந்து * நின்தலையைத்
தாழ்த்திருகைகூப்பென்றால் கூப்பாத—பாழ்த்தவிதி! *
எங்குற்றாயென்றவனை ஏத்தாதென்னெஞ்சமே! *
தங்கத்தானாமேலுந்தங்கு.

தங்காமுயற்றியவாய்த் தாழ்விசும்பின்மீதுபாய்ந்து *
எங்கேபுக்கு எத்தவஞ்செய்திட்டனகொல்? *—பொங்கோதத்
தண்ணம்பால்வேலைவாய்க் கண்வளரும் * என்னுடைய
கண்ணன்பால் நல்நிறங்கொள்கார். (அரு)

↓↓ கார்கலந்தமேனியான் கைகலந்தவாழியான் *
பார்கலந்தவல்வயிற்றான் பாம்பணையான் *- சீர்கலந்த
சொல்நினைந்துபோக்காரேல் சூழ்வினையினாழ்துயரை *
என்னினைந்துபோக்குவரிப்போது? (அசு)

↓↓ இப்போதுமின்னும் இனிச்சிறிதுநின்றாலும் *
எப்போதுமீதேசொல் என்னெஞ்சே! *—எப்போதும்
கைகழலாநேமியான் நம்மேல்வினைகடிவான் *
மொய்கழலேயேத்தமுயல். (அஎ)

தரசுஅடிவரவு:—முயற்றி நாழ் சென்று அழகு வலியம் மனமாளும் இறை-
முறையான் இனி பகல் ஒருபேர்.

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.



திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# திருவெழுகூற்றிருக்கை.

(எம்பெருமானார் அருளிச்செய்தது.)

வாழிபரகாலன் வாழிகலிகன்றி *
வாழிகுறையலூர்வாழ்வேந்தன் *—வாழியரோ
மாயோனைவாள்வலியால மந்திரங்கொள்மங்கையர்கோன் *
தூயோன்சுடர்மானவேல்.

† சீரார்திருவெழுகூற்றிருக்கையென்னுஞ்செந்தமிழால் *
ஆராவமுதன்குடந்தைப்பிரான்தனடியிணைக்கீழ் *
ஏரார்மறைப்பொருளெல்லாமெடுத்திவ்வுலகுய்யவே *
சோராமற்சொன்ன அருண்மாரிபாதம் துணைநமக்கே.

ஆசிரியப்பா. (தேசியாகம் - ஆதிதாளம்.)

†† ஒருபேருந்தியிருமலர்த்தவிசில் *
ஒருமுறையயனையீன்றனை * ஒருமுறை
இருசுடர்மீதினிலியங்கா * மும்மதி
ளிலங்கையிருகாலவளைய * ஒருசிலை
யொன்றியவீரெயிற்றழல்வாய்வாளியி
னட்டனை * மூவடிநானிலம்வேண்டி *
முப்புரிநூலொடுமானுரியிலங்கு
மார்வினின் * இருபிறப்பொருமாணாகி *
ஒருமுறையீரடிமூவுலகளந்தனை *
நால்திசைநடுங்கஅஞ்சிறைப்பறவை
யேறி * நால்வாய்மும்மதத்திருசெவி
யொருதனிவேழத்தரந்தையை * ஒருநாள்
இருநீர்மடுவுள்தீர்த்தனை * முத்தீ
நான்மறைஐவகைவேள்வி * அறுதொழில்
அந்தணர்வணங்குந்தன்மையை * ஐம்புலன்
அகத்தினுள்செறுத்து * நான்குடனடக்கி
முக்குணத்திரண்டவையகற்றி * ஒன்றினில்

† இத்தனியன் மிருதியாக வழங்குவதில்லை.

ஒன்றினின்று * ஆங்கிருபிறப்பறுப்போர்
அறியுந்தன்மையை * முக்கண்நாற்றோள்
ஐவாயரவோடு * ஆறுபொதிசடையோன்
அறிவருந்தன்மைப்பெருமையுள்நின்றனை *
ஏழுலகெயிற்றினில்கொண்டனை * கூறிய
அறுசுவைப்பயனுமாயினை * சுடர்விடும்
ஐம்படையங்கையுளமர்ந்தனை * சுந்தர
நாற்றோள்முந்நீர்வண்ண! * நின்னீரடி
ஒன்றியமனத்தால் * ஒருமதிமுகத்து
மங்கையரிருவரும் † மலரன * அங்கையின்
முப்பொழுதும்வருடஅறிதுயிலமர்ந்தனை *
நெறிமுறைநால்வகைவருணமுமாயினை *
மேதகும்ஐம்பெரும்பூதமும்நீயே *
அறுபதமுரலுங்கூந்தல்காரணம் *
ஏழ்விடையடங்கச்செற்றனை * அறுவகைச்
சமயமும்அறிவருநிலையினை * ஐம்பா
லோதியையாகத்திருத்தினை * அறமுதல
நான்கவையாய்மூர்த்திமூன்றாய் *
இருவகைப்பயனாய்ஒன்றாய்விரிந்து
நின்றனை * குன்றாமதுமலர்ச்சோலை
வண்கொடிப்படப்பை * வருபுனற்பொன்னி
மாமணியலைக்கும் * செந்நெலொண்கழனித
திகழ்வனமுடுத்த * கற்போர்புரிசைக்
கனகமாளிகை * நிமிர்கொடிவிசும்பில்
இளம்பிறைதுவக்கும் * ↓↓ செலவம்மல்குதென்
திருக்குடந்தை * அந்தணர்மந்திரமொழியுடன்
வணங்க * ஆடரவமளியிலறிதுயில்
அமர்ந்தபரம! * நின்னடியிணைபணிவன்
வருமிடர் *அகலமாற்றோவினையே. (௧)

கட்டளைக்கலித்துறை.

† இடங்கொண்டநெஞ்சத்திணங்கிக்கிடப்பன * என்றும்பொன்னித்
தடங்கொண்டதாமரைசூழும்மலர்ந்ததண்பூங்குடந்தை *
விடங்கொண்டவெண்பல் கருந்துத்திசெங்கண்தழலுமிழ்வாய் *
படங்கொண்டபாம்பணைப்பள்ளிகொண்டான்திருப்பாதங்களே.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



---

*'மாற்றோனே' எனவும் ஓதுவர்.
இப்பாட்டு கம்பநாட்டாழ்வார் செய்தருளியதென்பர்.

வாழி பரகாலன் வாழி கலிகன்றி
வாழி குறையலூர் வாழ்வேந்தன் - வாழியரோ
மாயோனைவாள்வலியால்மந்திரங்கொள்மங்கையர்கோன்
தூயோன் சுடர்மான வேல்.

ஆரா வமுதன் குடந்தைப் பிரானற னடியிணைக்கீழ்
ஏரார் மறைப்பொருளெல்லா மெடுத்திவ் வுலகுய்யவே
சோராமற் சொன்ன வருள்மாரி பாதந் துணைநமக்கே.]



| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | க ஒரு பேருந்தி | உ இரு மலர்த்தவிசில் | க ஒரு முறையயனை யீன்றனை | | | | | |
| | | | | க ஒரு முறை | உ இருசுடர் மீதினி லியங்கா | ௩ மும் மதிளி லங்கை | உ இரு கால் வளைய | க ஒரு சிலை | | | | |
| | | | க ஒன்றிய | உ ஈரெயி ற்றழலவா ய்வாளியி னட்டனை | ௩ மூவ் அடி | ௪ நானிலம் வேண்டி | ௩ முப்புரி நூலொடு மானுரியி லங்குமார் வினில் | உ இரு பிறப்பு | க ஒரு மாணாகி | | | |
| | | க ஒரு முறை | உ ஈர் அடி | ௩ மூவ் உலகளந்தனை | ௪ நால திசை நடுங்க | ௫ அஞ்சிறைப் பறவை யேறி | ௪ நால் வாய் | ௩ மும் மதத்து | உ இரு செவி | க ஒருதனி வேழத்து அரந்தையை | | |
| | க ஒரு நாள் | உ இருநீர்ம டுவுள்தீ ர்த்தனை | ௩ முத்தீ | ௪ நான் மறை | ௫ ஐவகை வேள்வி | ௬ அறுதொழி லந்தண ர்வணங்குந் தன்மையை | ௫ ஐம்புலன கத்தினுள் செறுத்து | ௪ நான்குடன டக்கி | ௩ முக்குணத்து | உ இரண்டகற்றி | க ஒன்றினில் | |
| க ஒன்றி நின்று ஆங்கு | உ இருபிற ப்பறுப் போர்அறி யுந்தன் மையை | ௩ முக் கண் | ௪ நால் தோள் | ௫ ஐவாய் அரவோடு | ௬ ஆறுபொதி சடையோ னறிவருந் தன்மைப்பெ ருமையுள் நின்றனை | ௭ ஏழுல கெயிற்ற தினில்கொ ண்டனை; கூறிய | ௬ அறுசு வைப்பய னுமாயினை சுடர் விடும் | ௫ ஐம்படை அங்கை யுள்அமர் ந்தனை; சுந்தர | ௪ நால் தோள் | ௩ முந்நீர் வண்ண நின் | உ ஈர் அடி | க ஒன்றிய மனத்தால் |
| க ஒரு மதி முகத்து மங்கையர் | உ இருவரும் மலரன அங்கையில் | ௩ முப்பொ ழுதும் வரு டஅறிதுயி லமர்ந்த னை;நெறிமுறை | ௪ நால்வ கை வருண மும் ஆயினை மேதகும் | ௫ ஐம் பெரு ம்பூதமும நீயே | ௬ அறு பதம்முர லும் கூந் தல்காரணம் | ௭ ஏழ்விடை அடங்க ச்செற் றனை | ௬ அறுவ கைச்சம யமும்அறி வருநிலை யினை | ௫ ஐம்பா லோதியை ஆகத்திரு த்தினை; அறமுதல் | ௪ நான்கவை யாய்மூர்த்தி | ௩ மூன் றாய் | உ இரு வகைப் பயனாய் | க ஒன்றாய் விரிந்து நின்றனை; |

குன்றுமுதுமலர்ச்சோலை
வண்கொடிப்படப்பை * வருபுனற்பொன்னி
மாமணியலைக்கும் * செந்நெல்லொண்கழனித்
திகழ்வனமுடுத்த * கற்போர்ப்புரிசைக்
கனக மாளிகை * நிமிர்கொடிவிசும்பி
லிளம்பிறைதுவக்கும் * செல்வம்மல்குதென்
திருக்குடந்தை * அந்தணர்மந்திரமொழியுடன்
வணங்க * ஆடரவமளியிலறிது பி
லமர்ந்தபரம * நின்னடியிணைபணிவன்
வருமிடரகலமாற்றோவினையே.

கிடங்கொண்டவேழத்தினைசிக்கிடப்பன
என்றும்பொன்னித்
தடங்கொண்டதாமரைசூழும்மலர்ந்த
தண்பூங்குடந்தை
விடங்கொண்டவெண்பற்கருந்துத்திச்
செங்கண்தழலுமிழ்வாய்ப்
படங்கொண்டபாம்பணைபள்ளி
கொண்டான்திருப்பாதங்களே

## திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க ஒருமதி முகத்து மங்கையர் | உ இருவரும் மலரன அங்கையில் | ங-முப்பொழுது வருட அறிதுயில் அமர்ந்தனை; நெறிமுறை | ச-நால்வகை வருணமும் ஆயினை; மேதகும் | ரு ஐம்பெரும் பூதமும் நீயே. | சா-அறுபதம் முரலுங் கூந்தல் காரணம் | எ ஏழ்விடை அடங்கச் செற்றனை, | சா-அறுவகைச் சமயமும் அறிவரு நிலையினை | ரு-ஐம்பால் ஓதியை ஆகத்திருத்தினை; அறமுதல் | ச நான்கு அவையாய் மூர்த்தி | ங மூன்றாய் | உ இருவகைப் பயனாய் | க ஒன்றாய் விரிந்து நின்றனை |
| க ஒன்றி நின்று ஆங்கு | உ இருபிறப்பு அறுப்போர் அறியும் தன்மையை; | ங முக்கண் | ச நால் தோள் | ரு ஐவாய் அரவோடு | சா-ஆறுபொதி சடையோன் அறிவருந் தன்மைப் பெருமையுள் நின்றனை; | எ ஏழுலகு எயிற்றினில் கொண்டனை, கூறிய | சா-அறுசுவைப் பயனும் ஆயினை, சுடர்விடும் | ரு-ஐம்படை அங்கையுள் அமர்ந்தனை, சுந்தர | ச நால் தோள் | ங முந்நீர் வண்ண நின் | உ ஈர் அடி | க ஒன்றிய மனத்தால |
| | க ஒரு நாள் | உ இருநீர் மடுவுள் தீர்த்தனை | ங முத்தீ | ச நால் மறை | ரு ஐவகை வேள்வி | சா-அறுதொழில் அந்தணர் வணங்குந் தன்மையை | ரு ஐம்புலன் அகத்தினுள் செறுத்து | ச நான்கு உடன் அடக்கி | ங முக் குணத்து | உ இரண்டவை அகற்றி | க ஒன்றினில | |
| | | க ஒரு முறை | உ ஈர் அடி | ங மூவ் உலகளந்தனை; | ச நால் திசை நடுங்க | ரு அஞ்சிறைப் பறவையேறி | ச நால் வாய | ங மும் மதத்து | உ இரு செவி | க ஒருதனி வேழத்து அரந்தையை | | |
| | | | க ஒன்றிய | உ-ஈரெயிற்று அழல்வாய் வாளியின் அட்டனை; | ங மூவ் அடி | ச நானிலம் வேண்டி | ங-முப்புரி நூலொடு மானுரி யிலங்கு மார்வினில் | உ இரு பிறப்பு | க ஒரு மாணாகி | | | |
| | | | | க ஒரு முறை | உ இருசுடர் மீதினில் இயங்கா | ங மும்மதில் இலங்கை | உ இருகால் வளைய | க ஒரு சிலை | | | | |
| | | | | | க ஒரு பேருந்தி | உ இருமலர்த் தவிசில் | க ஒருமுறை அயனை யீன்றனை | | | | | |

**எழுகூற்றிருக்கையின் இலக்கணம்.**

**"மாலை மாற்றே சக்கரஞ் சுழி குளம் - ஏக பாத மெழுகூற் றிருக்கை - வந்தன பிறவும் வகுத்தினத் துரைப்பான் - அந்தமில் கேள்வி யாசிரி யன்னே" என்னும் அமிர்தசாகரனூர் சூத்திரமும்,**

**"கோதி லேழறை யாக்கிக் குறு மக்கள் - முன்னின்றும் புக்கும் போந்**

எழுகூற்றிருக்கையாவது - ஏழுவரி மூன்றறை முதலொன்றற் கொன் றிரட்டறைமேற்பட முறையாகக்கீறி முறையே மக்கள்போக்கும் போந்து

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# சிறிய திருமடல்.

## தனியன்.

(பிள்ளைதிருநறையூரரையர் அருளிச்செய்தது.)

நேரிசைவெண்பா.

முள்ளிச்செழு † மலரோதாரான்முளைமதியம் *
கொள்ளிக்கென் னுள்ளங்கொதியாமே *—வள்ளல்
திருவாளன்சீர்க்கலியன்கார்க்கலியைவெட்டி *
மருவாளன்தந்தான்மடல்.

---

கலிவெண்பா.

(நாதநாமக்ரியைராகம் - ஆதிதாளம்.)

‡‡ காரார்வரைக்கொங்கை கண்ணார்கடலுடுக்கை *
சீரார்சுடர்ச்சுட்டி செங்கலுழிப்பேராற்று * (௧)
பேராரமார்பின் பெருமாமழைக்கூந்தல் *
நீராரவேலி நிலமங்கையென்னும் * இப் (௨)
பாரோர்சொலப்பட்ட மூன்றன்றே *—அம்மூன்றும்
ஆராயில்தானே அறம்பொருளின்பமென்று * (௩)
ஆராரிவற்றினிடையதனையெய்துவார் *
சீராரிருகலையுமெய்துவர் *—சிக்கெனமற்று (௪)
ஆரானுமுண்டென்பா ரென்பதுதானதுவும் *
ஓராமையன்றே? உலகத்தார்சொல்லுஞ்சொல் * (௫)
ஓராமையாமாறு அதுவுரைக்கேன் ‡ கேளாமே *
காரார்புரவியேழ் பூண்டதனியாழி * (௬)
தேரார்நிறைகதிரோன் மண்டலத்தைக்கீண்டுபுக்கு *
ஆராவமுதமங்கெய்தி *—அதினின்றும் (௭)
வாராதொழிவதொன்றுண்டே? * அதுநிற்க,
ஏரார்முயல்விட்டுக் காக்கைப்பின்போவதே? * (௮)
ஏராரிளமுலையீர்! என்தனக்குற்றதுதான் *
காரார்குழலெடுத்துக்கட்டி *—கதிர்முலையை (௯)

---

† 'மலரோர்', 'மலரோன்' என்பன பாடபேதங்கள்.
‡ 'கேளாமோ' என்று சிலர்.

வாராரவிக்கி மணிமேகலைதிருத்தி *
ஆராரயில்வேற்கண் அஞ்சனத்தின்நீறணிந்து * (௧0)
சீரார்செழும்பந்து கொண்டடியாநின்றேன்நான் *
நீரார்கமலம்போல் செங்கண்மாலென்றொருவன் * (௧௧)
பாரோர்களெல்லாம் மகிழப்பறைகறங்க *
சீரார்குடமிரண்டேந்தி *—செழுந்தெருவே (௧௨)
ஆராரெனச்சொல்லி ஆடுமதுகண்டு *
ஏராரிளமுலையார் † என்னையருமெல்லாரும் * (௧௩)
வாராயோவென்றார்க்குச் சென்றேனென்வல்வினையால் *
காரார்மணிநிறமும் கைவளையும்காணேன்நான் * (௧௪)
ஆரானுஞ்சொல்லிற்றுங்கொள்ளேன் *—அறிவழிந்து
தீராவுடம்பொடு பேதுறுவேன்கண்டிரங்கி * (௧௫)
ஏரார்கிளிக்கிளவி எம்மனைதான்வந்தென்னை *
சீரார்செழும்புழுதிக்காப்பிட்டு *—செங்குறிஞ்சித் (௧௬)
தாரார்நறுமாலை சாத்தற்கு * தான்பின்னும்
நேராதனவொன்றுநேர்ந்தாள் *—அதனாலும் (௧௭)
தீராதுஎன்சிந்தைநோய் தீராதுஎன்பேதுறவு *
வாராதுமாமை அதுகண்டுமற்றாங்கே * (௧௮)
ஆரானுமூதறியும் அம்மனைமார்சொல்லுவார் *
பாரோர்சொலப்படும் கட்டுப்படுத்திரேல் * (௧௯)
ஆரானுமெய்ப்படுவனென்றார் *—அதுகேட்டுக்
காரார்குழற்கொண்டைக் கட்டுவிச்சிகட்டேறி * (௨0)
சீரார்சுளகில் சிலநெல்பிடித்தெறியா *
வேராவிதிர்விதிரா மெய்சிலிராக்கைமோவா * (௨௧)
பேராயிரமுடையானென்றாள் *—பேர்த்தேயும்,
காரார்திருமேனிகாட்டினாள் * கையதுவும் (௨௨)
சீரார்வலம்புரியேயென்றாள் *—திருத்துழாய்த்
தாரார்நறுமாலை கட்டுரைத்தாள்கட்டுரையா * (௨௩)
நீரேதுமஞ்சேன்மின் நும்மகளைநோய்செய்தான் *
ஆரானுமல்லன் அறிந்தேன்அவனைநான் * (௨௪)
கூரார்வேற்கண்ணீர் ! உமக்கறியக்கூறுகேனோ? *
ஆரால்இவ்வையம் அடியளப்புண்டதுதான்? * (௨௫)

† 'அன்னையர்' என்பது சிலர்பாடம்.

ஆரால்இலங்கை பொடிபொடியாவீழ்ந்தது? * மற்று
ஆராலேகன்மாரிகாத்தது தான்? *—ஆழிநீர் (உ௬)
ஆரால்கடைந்திடப்பட்டது? * அவன்காண்மின்
ஊராநிரைமேய்த்து உலகெல்லாமுண்டுமிழ்ந்தும் * (உ௭)
ஆராததன்மையனாய் ஆங்கொருநாளாய்ப்பாடி *
சீரார்கலையல்குல் சீரடிசெந்துவர்வாய் * (உ௮)
வாரார்வனமுலையாள் மத்தாரப்பற்றிக்கொண்டு *
ஏராரிடைநோவ எத்தனையோர்போதுமாய் * (உ௯)
சீரார்தயிர்கடைந்து வெண்ணெய்திரண்டதனை *
வேரார்நுதல்மடவாள் வேறோர்கலத்திட்டு * (௩௦)
நாராருறியேற்றி நன்கமையவைத்ததனை *
போரார்வேற்கண்மடவாள் போந்தனையும்பொய்யுறக்கம் * (௩௧)
ஓராதவன்போல் உறங்கியறிவுற்று *
தாரார்தடந்தோள்கள் உள்ளளவும்கைநீட்டி * (௩௨)
ஆராதவெண்ணெய்விழுங்கி *—அருகிருந்த
மோரார்குடமுருட்டி முன்கிடந்ததானத்தே * (௩௩)
ஓராதவன்போல்கிடந்தானைக் கண்டவளும் *
வாராத்தான்வைத்ததுகாணாள் *—வயிறடித்திங்கு (௩௪)
ஆரார்புகுதுவார்? ஐயரிவரல்லால் *
நீராமிதுசெய்தீர் என்றோர்நெடுங்கயிற்றால் * (௩௫)
ஊரார்களெல்லாரும் காணவுரலோடே *
தீராவெகுளியளாய்ச் சிக்கெனவார்த்தடிப்ப * (௩௬)
ஆராவயிற்றினோடு ஆற்றாதான் *—அன்றியும்,
நீரார்நெடுங்கயத்தைச் சென்றலைக்கநின்றுரப்பி * (௩௭)
ஓராயிரம்பணவெங் கோவியல்நாகத்தை *
வாராவெனக்கென்று மற்றதன்மத்தகத்து * (௩௮)
சீரார்திருவடியால்பாய்ந்தான் *—தன்சீதைக்கு
நேராவனென்று ஓர்நிசாசரிதான்வந்தாளை * (௩௯)
கூரார்ந்தவாளால் கொடிமூக்குங்காதிரண்டும் *
ஈராவிடுத்து அவட்குமூத்தோனை *—வெங்நரகம் (௪௦)
சேராவகையே சிலைகுனித்தான் * செந்துவர்வாய்
வாரார்வனமுலையாள் வைதேவிகாரணமா * (௪௧)

ஏரார்தடந்தோளிராவணனை *—ஈரைந்து
சீரார்சிரமறுத்துச் செற்றுகந்தசெங்கண்மால் * (௪௨)
போரார்நெடுவேலோன் பொன்பெயரோனாகத்தை *
கூரார்ந்தவள்ளுகிரால்கீண்டு *—குடல்மாலை (௪௩)
சீரார்திருமார்பின்மேல்கட்டி * செங்குருதி
சோராக்கிடந்தானைக் குங்குமத்தோள்கொட்டி * (௪௪)
ஆராவெழுந்தான் அரியுருவாய் *—அன்றியும்,
பேர்வாமனனாகியகாலத்து * மூவடிமண் (௪௫)
தாராயெனக்கென்று வேண்டிச்சலத்தினால் *
நீரேற்றுஉலகெல்லாம் நின்றளந்தான்மாவலியை * (௪௬)
ஆராதபோரில் அசுரர்களும்தானுமாய் *
காரார்வரைநட்டு நாகம்கயிறாக * (௪௭)
பேராமல்தாங்கிக்கடைந்தான் *—திருத்துழாய்த்
தாரார்ந்தமார்வன் தடமால்வரைபோலும் * (௪௮)
போரானைபொய்கைவாய்க் கோட்பட்டுநின்றலறி *
நீரார்மலர்க்கமலங்கொண்டு ஓர்நெடுங்கையால் * (௪௯)
நாராயணா! ஓ! மணிவண்ணா! நாகணையாய்! *
வாராய்என்னாரிடரைநீக்காய் * —எனவெகுண்டு (௫௦)
தீராதசீற்றத்தால் சென்றிரண்டுகூறாக *
ஈராவதனையிடர்கடிந்தான் எம்பெருமான் * (௫௧)
பேராயிரமுடையான் பேய்ப்பெண்டீர்! நும்மகளை *
தீராநோய்செய்தான் எனவுரைத்தாள் *—சிக்கெனமற்று (௫௨)
ஆரானுமல்லாமைகேட்டு எங்களம்மனையும் *
போரார்வேற்கண்ணீர்! அவனாகில்பூந்துழாய் * (௫௩)
தாராதொழியுமே? தன்னடிச்சியல்லளே? * மற்று
ஆரானுமல்லனேயென்றொழிந்தாள் *—நானவனைக் (௫௪)
காரார்திருமேனி கண்டதுவேகாரணமா *
பேராப்பிதற்றாத் திரிதருவன் *—பின்னையும் (௫௫)
ஈராப்புகுதலும் இவ்வுடலைத்தண்வாடை *
சோராமறுக்கும் வகையறியேன் *—சூழ்குழலார் (௫௬)
ஆரானுமேசுவ ரென்னுமதன்பழியை *
வாராமல்காப்பதற்கு வாளாவிருந்தொழிந்தேன் * (௫௭)

வாராய்மடநெஞ்சே! வந்து *—மணிவண்ணன்
சீரார்திருத்துழாய்மாலை நமக்கருளி * (௫௮)
தாரான்தருமென்று இரண்டத்திலொன்றதனை *
ஆரானுமொன்றாதார் கேளாமேசொன்னக்கால் * (௫௯)
ஆராயுமேலும் பணிகேட்டுஅதன்றெனிலும் *
போராதொழியாதே போந்திடுநீயென்றேற்கு * (௬௦)
காரார்கடல்வண்ணன் பின்போனநெஞ்சமும் *
வாராதே என்னைமறந்ததுதான் *—வல்வினையேன் (௬௧)
ஊராருகப்பதேயாயினேன் * மற்றெனக்கிங்கு
ஆராய்வாரில்லை அழல்வாய்மெழுகுபோல் * (௬௨)
நீராயுருகும் என்னாவி *—நெடுங்கண்கள்
ஊராருறங்கிலும் தானுறங்கா * உத்தமன்தன் (௬௩)
பேராயினவே பிதற்றுவன் *—பின்னையும்
காரார்கடல்போலும் காமத்தராயினார் * (௬௪)
ஆரேபொல்லாமையறிவார்? * அதுநிற்க,
ஆரானுமாதானும் அல்லளவள்காணீர் * (௬௫)
வாரார்வனமுலை வாசவதத்தையென்று *
ஆரானுஞ்சொல்லப்படுவாள் *—அவளும்தன் (௬௬)
பேராயமெல்லாம் ஒழியப் பெருந்தெருவே *
தாரார்தடந்தோள் தளைக்காலன்பின்போனாள் * (௬௭)
ஊராரிகழ்ந்திடப்பட்டாளே? *—மற்றெனக்கிங்கு
ஆரானும்கற்பிப்பார்நாயகரே? * நானவனைக் (௬௮)
காரார்திருமேனி காணுமளவும்போய் *
↓↓ சீரார்திருவேங்கடமே திருக்கோவ (௬௯)
லூரே * மதிட்கச்சியூரகமே பேரகமே *
பேராமருதிறுத்தான் வெள்ளறையேவெஃகாவே * (௭௦)
பேராலிதண்கால் நறையூர்திருப்புலியூர் *
↓↓ ஆராமம்சூழ்ந்த அரங்கம் *—கணமங்கை (௭௧)
காரார்மணிநிறக் கண்ணனூர்விண்ணகரம் *
சீரார்கணபுரம் சேறைதிருவழுந்தூர் * (௭௨)
காரார்குடந்தை கடிகைகடல்மல்லை *
ஏரார்பொழில்சூழ் இடவெந்தைநீர்மலை * (௭௩)

சீராரும்மாலிருஞ்சோலை திருமோகூர் *—
பாரோர்புகழும் வதரிவடமதுரை * (எ௪)
ஊராயவெல்லாம் ஒழியாமேநானவனை *
ஓரானைகொம்பொசித்து ஓரானைகோள்விடுத்த (எ௫)
சீரானை * செங்கணெடியானைத் தேன்துழாய்த்
தாரானை * தாமரைபோற்கண்ணனை *—எண்ணருஞ்சீர்ப்(எ௬)
பேராயிரமும்பிதற்றி *—‡‡ பெருந்தெருவே
ஊரார்இகழிலும் ஊராதொழியேன்நான் * (எ௭)
வாரார்பூம்பெண்ணைமடல். † (எ௭௨)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



நேரிசைவெண்பா.

‡ ஊராதொழியேன் உலகறியவொண்ணுதலீர் ! *
சீரார்முலைத்தடங்கள்சேரளவும் *—பாரெல்லாம்
அன்றோங்கிநின்றளந்தான் நின்றதிருநறையூர் *
மன்றோங்கவூர்வன்மடல்.



† சிறியதிருமடலும் பெரியதிருமடலும் யாப்பிலக்கணத்தின்படி தனித்தனி ஒருபாட்டு. ‡ இது கம்பர் பாடிய தென்பர்.

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# பெரிய திருமடல்.

## தனியன்.

(பிள்ளைதிருநறையூரரையர் அருளிச்செய்தது.)

நேரிசைவெண்பா.

பொன்னுலகில்வானவரும் † பூமகளும்போற்றிசெய்யும் *
நல்நுதலீர்! நம்பிநறையூரர் *—மன்னுலகில்
என்னிலைமைகண்டும் இரங்காரேயாமாகில் *
மன்னுமடலூர்வன்வந்து.

கலிவெண்பா. (நாதநாமக்ரியைராகம் - ஆதிதாளம்.)

↓↓ மன்னியபல்பொறிசேர் ஆயிரவாய்வாளரவின் *
சென்னிமணிக்குடுமித் தெய்வச்சுடர்நடுவுள் * (க)
மன்னியநாகத்தணைமேல் ஓர்மாமலைபோல் *
மின்னுமணிமகரகுண்டலங்கள் வில்வீச * (உ)
துன்னியதாரகையின் பேரொளிசேராகாசம் *
என்னும்விதானத்தின்கீழால் *—இருசுடரை (ங)
மன்னும்விளக்காகவேற்றி * மறிகடலும்
பன்னுதிரைக்கவரிவீச *—நிலமங்கை (ச)
தன்னைமுனநாள் அளவிட்டதாமரைபோல் *
மன்னியசேவடியை வானியங்குதாரகைமீன் * (ரு)
என்னும்மலர்ப்பிணையலேய்ந்த *—மழைக்கூந்தல்
தென்னனுயர்பொருப்பும் தெய்வவடமலையும் * (சு)
என்னுமிவையே முலையாவடிவமைந்த *
அன்னநடையவணங்கே *—அடியிணையைத் (எ)
தன்னுடையவங்கைகளால் தான்தடவத்தான்கிடந்து * ஓர்
உன்னியயோகத்து உறக்கந்தலைக்கொண்ட (அ)
பின்னை * தன்னுபிவலயத்துப் பேரொளிசேர் *
மன்னியதாமரை மாமலர்பூத்து * அம்மலர்மேல் (கூ)
முன்னந்திசைமுகனைத் தான்படைக்க * மற்றவனும்
முன்னம்படைத்தனன்நான்மறைகள் *—அம்மறைதான் (௧0)

† 'பூமகனும்' என்றும் பாடம்.

மன்னுமறம்பொருளின்பம் வீடென்றுஉலகில் *
நன்னெறிமேம்பட்டன நான்கன்றே *—நான்கினிலும் (கக)
பின்னையது பின்னைப்பெயர்தருமென்பது * ஓர்
தொன்னெறியைவேண்டுவார் வீழ்கனியுமூழிலையும் * (கஉ)
என்னுமிவையேநுகர்ந்து உடலம்தாம்வருந்தி *
துன்னுமிலைக்குரம்பைத்துஞ்சியும் *—வெஞ்சுடரோன் (கங)
மன்னுமழல்நுகர்ந்தும் வண்தடத்தினுட்கிடந்தும் *
இன்னதோர்தன்மையராய் ஈங்குடலம்விட்டெழுந்து * (கச)
தொன்னெறிக்கண்சென்றா ரெனப்படுஞ்சொல்லல்லால் *
இன்னதோர்காலத்து இனையாரிதுபெற்றார் * (கரு)
என்னவுங்கேட்டறிவதில்லை *—உளதென்னில்
மன்னுங்கடுங்கதிரோன் மண்டலத்தின்நன்னடுவுள் * (கசு)
அன்னதோரில்லியினூடுபோய் *—வீடென்னும்
தொன்னெறிக்கண்சென்றாரைச்சொல்லுமின்கள்,சொல்லாதே*
அன்னதேபேசும் அறிவில்சிறுமனத்து * ஆங்
கன்னவரைக் கற்பிப்போம்யாமே *—அதுநிற்க, (கஅ)
முன்னம்நான்சொன்ன அறத்தின்வழிமுயன்ற *
அன்னவர்தாம்கண்டீர்கள் ஆயிரக்கண்வானவர்கோன் * (ககூ)
பொன்னகரம்புக்கமரர் † போற்றிசெப்ப *—பொங்கொளிசேர்
கொல்நவிலுங்கோளரிமாத் தான்சுமந்தகோலஞ்சேர் * (உ௦)
மன்னியசிங்காசனத்தின்மேல் *—வாள்நெடுங்கண்
கன்னியராலிட்ட கவரிப்பொதியவிழ்ந்து * ஆங் (உக)
கின்னிளம்பூந்தென்றலியங்க *—மருங்கிருந்த
மின்னனைய நுண்மருங்குல் மெல்லியலார்வெண்முறுவல் * (உஉ)
முன்னம்முகிழ்த்த முகிழ்நிலாவந்தரும்ப *
அன்னவர்தம்மானோக்க முண்டாங்கணிமலர்சேர் * (உங)
பொன்னியல்கற்பகத்தின் காடுடுத்தமாடெல்லாம் *
மன்னியமந்தாரம் பூத்தமதுத்திவலை * (உச)
இன்னிசைவண்டமரும் சோலைவாய்மாலைசேர் *
மன்னியமாமயில்போற்கூந்தல் * — மழைத்தடங்கண் (உரு)
மின்னிடையாரோடும் விளையாடிவேண்டிடத்து *
மன்னுமணித்தலத்து மாணிக்கமஞ்சரியின் * (உசு)

† 'போற்றிசைபப' என்று பாடாந்தரம்.

மின்னிழையொளிசேர் பளிங்குவிளிம்படுத்த *
மன்னும்பவளக்கால் செம்பொன்செய்மண்டபத்துள் * (உஎ)
அன்னநடைய அரம்பையர்தங்கைவளர்த்த *
இன்னிசையாழ்ப்பாடல்கேட் டின்புற்று *—இருவிசும்பில்(உஅ)
மன்னுமழைதவழும் வாணிலாநீள்மதிதோய் *
மின்னிழையொளிசேர் விசும்பூரும்மாளிகைமேல் * (உ௯)
மன்னுமணிவிளக்கைமாட்டி *—மழைக்கண்ணார்
பன்னுவிசித்திரமாப் பாப்படுத்தபள்ளிமேல் * (௩0)
துன்னியசாலேகம் சூழ்கதவம்தாள்திறப்ப *
அன்னமுழக்கநெரிந்துக்கவாள்நீலச் * (௩க)
சின்னநறுந்தாதுசூடி *—ஓர்மந்தாரம்
துன்னுநறுமலரால் தோள்கொட்டி * கற்பகத்தின் (௩உ)
மன்னுமலர்வாய் மணிவண்டுபின்தொடர *
இன்னிளம்பூந்தென்றல் புகுந்தீங்கிளமுலைமேல் * (௩௩)
நன்னறுஞ்சந்தனச்சேறு புலர்த்த *—தாங்கருஞ்சீர்
மின்னிடைமேல் கைவைத்திருந்தேந்திளமுலைமேல் * (௩ச)
பொன்னரும்பாரம்புலம்ப *—அகங்குழைந்தாங்கு
இன்னவுருவின் இமையாத்தடங்கண்ணார் * (௩ரு)
அன்னவர்தம்மானோக்கமுண்டு ஆங்கணிமுறுவல் *
இன்னமுதம் மாந்தியிருப்பர் *—இதுவன்றே (௩சு)
அன்னவறத்தின் பயனாவது * ஒண்பொருளும்
அன்னதிறத்ததே யாதலால் *—காமத்தின் (௩எ)
மன்னும்வழிமுறையே நிற்றும்நாம் * மானோக்கின்
அன்னநடையாரலரேச ஆடவர்மேல் * (௩அ)
மன்னுமடலூரா ரென்பதோர்வாசகமும் *
தென்னுரையில் கேட்டறிவதுண்டு *—அதனையாம்தெளியோம்
மன்னும்வடநெறியேவேண்டினோம் * வேண்டாதார்
தென்னன்பொதியில் செழுஞ்சந்தனக்குழம்பின் * (ச0)
அன்னதோர்தன்மையறியாதார் *—ஆயன்வேய்
இன்னிசையோசைக்கு இரங்காதார் * மால்விடையின் (சக)
மன்னுமணிபுலம்பவாடாதார் *—பெண்ணைமேல்
பின்னும்அவ்வன்றிற்பேடைவாய்ச் சிறுகுரலுக்கு * (சஉ)

உன்னியுடலுருகிநையாதார் * —உம்பர்வாய்த்
துன்னுமதியுகுத்த தூநிலாநீள்நெருப்பில் * (௪௩)
தம்முடலம்வேவத் தளராதார் *—காமவேள்
மன்னுஞ்சிலைவாய் மலர்வாளிகோத்தெய்ய * (௪௪)
பொன்னெடுவீதிபுகாதார் * —தம்பூவணைமேல்
சின்னமலர்க்குழலும் அல்குலும்மென்முலையும் * (௪௫)
இன்னிளவாடைதடவத் தாம்கண்துயிலும் *
பொன்னனையார் பின்னுந்திருவுறுக *—போர்வேந்தன் (௪௬)
தன்னுடையதாதை பணியாலரசொழிந்து *
பொன்னகரம் பின்னேபுலம்ப, வலங்கொண்டு * (௪௭)
மன்னும்வளநாடு கைவிட்டு *—மாதிரங்கள்
மின்னுருவில்விண்தேர் திரிந்துவெளிப்பட்டு * (௪௮)
† கல்நிறைந்துதீய்ந்து கழையுடைந்து கால்சுழன்று *
பின்னுந்திரைவயிற்றுப் பேயேதிரிந்துலவா * (௪௯)
கொன்னவிலும்வெங்கானத்தூடு *—கொடுங்கதிரோன்
துன்னுவெயில்வறுத்த வெம்பரல்மேல்பஞ்சடியால் * (௫௦)
மன்னனிராமன்பின் வைதேவியென்றுரைக்கும் *
அன்னநடைய அணங்குநடந்திலளே ? * (௫௧)
பின்னும்கருநெடுங்கண் செவ்வாய்ப்பிணைநோக்கின் *
மின்னனையநுண்மருங்குல் வேகவதியென்றுரைக்கும் (௫௨)
கன்னி * தன் இன்னுயிராம் காதலனைக்காணாது *
தன்னுடையமுன்தோன்றல்கொண்டேகத் தான்சென்று* அங்கு
அன்னவனைநோக்காது அழித்துரப்பி * —வாளமருள்
கல்நவில்தோள்காளையைக் கைப்பிடித்துமீண்டும்போய் * (௫௪)
பொன்னவிலுமாகம் புணர்ந்திலளே ? *—பூங்கங்கை
முன்னம் புனல்பரக்கும் நல்நாடன் * மின்னாடும் (௫௫)
கொன்னவிலும்நீள்வேல் குருக்கள்குலமதலை *
தன்னிகரொன்றில்லாத வென்றித்தனஞ்சயனை * (௫௬)
பன்னாகராயன் மடப்பாவை *—பாவைதன்
மன்னியநாணச்சம் மடமென்றிவையகல * (௫௭)
தன்னுடைய கொங்கைமுகம்நெரிய *—தானவன்தன்
‡ பொன்வரையாகம் தழீஇக்கொண்டுபோய் * தனது (௫௮)

† 'கன்னிரைந்து' என்பதும் பாடம். ‡ 'பொன்னவரை' என்பதும் பாடம்.

நல்நகரம்புக்கு நயந்தினிதுவாழ்ந்ததுவும் *
முன்னுரையில் கேட்டறிவதில்லையே? *—சூழ்கடலுள் (௫௯)
பொன்னகரஞ்செற்ற புரந்தரனோடொக்கும் *
மன்னவன்வாணன் அவுணர்க்குவாள்வேந்தன் * (௬௰)
தன்னுடையபாவை உலகத்துத்தன்னொக்கும் *
கன்னியரையில்லாத காட்சியாள் *—தன்னுடைய (௬௧)
இன்னுயிர்த்தோழியால் எம்பெருமானீன்துழாய் *
மன்னுமணிவரைத்தோள் மாயவன் *—பாவியேன் (௬௨)
என்னையிதுவிளைத்த ஈரிரண்டுமால்வரைத்தோள் *
மன்னவன்தன்காதலனை மாயத்தாற்கொண்டுபோய் * (௬௩)
கன்னிதன்பால்வைக்க மற்றவனோடெத்தனையோ *
மன்னியபேரின்பமெய்தினாள் *—மற்றிவைதான் (௬௪)
என்னாலேகேட்டீரே? ஏழைகாள்! என்னுரைக்கேன்? *
மன்னுமலையரையன் பொற்பாவை *—வாள்நிலா (௬௫)
மின்னுமணிமுறுவல் செவ்வாயுமையென்னும் *
அன்னநடைய அணங்கு, நுடங்கிடைசேர் * (௬௬)
பொன்னுடம்புவாடப் புலனைந்தும்நொந்தகல *
தன்னுடையகூழைச் சடாபாரம்தான்தரித்து * ஆங்கு (௬௭)
அன்னவருந்தவத்தி னூடுபோய் *—ஆயிரந்தோள்
மன்னுகரதலங்கள் மட்டித்து * மாதிரங்கள் (௬௮)
மின்னியெரிவீச மேலெடுத்தசூழ்கழற்கால் *
பொன்னுலகமேழும் கடந்தும்பர்மேற்சிலும்ப * (௬௯)
மன்னுகுலவரையும் மாருதமும்தாரகையும் *
தன்னினுடனே சுழலச்சுழன்றாடும் * (௭௰)
கொல்நவிலும்மூவிலைவேல் கூத்தன்பொடியாடி *
அன்னவன்தன்பொன்னகலம் சென்றாங்கணைந்திலளே? * (௭௧)
பன்னியுரைக்குங்கால் பாரதமாம் *—பாவியேற்கு
என்னுறுநோய் யானுரைப்பக்கேண்மின் * இரும்பொழில்சூழ்
மன்னுமறையோர் திருநறையூர்மாமலைபோல் *
பொன்னியலுமாடக் கவாடம்கடந்துபுக்கு * (௭௩)
என்னுடையகண்களிப்ப நோக்கினேன் *—நோக்குதலும்
மன்னன்திருமார்பும் வாயுமடியிணையும் * (௭௪)

பன்னுகரதலமும் கண்களும் *—பங்கயத்தின்
பொன்னியல்காடு ஓர்மணிவரைமேல்பூத்ததுபோல் * (எரு)
மின்னியொளிபடைப்ப வீழ்நாணும்தோள்வளையும் *
மன்னியகுண்டலமும் ஆரமும்நீள்முடியும் * (எசு)
துன்னுவெயில்விரித்த சூளாமணியிமைப்ப *
மன்னுமரதகக் குன்றின்மருங்கே *—ஓர் (எஎ)
இன்னிளவஞ்சிக் கொடியொன்றுநின்றதுதான் *
அன்னமாய்மானாய் அணிமயிலாய்ஆங்கிடையே * (எ௮)
மின்னாய்இளவேயிரண்டாய் இணைச்செப்பாய் *
முன்னாயதொண்டையாய்க் கெண்டைக்குலமிரண்டாய் * (எ௯)
அன்னதிருவுருவம் நின்றதறியாதே *
என்னுடையநெஞ்சும் அறிவும்இனவளையும் * (௮0)
பொன்னியலும்மேகலையும் ஆங்கொழியப்போந்தேற்கு *
மன்னுமறிகடலுமார்க்கும் *—மதியுகுத்த (௮௧)
இன்னிலாவின்கதிரும் என்தனக்கேவெய்தாகும் *
தன்னுடையதன்மை தவிரத்தானென்கொலோ ? * (௮௨)
தென்னன்பொதியில் செழுஞ்சந்தின்தாதளைந்து *
மன்னிவ்வுலகை மனங்களிப்பவந்தியங்கும் * (௮௩)
இன்னிளம்பூந்தென்றலும் வீசுமெரியெனக்கே *
முன்னியபெண்ணைமேல் முள்முளரிக்கூட்டகத்து * (௮௪)
பின்னுமவ்வன்றில் பேடைவாய்ச்சிறுகுரலும் *
என்னுடையநெஞ்சுக்கு ஓரீர்வாளாம் என்செய்கேன் ? * (௮௫)
கல்நவிலதோள்காமன் கருப்புச்சிலைவளைய *
கொல்நவிலும்பூங்கணைகள் கோத்துப்பொதவணைந்து * (௮௬)
தன்னுடையதோள்கழியவாங்கி *—தமியேன்மேல்
என்னுடையநெஞ்சே இலக்காகவெய்கின்றான் * (௮எ)
பின்னிதனைக் † காப்பீர்தானில்லையே *—பேதையேன்
கல்நவிலுங்காட்டகத்து ஓர்வல்லிக்கடிமலரின் * (௮௮)
நல்நறுவாசம் மற்றாரானுமெய்தாமே *
மன்னும்வறுநிலத்து வாளாங்குகுத்ததுபோல் * (௮௯)
என்னுடையபெண்மையும் என்நலனும்என்முலையும் *
மன்னுமலர்மங்கைமைந்தன் *—கணபுரத்துப் (௯0)

---

† 'காப்பார்தாம்' என்று பாடமுண்டு.

பொன்மலைபோல்நின்றவன்தன் பொன்னகலம்தோயாவேல் *
என்னிவைதான்? வாளாஎனக்கேபொறையாகி * (௯௧)
முன்னிருந்துமூக்கின்று மூவாமைக்காப்பதோர் *
மன்னுமருந்தறிவா ரில்லையே? *—மால்விடையின் (௯௨)
துன்னுபிடரெருத்துத் தூக்குண்டு * வன்தொடரால்
கன்னியர்கண்மிளிரக் கட்டுண்டு * மாலைவாய்த் (௯௩)
தன்னுடையநாவொழியாது ஆடுந்தனிமணியின் *
இன்னிசையோசையும் வந்தென்செவிதனக்கே * (௯௪)
கொல்நவிலுமெஃகின் கொடிதாய்நெடிதாகும் *
என்னிதனைக்காக்குமா? சொல்லீர் *—இதுவிளைத்த (௯௫)
மன்னன்நறுந்துழாய்வாழ்மார்பன் * மாமதிகோள்
முன்னம்விடுத்த முகில்வண்ணன் *—காயாவின் (௯௬)
சின்னநறும்பூந் திகழ்வண்ணன் * வண்ணம்போல்
அன்னகடலை மலையிட்டணைகட்டி * (௯௭)
மன்னனிராவணனை மாமண்டுவெஞ்சமத்து *
பொன்முடிகள்பத்தும் புரளச்சரந்துரந்து * (௯௮)
தென்னுலகமேற்றுவித்த சேவகனை *—ஆயிரக்கண்
மன்னவன்வானமும் வானவர்தம்பொன்னுலகும் * (௯௯)
தன்னுடையதோள்வலியால் கைக்கொண்டதானவனை *
பின்னோரரியுருவமாகி எரிவிழித்து * (௧௦௦)
கொல்நவிலும்வெஞ்சமத்துக் கொல்லாதே *—வல்லாளன்
மன்னுமணிக்குஞ்சி பற்றிவரவீர்த்து * (௧௦௧)
தன்னுடையதாள்மேல் கிடாத்தி *—அவனுடைய
பொன்னகலம்வள்ளுகிரால் போழ்ந்துபுகழ்படைத்த * (௧௦௨)
மின்னிலங்குமாழிப் படைத்தடக்கைவீரனை *
மன்னிவ்வகலிடத்தை மாமுதுநீர்தான்விழுங்க * (௧௦௩)
பின்னுமோரேனமாய்ப் புக்குவளைமருப்பில் *
கொல்நவிலுங்கூர்நுதிமேல் வைத்தெடுத்தகூத்தனை * (௧௦௪)
மன்னும்வடமலையை மத்தாகமாசுணத்தால் *
மின்னுமிருசுடரும் விண்ணும்பிறங்கொளியும் * (௧௦௫)
தன்னினுடனேசுழல மலைதிரித்து * ஆங்கு
இன்னமுதம் வானவரையூட்டி * அவருடைய (௧௦௬)

மன்னுந்துயர்கடிந்த வள்ளலை *—மற்றன்றியும்,
தன்னுருவம்ஆருமறியாமல் தானங்கோர் * (கOஎ)
மன்னுங்குறளுருவின் மாணியாய் *—மாவலிதன்
பொன்னியலும்வேள்விக்கண் புக்கிருந்து*போர்வேந்தர் (கOஅ)
மன்னைமனங்கொள்ள வஞ்சித்துநெஞ்சுருக்கி *
என்னுடையபாதத்தால் யானளப்பமூவடிமண் * (கOகூ)
மன்னா! தருகென்று வாய்திறப்ப *—மற்றவனும்
என்னால்தரப்பட்டதென்றலுமே * அத்துணைக்கண் (ககO)
மின்னார்மணிமுடிபோய் விண்தடவ *—மேலெடுத்த
பொன்னார்கனைகழற்கால் ஏழுலகும்போய்க்கடந்து* அங்கு(கக்க)
ஒன்றாவசுரர் துளங்கச்செலநீட்டி *
மன்னிவ்வகலிடத்தை மாவலியைவஞ்சித்து * (ககஉ)
தன்னுலகமாக்குவித்த தாளானை *—தாமரைமேல்
மின்னிடையாள்நாயகனை விண்ணகருள்பொன்மலையை * (ககங)
பொன்னிமணிகொழிக்கும் பூங்குடந்தைப்போர்விடையை *
தென்னன்குறுங்குடியுள் செம்பவளக்குன்றினை * (ககச)
மன்னியதண்சேறை வள்ளலை *—மாமலர்மேல்
அன்னம்துயிலும் அணிநீர்வயலாலி * (ககரு)
என்னுடையின்னமுதை எவ்வுள்பெருமலையை *
கன்னிமதிள்சூழ் கணமங்கைக்கற்பகத்தை * (ககசு)
மின்னையிருசுடரை வெள்ளறையுள்கல்லறைமேற்
பொன்னை * மரதகத்தைப் புட்குழியெம்போரேற்றை * (ககஎ)
↓↓ மன்னு.மரங்கத்து எம்மாமணியை *—வல்லவாழ்ப்
பின்னைமணாளனைப் பேரில்பிறப்பிலியை * (ககஅ)
தொன்னீர்க்கடல்கிடந்த தோளாமணிச்சுடரை *
என்மனத்துமாலை இடவெந்தையீசனை * (கககூ)
மன்னுங்கடல்மல்லை மாயவனை *—வானவர்தம்
சென்னிமணிச்சுடரைத் தண்கால்திறல்வலியை * (கஉO)
தன்னைப்பிறரறியாத் தத்துவத்தைமுத்தினை *
அன்னத்தைமீனை அரியைஅருமறையை * (கஉக)
முன்னிவ்வுலகுண்ட மூர்த்தியை *—கோவலூர்
மன்னுமிடைகழி யெம்மாயவனை * பேயலறப் (கஉஉ)

பின்னும்முலையுண்ட பிள்ளையை *—அள்ளல்வாய்
அன்னமிரைதேர் அழுந்தூரெழுஞ்சுடரை * (கஉங)
தென்தில்லைச் சித்திரகூடத்துஎன்செல்வனை *—
மின்னிமழைதவழும் வேங்கடத்துஎம்வித்தகனை * (கஉச)
மன்னனை மாலிருஞ்சோலைமணாளனை *
கொல்நவிலுமாழிப்படையானை *—கோட்டியூர் (கஉரு)
அன்னவுருவினரியை * திருமெய்யத்து
இன்னமுதவெள்ளத்தை இந்தளூரந்தணனை * (கஉசு)
மன்னுமதிள்கச்சி வேளுக்கையாளரியை *
மன்னியபாடகத்து எம்மைந்தனை *—வெஃகாவில் (கஉஎ)
உன்னியயோகத்துறக்கத்தை * ஊரகத்துள்
அன்னவனை அட்டபுயகரத்தெம்மானேற்றை * (கஉஅ)
என்னைமனங்கவர்ந்தஈசனை *—வானவர்தம்
முன்னவனை மூழிக்களத்து † விளக்கினை * (கஉகூ)
அன்னவனை ஆதனூராண்டளக்குமையனை *
நென்னலையின்றினை நாளையை *—நீர்மலைமேல் (கங0)
மன்னுமறைநான்குமானானை * புல்லாணித்
தென்னன்தமிழை வடமொழியை * நாங்கூரில் (கஙக)
மன்னுமணிமாடக்கோயில்மணாளனை *
நல்நீர்த்தலைச்சங்கநாண்மதியை *—நான்வணங்கும் (கஙஉ)
கண்ணனைக் கண்ணபுரத்தானை * தென்னறையூர்
மன்னுமணிமாடக்கோயில்மணாளனை * (கஙங)
கல்நவில்தோள்காளையைக் கண்டாங்குக்கைதொழுது *
என்னிலைமையெல்லாம் அறிவித்தால்எம்பெருமான் * (கஙச)
தன்னருளுமாகமும் தாரானேல் *—தன்னைநான்
மின்னிடையார்சேரியிலும் வேதியர்கள்வாழ்விடத்தும் *(கஙரு)
தன்னடியார்முன்பும் தரணிமுழுதாளும் *
கொல்நவிலும்வேல்வேந்தர்கூட்டத்தும்நாட்டகத்தும் * (கஙசு)
தன்னிலைமையெல்லாம் அறிவிப்பன் *—தான்முனநாள்
மின்னிடையாய்ச்சியர்தம் சேரிக்களவின்கண் * (கஙஎ)
துன்னுபடல்திறந்துபுக்கு *—தயிர்வெண்ணெய்
தன்வயிறாரவிழுங்க * தொழுங்கயற்கண் (கஙஅ)

---

† 'வளத்தினை' என்பது சிலர் பாடம்.

மன்னுமடவோர்கள் பற்றியோர்வான்கயிற்றால் *
பின்னுமுரலோடு கட்டுண்டபெற்றிமையும் * (கஙகூ)

அன்னதோர்பூதமாய் ஆயர்விழவின்கண் *
துன்னுசகடத்தால் புக்கபெருஞ்சோற்றை * (கசo)

முன்னிருந்துமுற்றத்தான் துற்றியதெற்றெனவும் *
மன்னர்பெருஞ்சவையுள் வாழ்வேந்தர்தூதனாய் * (கசக)

தன்னையிகழ்ந்துரைப்பத் தான்முனநாள்சென்றதுவும் *
மன்னுபறைகறங்க மங்கையர்தம்கண்களிப்ப * (கசஉ)

கொன்னவிலுங்கூத்தனாய்ப் பெயர்த்துங்குடமாடி *
என்னிவன் ? என்னப்படுகின்றவீடறவும் * (கசங)

தென்னிலங்கையாட்டி அரக்கர்குலப்பாவை *
மன்னனிராவணன்தன் நல்தங்கை *—வாளெயிற்றுத் (கசச)

துன்னுசுடுசினத்துச் சூர்ப்பணகா சோர்வெய்தி *
பொன்னிறங்கொண்டு புலர்ந்தெழுந்தகாமத்தால் * (கசரு)

தன்னைநயந்தாளைத் தான்முனிந்துமூக்கரிந்து *
மன்னியதிண்ணெனவும், வாய்த்தமலைபோலும் * (கசசு)

தன்னிகரொன்றில்லாத தாடகையை*—↓↓மாமுனிக்காத்
தென்னுலகமேற்றுவித்த திண்திறலும் * மற்றிவைதான் (கசஎ)

உன்னியுலவாவுலகறிய வூர்வன்நான் *
முன்னிமுளைத்தெழுந்து ஓங்கியொளிபரந்த * (கசஅ)

மன்னியபூம்பெண்ணைமடல். (கசஅ½)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

நேரிசைவெண்பா.

† என்னிலைமையெல்லாம்அறிவித்தால் எம்பெருமான் *
தன்னருளுமாகமும்தாரானேல் *—பின்னைப்போய்
‡ ஒண்துறைநீர்வேலை உலகறியவூர்வன்நான் *
வண்டறைபூம்பெண்ணைமடல்.

[மண்ணிற்பொடிப்பூசி வண்டிரைக்கும்பூச்சூடி *
பெண்ணைமடல்பிடித்துப் § பின்னே *—அண்ணல்
திருநறையூர்நின்றபிரான் தேர்போகும்வீதி *
பொரு $ முறையால்செல்வம்புரிந்து.]

---

† இப்பாட்டுக் கம்பர் பாடியதென்பர். ‡ 'ஒண்டிரை' என்பதும் பாடம்.
§ 'பின்பின்னே', $ 'மறையாய்' என்பன பாடபேதங்கள்.

# இயற்பா.

| | | பாசுரம். | | | பாசுரம். |
|---|---|---|---|---|---|
| க. | முதல்திருவந்தாதி | க00 | சு. | திருவாசிரியம் | எ |
| உ. | இரண்டாந்திருவந்தாதி | க00 | எ | பெரியதிருவந்தாதி | அஎ |
| ங. | மூன்றாந்திருவந்தாதி | க00 | அ. | திருவெழுகூற்றிருக்கை | க |
| ச. | நான்முகன்திருவந்தாதி | கூசு | கூ. | சிறியதிருமடல் | எஎ½ |
| ரு. | திருவிருத்தம் | க00 | க0. | பெரியதிருமடல் | கசஅ½ |

ஆக, பாசுரம் - அகஎ

# இராமாநுசநூற்றந்தாதிச் செய்யுளகராதி.

# இயற்பாச் செய்யுளகராதி.



இயற்பாச் செய்யுளகராதி ஸம்பூர்ணம்.



ஸ்ரீ

# திருவரங்கத்தமுதனார் வைபவம்.

𑌶𑍍𑌰𑍀𑌨𑍇𑌹𑌸𑍍𑌤𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑍂𑌤𑌂 𑌶𑍍𑌰𑍀𑌰𑌂𑌗𑌾𑌮𑍃𑌤𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇 ।
𑌕𑌵𑌿𑌂𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌃 𑌕𑍂𑌰𑍇𑌶𑌪𑌦𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌂 ॥

శ్రీనేహస్తసముద్భూతం శ్రీరంగామృతమాశ్రయే।
కవింప్రపన్నగాయత్ర్యాః కూరేశపదసంశ్రితం॥

*மீநேஹஸ்தஸமுத்பூதம் ஸ்ரீரங்காம்ருதமாஶ்ரயே-*
*கவிம்ப்ரபந்நகாயத்ர்யாஃ கூரேஶபதஸம்ஶ்ரிதம்.*

இவ்வமுதனார், ஒரு பங்குனி மாஸத்தில் ஹஸ்தநக்ஷத்திரத்தில் வேயர் குடியில் திருவவதரித்து, திருவரங்கம்பெரியகோயிலில் இருந்ததுவே ஹேது வாக 'பெரியகோயில்நம்பி' என்று பிரசித்தராய் வாழ்ந்திருந்தார். இவர் ஸகல சாஸ்திரங்களையும் அதிகரித்து மிக வல்லவராய், தமக்குக் குலக்ரமமாகக்கிடைத்த ஸந்நிதிபௌரோஹித்யத்தையும் புராணபடநத்தையும் பெற்று மிகவும்ராஜஸராய்ச் செருக்குடன்வாழ்ந்துவரும்நாளிலே, லோகோத்தாரணார்த்தமாகத்திருவனந்தாழ்வானது திருவவதாரமாய்த் திருவவதரித்த எம்பெருமானார் தமதுநிர்ஹேதுககிருபாகடாக்ஷத்தாலே இவரைத் திருத்திப்பணிகொள்ளத் திருவுள்ளமாய்க் கூரத்தாழ்வானுக்குநியமிக்க, ஆழ்வானும் அவரை அநுவர்த்தித்து ஞானச்சுடர்கொளுத்தி எம்பெருமானார்திருவடிக்கீழ்ச் சேர்க்க, எம்பெருமானாரும் அவரைக் குளிரக் கடாக்ஷித்தருளி ஆழ்வானை ஆச்ரயிக்கும்படி நியமிக்க, அவரும் ஆழ்வானை ஆச்ரயித்துத் தத்வஹிதபுருஷார்த்தங்களை ஸந்தேஹ விபரீதமில்லாமல் தெளிந்து ஆத்மஆத்மீயஙகளை அந்தஆசார்யன்திருவடிகளிலே ஸமர்ப்பித்து ந்யஸ்தபரராயிருந்தார்.

பின்பு, இவர், ஸகலசாஸ்த்ரஸங்க்ரஹமான திருமந்த்ரத்தின் ஸாரார்த்தமும் மயர்வறமதிநலம்அருளப்பெற்ற ஆழ்வார்கள்அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களின் ஸாரார்த்தமும் நம்மாழ்வார் க்ருபாகடாக்ஷபாத்ரபூதரான மதுரகவியாழ்வார் தமது பேச்சுக்களாலும் அநுஷ்டாநங்களாலும் ப்ரகாசிப்பித்ததும் நம்மாழ்வாரால் நாதமுனிகளுக்கு உபதேசிக்கப்பெற்றதும் அந்நாதமுனிகள் முதல் ஓராண்வழியாய் வந்ததும் பரமரஹஸ்யமுமான சரமபர்வநிஷ்டையைத் தாம் நிரந்தரமாக அநுஸந்தித்துக்கொண்டிருக்கையாலே அது தமதுஉள்ளடங்காமையாலும், 'சேதநர்க்கு இவ்வர்த்தஜ்ஞாநம் ஸுலபமாக நெஞ்சிற்படும்படியாகவேணும்' என்ற தம்முடைய பரமக்ருபையாலும், தமது ஆசார்யரது ப்ரீதிக்கு ஹேதுவாகத் தமக்கு ப்ராசார்யரான ஸ்ரீ உடையவர் விஷயமாக ஒன்று இரண்டு பிரபந்தம் இட்டருளி அவற்றை எம்பெருமானார் ஸந்நிதியிற் கொண்டுபோய்வைக்க, எம்பெருமானாரும் அவற்றை அவிழ்த்து

முழுவதும் திருக்கண்சார்த்தியருளி அவை தமது திருவுள்ளத்துக்கு இசைந்திராமையாலே அவற்றைக் கிழித்துப்போகட்டு, அவரைப்பார்த்து 'உமக்கு ப்ரபந்தம் சொல்லவேணு மென்கிற நிர்ப்பந்தம் உண்டாகில், உமக்கு உத்தேச்யரான ஆழ்வானும் நமக்கு உத்தேச்யரான ஆழ்வார்களும் உகந்தருளின நிலங்களும் முதலியோர்களுடைய ஸம்பந்தம் தோற்றுமாறு ஒரு ப்ரபந்தம் செய்யும்' என்று நியமித்தருள, இவரும் 'அப்படியே செய்கிறேன்' என்று அந்த ஆஜ்ஞையைச் சிரஸாவகித்து 'எம்பெருமானார் திருவடிகளிலே ப்ரேமமுடையவர்களுக்கு ஸாவித்ரிபோலே இது நித்யம் அநுஸந்தாநவிஷயமாகவேணும்' என்று பாட்டுக்கள்தோறும் இராமாநுச னென்னுந் திருநாமத்தை யிட்டு நூற்றெட்டுப்பாட்டாக அருளிச்செய்து எம்பெருமானார்ஸந்நிதியிலே சேவித்து 'இத்தைத் திருச்செவிசார்த்தவேணும்' என்று பிரார்த்தித்து அநுமதிபெற்றுக் கூரத்தாழ்வான் முதலானோர் பேரோலக்கமாக இருக்கிற அங்குத்தானே இந்த பரபந்தத்தை விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமானார் மற்றை முதலிகளோடும் திருச்செவிசார்த்திச் சிரக்கம்பநம்செய்து போரவுகந்தருளி, தம்திருவடிகளில் ஸம்பந்தமுடையார்க்கெல்லாம் அந்தப்பிரபந்தத்தை அன்றுதொடங்கி என்றும் நித்யாநுஸந்தேயமாம்படி கற்பித்தருளியதல்லாமல், அவரதுவாக்கு அமுதவாக்காயிருந்தமையால் அவர்க்கு 'அமுதன்' என்ற திருநாமத்தையும் பரஸாதித்தருளி மிகவும் கடாக்ஷித்தருளினார். ஆகையால், அதுமுதல் பெரியகோயில்நம்பிக்கு 'ஸ்ரீரங்கத்தமுதனார்' என்று திருநாமமும், இதற்கு 'ப்ரபந்நகாயத்ரீ' என்று திருநாமமும் உண்டாயின.

பிறகு நமது பூர்வாசார்யர்கள் விஷயகௌரவத்தால் இந்தப்பிரபந்தத்தை ஆழ்வார்களருளிச்செயல்களோடு ஸமமாகச் சேர்த்தருளினார்கள்.

எந்தாதைகூரேச ரிணையடியோன் வாழியே
    எழில்மூங்கிற்குடிவிளங்க இங்குவந்தோன் வாழியே *
நந்தாமலெதிராசர்நலம்புகழ்வோன் வாழியே
    நம்மதுரகவிநிலையை நண்ணினான் வாழியே *
பைந்தாமவரங்கர்பதம்பற்றினான் வாழியே
    பங்குனியிலத்தநாள் பாருதித்தோன் வாழியே *
அந்தாதிநூற்றெட்டும் அருளினான் வாழியே
    அணியரங்கத்தமுதனா ரடியிணைகள் வாழியே.





திருவரங்கத்தமுதனார்

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த

ப்ரபந்நகாயத்ரி என்னும்

# இராமாநுச நூற்றந்தாதி.

தனியன்கள்.

(வேதப்பிரான்பட்டர் அருளிச்செய்தவை.)

ஒருவிகற்பநேரிசைவெண்பா.

முன்னைவினையகல மூங்கிற்குடியமுதன் *
பொன்னங்கழற்கமலப்போதிரண்டும் *—என்னுடைய
சென்னிக்கணியாகச்சேர்த்தினேன் * தென்புலத்தார்க்கு
என்னுக்கடவுடையேன்யான் ?

கட்டளைக்கலித்துறை.

நயந்தருபேரின்பமெல்லாம் † பழுதின்றிநண்ணினர்பால் *
சயந்தருகீர்த்தியிராமாநுசமுனிதாளிணைமேல் *
உயர்ந்தகுணத்துத்திருவரங்கத்தமுதோங்கும் * அன்பால்
இயம்பும்கலித்துறையந்தாதியோதவிசைநெஞ்சமே !

† 'பழுதென்றுநண்ணினன்பால்' என்பதும் பாடம்.

**உ

† [இனியென்குறைநமக்கு? எம்பெருமானார் ‡ திருநாமத்தால் *
முனிதந்தநூற்றெட்டுச்சாவித்திரியென்னுநுண்பொருளை *
கனிதந்தசெஞ்சொற்கலித்துறையந்தாதிபாடித்தந்தான் *
புனிதன்திருவரங்கத்தமுதாகியபுண்ணியனே.]

[அமுதனாரருளிச்செய்ததாவது அவரபிப்ராயத்தாலே அபிநிவேச முடைய ஆஸ்திகர் அருளிச்செய்ததாவது.]

சொல்லின்தொகைகொண்டு உனதடிப்போதுக்குத்தொண்டுசெய்யும்*
நல்லன்பரேத்தும்உன்நாமமெல்லாமென்தன்நாவினுள்ளே *
அல்லும்பகலுமமரும்படிநல்கு அறுசமயம்
வெல்லும்பரம! * இராமாநுச! இதுஎன்விண்ணப்பமே.

(பைரவிராகம் ரூபகதாளம்.)

↓↓ பூமன்னுமாது பொருந்தியமார்பன் * புகழ்மலிந்த
பாமன்னுமாறனடிபணிந்துய்ந்தவன் * பல்கலையோர்
தாம்மன்னவந்தவிராமாநுசன் சரணாரவிந்தம்
நாம்மன்னிவாழ * நெஞ்சே! சொல்லுவோம்அவன்நாமங்களே. (க)

(தோடிராகம் - ரூபகதாளம்.)

↓↓ கள்ளார்பொழில்தென்னரங்கன் * கமலப்பதங்கள்நெஞ்சிற்
கொள்ளா மனிசரைநீங்கி * குறையற்பிரானடிக்கீழ்
விள்ளாதவன்பனிராமாநுசன்மிக்கசீலமல்லால்
உள்ளாதுஎன்னெஞ்சு * ஒன்றறியேன்எனக்குற்றபேரியல்வே (உ)

பேரியல்நெஞ்சே! அடிபணிந்தேனுன்னை * பேய்ப்பிறவிப்
பூரியரோடுள்ள சுற்றம்புலத்தி * பொருவருஞ்சீர்
ஆரியன்செம்மையிராமாநுசமுனிக்கன்புசெய்யும்
சீரியபேறுடையார் * அடிக்கீழ்என்னைச்சேர்த்ததற்கே. (ங)

என்னைப்புவியில் ஒருபொருளாக்கி * மருள்சுரந்த
முன்னைப்பழவினைவேரறுத்து * ஊழிமுதல்வனையே
பன்னப்பணித்தவிராமாநுசன் பரன்பாதமுமென்
சென்னித்தரிக்கவைத்தான் * எனக்கேதுஞ்சிதைவில்லையே. (ச)

எனக்குற்றசெல்வ மிராமாநுசனென்று * இசையகில்லா
மனக்குற்றமாந்தர் பழிக்கில்புகழ் * அவன்மன்னியசீர்
தனக்குற்றவன்பரவன்திருநாமங்கள்சாற்றுமென்பா
இனக்குற்றங்காணகில்லார் * பத்தியேய்ந்த § இயல்விதென்றே. (ரு)

† இத்தனியன் மிகுதியும் வழங்குவதில்லை. ‡ 'திருப்பெயரால்' என்ற பாடம் வெண்டளைக்குச் சேரும். § 'இயலிதென்றே' என்றும் பாடம்

